
மோகன
சுந்தரம்
தமிழ்
ஜே. ஆர். ரங்கராஜுவின்
துப்பறியும் நவீனம்....
ஸ்ரீ சுகுமார் தயாரிப்பு..
டைரக்ஷன்.. A. T. கிருஷ்ணஸ்வாமி, B.A.,
M.S. PICTURES
RELEASE
விரைவில் வருகிறது!

# ரூ. 1000 இனும்

## தவராத தந்திர சாஸ்திரம்

இதைப் பொய் என்று உலகத்தில் எவரும் நிரூபிக்க முடியாது. கீழே காணும் தந்திர ரக்ஷைகளை உபயோகித்து உடனடியான சாதகத்தை தப் பெருங்கள்.

**பூரண திருப்தி ஏற்படாவிடின் பணம் வாபஸ் அளிக்கப்படும்.**

1. அன்பு தாயித்து—நீங்கள் காதலிப்பவரை அடைய உதவும்.
2. வியாபார தாயித்து — வியாபாரத்தில் நஷ்டம் அடைந்துவரும் நபர்கள் இதை உபயோகித்தால் உடனடியான சாதகங்கள் அடைய முடியும்.
3. ஆரோக்ய தாயித்து — உடல் நலமகுன்றி அவதிப் படுகிறவர்கள் இதை உபயோகித்தால் மூன்றே நாட்களில குணம காணலாம்.
4. வியாஜ்ய தாயித்து — எதிராளியை வசீகரம் செய்யலாம் வெகு சீக்கிரத்தில் சாதகம் ஏற்படும்.
5. மாணவர் தாயித்து — கல்வி பெறுகவும், பரீக்ஷையில் பாஸ் செய்யவும இந்த அற்புத ரக்ஷையை உபயோகியுங்கள
6. தாந்திரிக் கைக்குட்டை — தாயித்தை மடித்து பைக்குள் வைத்துக்கொள்ள இது உதவும். ரக்ஷையின் பலனை இம்முறை இரட்டிக்கிறது.

---

கீழ்கண்ட நற்சாக்ஷிப்பத்திரங்களை பொய் என்று நிரூபிப்பவர்களுக்கு
ரூ. 1000 இனும்

Mr. D. S மோனி, தர்பான், நேடால்.
உங்கள் ரக்ஷை எனக்கு ஆச்சரியமான பலன்களை கொடுக்கின்றது.

Mr. ஷஷின்கா சங்கரே, கட்டாக்.
நான உங்கள் நெ 1 ரக்ஷயை உபயோகித்ததில் எனக்குப் பூரண திருப்தி அளித்தது.

Mr. கிரெஸ்டி. 1, ஸைமின், பெஹரின்.
நான் உங்களுடைய ரக்ஷகளை உபயோகித்து பலன் பெற்றேன்.

---

| | | |
|---|---|---|
| விலை: தாயித்து ஒன்றுக்கு | ... | ரூ 2—0—0 |
| 6 ரக்ஷைகளும் சேர்ந்து | ... | ரூ 8—0—0 |
| அனுப்பும் செலவு | ... ... | ரூ 0—8—0 |

குறிப்பு:— (i) இந்தியாவிற்கு வெளியே வி. பி. ஆர்டருடன் தகையம் அனுப்பவேண்டும் தபால் பில்லைகள் கரன்ஸிநோட்டுகள் எந்த நாட்டுதும் ஓ புக்கொள்ளப்படும்.

(ii) எல்லா கடிதப்போக்குகளும் ஆங்கிலத்திலேயே.

**Putlighar Mystic Corporation**
Putlighar Street, P. B. 27
(8 J) AMRITSAR.

---

## அவர்கள் சுக வாழ்கையின் காரணம்



பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

இவர்கள் அனைவர்க்கும் ஆரோக்கியத்தைக் கார்க்க உதவுகிறது; தகப்பனார் உழைப்பினால் தளர்ச்சி அடைந்தபோதும் தாயார் வியாதி குணமடைந்து வரும்போதும் பிள்ளை வளர்ச்சிக்கு வேண்டிய உற்சாகத்தை கொடுத்து உதவுகிறது.

**ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட்**
மதராஸ் 17.

வெகுநாள் நீடித்து இருப்பதற்காக

**ஏஸிஸி** சிமெண்டால் கட்டப்பட்டது




**தி அஸோஸியேடட் சிமெண்டு கம்பெனீஸ் லிமிடெட்**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**தி சிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்**

SISTA'S-CMI-79-TAMIL



# பெர்குஸன் 24 H.P. (வேபரைஸ்டு ஆயில்) டிராக்டர்

நவீன விவசாயிக்கு எளிதாயும் திடமாகவும் சிக்கல் இல்லாமல் யாரும் ஓட்டக்கூடியதுமான டிராக்டர்கள் தேவை. அத்துடன் இலவச ஸர்விஸும் அத்தியாவசியம், எனவே தான் பெர்குஸன் டிராக்டர்களும் அதன் கருவிகளும் அவர்களுக்கு இன்றியமையாததாய் ஆகிவிட்டது. உங்கள் ஊர் அருகாமையிலுள்ள டீலர்களிடம் உபகருவிகளைப்பற்றிய விபரங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

சென்னை டீலரின்
டெபோவில் டெலிவரி
பெற்றுக்கொண்டால்
RS. 6900/-

டீலர்கள்:

K

M/s. கமானி என்ஜினீயரிங்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
"ஸாகர் மான்ஷன்"
2, ஜோன்ஸ் தெரு,
பிராட்வே, மதராஸ்-2

FERGUSON SYSTEM

K. B. LTD./F3

# காவேரி

## பொருளடக்கம்

| கர மலர் 10 | | ஆடி இதழ் 12 |
|---|---|---|



**குறிப்பு:**

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள், அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# மேன்மையின்

## பெருமை அநேக வருஷ

## உழைப்பிற்குப் பின்னும் விளங்கும்



ஸைக்கிள்கள்

ஸைக்கிள் சாமான்கள்

பெராம்புலேட்டர்கள்

குழந்தை வண்டிகள்

இவைகளில்

உயரிய ரகத்திற்கு



நம்பி வாங்க

## இங்கிலீஷ் சைக்கிள் & மோட்டார்

இம்போர்டிங் கம்பெனி லிமிடெட்

*2/9 பிராட்வே :: :: மதராஸ் 1.*

*தந்தி :—"ஸைக்கிள்ஸ்"* போன்: 3168

# காவேரி

| | | |
|---|---|---|
| கர ௵<br>மலர் 10 | "சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்<br>செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்—" பாரதியார் | ஆடி<br>இதழ் 12 |


## நில உரிமையில் புதிய கொள்கைகள்

சென்னைக் கவர்மெண்டாரால் நிறுவப்பட்ட நிலச் சீர்திருத்தக் கமிட்டியின் முக்கியமான சிபார்சுகளை வேறொருபக்கத்தில் பிரசுரித்துள்ளோம்.

இந்தச் சிபார்சுகள் கவர்மெண்டாரால் அங்கீகரிக்கப்படுமாகில் நில உரிமையில் புரட்சிகரமான மாறுதல்கள் உண்டாவதோடு உணவுப் பிரச்னையை பெரிதும் பாதிக்கும் என்பது நமது அபிப்பிராயம். அதுமட்டுமல்ல; தற்போதுள்ள நிலச்சுவான்தார்களை அடியோடு ஒழித்துக்கட்டி, புதிய நிலச்சுவான்தார்கள் கிளம்புவார்கள். ஆனால் அவர்கள் கைக்கும் வாய்க்கும் எட்டாத நிலையில் ஜீவனம் செய்துவர நேரிடும். பணம் சேமித்து வைத்திருக்கும் எளியோரும் சரி, பணக்காரரும் சரி, இனி நிலத்தை வாங்க முன்வரமாட்டார்கள். நிலத்துடனேயே தொடர்பு வைத்துக்கொண்டு நேரடிச் சாகுபடி செய்பவர்களின் எண்ணிக்கை சீக்கிரத்தில் குறைந்துவிடும். தற்காலத்தில் பெரும் பண்ணைவைத்து நேரடிச் சாகுபடி செய்பவர்கள் ஒருகால் கிராமங்களிலேயே தங்கலாம். ஆயினும் காலக்கிரமத்தில் அவர்களுடைய எஸ்டேட்டுகளும் க்ஷீணித்து அவர்களும் வெளியேற நேரிடும்.

சீர்திருத்தங்களின் உள்நோக்கைக் கவனிப்போம். கமிட்டியார் கீழ்க்கண்ட முக்கிய நோக்கங்கள்கொண்டு இச்சிபார்சுகள் செய்திருக்கவேண்டும். நிலச்சுவான்தார்கள் கிராமத்தில் இருந்து தம் நேரடிப் பார்வையில் தங்கள் நிலங்களைச் சாகுபடி செய்யாமல் நகரங்களுக்கும் வெளியூர்களுக்கும் சென்று காலம்கடத்துகிறார்கள். அதனால் கிராமத்துச் சுபிக்ஷம் குன்றுவதோடு நிலங்கள் தரம் குறைந்து, காலக்கிரமத்தில் க்ஷீணிக்கின்றன. எனவே நேரடி மேற்பார்வையினாலோ அல்லது தம் குடும்பத்தின் உழைப்பினாலோ விவசாயம் செய்யாத நிலச்சுவான்தார்களை ஒழிக்கவேண்டும். அப்படி ஒழிப்பதானால், மறுபடியும் அத்தகைய கோஷ்டியினர் கையிலேயே நிலம் சிக்காமலிருக்கும் பொருட்டு, நிலத்தை நேரடிப்பார்வையில் சாகுபடி செய்யாதவர்கள் இனி நிலம் வாங்கக்கூடாது என்று விதிப்பது அவசியமாகிறது.

தற்காலம் அத்தகைய கோஷ்டியினரை எப்படி ஒழிப்பது! இது சிரமசாத்தியமான காரியம். எனவே ஒரு குறிப்பிட்ட தேதியில் யார் யார் எவ்வளவு நிலம் வைத்திருக்கிறார்களோ அவரவர்கள் அந்நிலங்களை வைத்துக்கொள்ளலாம். மேலே வாங்கும்பொழுது அது ஒரு வரம்பிற்கு அதிகமானால் அதைத் தடை செய்வது. இதுதான் கமிட்டியாரின் முக்கிய நோக்கம்.

எனவே, ரூ. 250 கிஸ்தி செலுத்தக்கூடிய நிலப்பரப்பிற்கு அதிகமாக எவரும் நிலம் வாங்கக்கூடாது என்றும், அதற்குட்பட்ட நிலப்பரப்பு உள்ளவர்கள் மட்டுமே (அவர்கள் நேரடிச் சாகுபடி செய்பவர்களாக இருந்தால்) ரூ. 250 கிஸ்தி அளவுவரை நிலம் வாங்கிச் சேர்த்துக்கொள்ளலாம் என்றும் கமிட்டியார் சிபார்சு செய்திருக்கிறார்கள். ஆனால் இப்போது (1951 ஜுலை 1உ) அதிகநிலம் ஒரு நிலச்சுவான்தார் வசம் இருக்குமானால் அதை அவர்கள் வைத்துக்கொள்ளலாம்.

விவசாயி யார் என்று கமிட்டியார் வரம்பு கட்டிவிட்டார்கள். இனி அவர்கள் தாம் நிலம் வாங்கலாம் என்றும் கூறிவிட்டார்கள். தம் அல்லது தம் குடும்பத்தினர் நேரடி மேற்பார்வையில் தமக்குச் சொந்தமான நிலங்களைச் சாகுபடி செய்பவர்கள் தாம் விவசாயி என்று அங்கீகரிக்கப்படுவர். ஒருவருக்கு

10 ஏக்கர் நிலம் இருந்தால் அதைத்தையும் அவர் நேரடிச் சாகுபடி செய்யாமல் குத்த கைக்கோ வார சாகுபடிக்கோ விட்டிருந்தால் அவர் விவசாயி அல்ல. அவர் அந்நிலங் களுக்காகக் கொடுக்கும் கிஸ்தி ரூ. 250-க்கு உட்பட்டிருந்தால்கூட, ரூ. 250 வரை கிஸ்தி செலுத்தக்கூடிய நிலபபரப்பை அவர் வாங்கிச் சேர்த்துக்கொள்ளமுடியாது. நிலச் சுவான்தார்களில் எண்பதுபேர் ரூ. 250 கிஸ்தி கொடுக்கிறவர்களாக இருக்கமாட் டார்கள். இவர்களில் பெரும்பாலோர் தங்கள் காலத்திலோ அல்லது தங்கள் பாட் டனர் காலத்திலோ அந்நிலங்களை நேரடியாக உழுது சாகுபடிசெய்து நெல் விலைக் குறை வினால் கடனாளியாகபபோய், கட்டுபடியாகா மல் நிலங்களை விற்ற விவசாயியிடமிருந்து நிலம் வாங்கியவர்களாயிருப்பார்கள். தாங்க ளும் அக்கதிக்கு ஆளாகாமலிருக்கும் பொரு ட்டு, நிலத்தை விற்க மனமில்லாமல், அதைக் குத்தகைக்கு விட்டுவிட்டு அதினின்று வரும் வரும்படி குடும்பம் நடத்தப் போதா தென்று கருதி, வெளியூர்களுக்குச் சென்று சம்பாத்தியம் செய்யும் நபர்களாக இருப் பார்கள்.

கூடியவரையில் ஒரு நடுத்தர குடும்பத்தின ருக்கு எத்தனை நிலம் இருந்தால் நிலத் தையே நம்பி அக்குடும்பம் ஜீவனம் நடத்தக் கூடும் என்பதை முதலில் நிர்ணயித்துக் கொண்டிருக்கவேண்டும். அப்படி நிர்ண யிக்கப்பட்டதுதான் இந்த ரூ. 250 கிஸ்தி நில விஸ்தீரணமா என்பது தெரியவில்லை. ஒரு விவசாயக் குடும்பத்தின் ஜீவனோ பாயத்திற்கு மட்டுமே நில வருமானம் மிருந் தால் போதாது. நம் பழக்க வழக்கங்கள், சடங்குகள், கல்யாணம், சாவு இவைக்கும் அக்குடும்பச் சொத்து ஈடு கொடுக்கக்கூடிய தாயிருக்கவேண்டும். ஓர் திருப்திகரமான விவசாயப் பண்ணை எவ்வளவு ஏகர் உள்ள தாக இருக்கவேண்டும் என்று கணக்கிடும் பொழுது இச் செலவுகளையும் கவனத் தில் வைத்துக்கொண்டுதான் குறைந்த பக்ஷ விவசாயப்பண்ணையை (Economic holding) நிர்ணயிக்கவேண்டும். மேலும் அகவிலையையும் நெல் விலையையும் கவனித் தல் அவசியம். அப்படிக் கவனிக்குங்கால் ஓர் நடுத்தர விவசாயக் குடும்பத்துக்கு ரூ. 250 கிஸ்தி செலுத்தக்கூடிய நிலம் போதும் என்று முடிவுகட்ட முடியாது என்பது நமது அபிப்பிராயம். கிராமக் குடியானவரின் தற் போதைய வாழ்க்கைத் தரத்தைக்கொண்டு அதிகபக்ஷ நிலம் வைத்துக்கொள்ளும் வரம்பைக் கட்ட முடியாது. அதிகபக்ஷ நில வரம்பு ஏற்படுத்துங்கால் நடுத்தர குடும்பத் தினரின் தரத்தைத்தான் எடுக்கவேண்டும்.

மேலும் கமிட்டியாருடைய நோக்கம் எல்லா நிலங்களும் உடைமைக்காரர்களுடைய நேர டிப் பார்வையில் சாகுபடி செய்யப்பட வேண்டும் என்பது. அவர்களுக்குத்தான் நிலம் வாங்கும் உரிமையும் அளிக்கப்பட்டிருக் கிறது. அப்படியானால் நிலம் வைத்திருப்ப வன் மற்றத் தொழில்களுக்குப் போகாமல் கிராமத்திலேயே இருந்து சாகுபடியைக் கவ னிக்க ஊக்கமளிப்பதே முறை. அதற்கு அவ னுக்குப் போதிய நிலப்பரப்பு இருந்தாலன்றி அவன் அங்கேயே தங்கி, குடும்பம் நடத்த முடியாது. குறைந்தபக்ஷம் ஒரு நடுத்தர நிலச்சுவான்தாருக்கு ரூ. 200 கிஸ்தி செலுத் தக்கூடிய நிலம் தேவை. அப்பொழுதுதான் அவன் லாபகரமாகக் கிராமத்தில் தன் குடும்பத்துடன் தங்கி நேரடிச் சாகுபடிச் செய்யமுடியும்.

எனவே கமிட்டியார் குறைந்தபக்ஷம் ஒரு நிலச்சுவான்தாரிடம் ரூ. 200 கிஸ்தி செலுத் தக்கூடியநிலம் நேரடிச்சாகுபடிக்கு இருத்தல் வேண்டும் என்று விதித்து, அதிகபக்ஷமாக ஒருவன் ரூ. 500 கிஸ்தி செலுத்தக்கூடிய நிலத்திற்குமேல் வைத்துக்கொள்ளக்கூடாது என்றும் விதிப்பதுதான் முறை.

கமிட்டியார் மனம் இவ்விஷயத்தில் தெளி வாகவிருப்பதாகத் தெரியவில்லை. நிலத் தைப் பெருவாரியான மக்கள் வைத்துக் கொள்ளவேண்டும் என்ற ஆசையும் மனத் தில் புகுந்து கஷ்டப்படுத்தியிருக்கிறது என்று தெரிகிறது. எனவேதான் பெருவாரி யான மக்களிடம் நிலம் வினியோகிக்கப்பட வேண்டும் என்ற கொள்கை ஓங்கி, அவர்களை அதிக பக்ஷ நிலம் ரூ. 250 கிஸ்திக்குமேற்படக் கூடாது என்று விதிக்கச் செய்துவிட்டது போலும்! அப்படியே அக்கொள்கை விரும் பத்தக்கதுதான் என்று ஒத்துக்கொண்டா லும் அது சாத்தியமா, அதனால் என்ன நேரிடும் என்பதையெல்லாம் சிந்தனைசெய்ய வேண்டும்.

ஏற்கனவேயே நம் விவசாய நிலங்கள் ஆயி ரக்கணக்கான வருஷங்களாகப் பயிரிடப்பட்டு வந்ததன் காரணத்தாலும் சிறிய சிறிய கூறு களாகப் பிரிந்து போனதன் காரணத்தினா லும் விளைச்சல் குன்றி, நம் தேசமக்களை நாம் நம் தானியத்தால் போஷிக்க முடியாமற் போய்விட்டது. கவர்மெண்டார் இப் பொழுது விளைச்சலை அதிகரிக்கவும்,

(தொடர்ச்சி 19ஆவது பக்கம் பார்க்கவும்)



# சிறையைக் கிழித்த ஆஸ்லா!

தே. ஸ்ரீ ரா.

*[கடவுள் காத்து நிற்கும் மனிதனின் அடிப்படையான உரிமைகளில் கடலில் விளையும் உப்பெடுப்பது மிகவும் எளிதானது. ஆனால் மிகவும் இன்றியமையாதது. இந்த உரிமையை இழந்துவிட்டு வாழ முடியாது. இதைத் தடுத்து நின்ற சக்தியைச் சிதைக்கவே இந்தியாவில் நடந்த மகத்தான புரட்சிகளுள் உப்புச் சத்தியாகிரகம் மேன்மை பெற்று விளங்கிற்று. உப்பு மூலம் உரிமை காக்க முடியும் என்று நிரூபித்தார் காந்தி மகான். அதற்கு அத்தாட்சியாக அமையப் பெற்றதே காந்தி—இர்வின் ஒப்பந்தம். உப்பு அள்ள, தண்டியாத்திரை சென்றார் அவர். இப்போரில்—அறப்போரில்—அண்ணல் அடிதன்னைப் பின்பற்றிச் சென்றனர் அநேகர், ஆணும் பெண்ணும். இப்புனித வைபவத்துள் நிகழ்ந்த ஒரு சம்பவமே இங்கு தரப்பட்டுள்ளது.]*

இருபது ஆண்டு முன், மார்ச் மாதம் 12-ஆம் தேதி 1930-ஆம் வருஷம் தண்டி யாத்திரை தொடங்கி, அநேக கிராமங்களைக் கடந்து, இரண்டாம் நாள் பாராஜே, நவகாம், பாகல்பூர் வழியே சென்று, ஆஸ்லாவை யடைந்தது. உலகம் உள்ளளவும் மறக்க முடியாத ஓர் உள்ளத்தழும்பை வாழ்க்கையில் தரப்போகும் அபூர்வ பாக்கியம் பெற்ற நாள் அது! பாரத அன்னையின் தெய்வீக யாகத்தை நடத்த ஆற்றலுடனும், அள்ளும் உணர்ச்சியுடனும் செல்லும் ஐயன் எடுத்து வைத்த ஒவ்வொரு அடியும் ஒரு தருமத்திற்குப் புத்துயிர் கொடுத்துச் சென்றது என்று அந்த இயக்கத்தில் கலந்த ஒவ்வொருவரும் உணராமலிருக்க முடியாது.

[முதல்நாள் பிரயாணம் குழந்தை விளையாட்டாய்த் தோன்றிற்று. நேரே ஏழுமைல் கால்நடை. இடையே தங்கவுமில்லை; வரவேற்பு ஏற்பாடுகளை அங்கீகரிக்கவுமில்லை. இவ்வாறு கருமமே கண்ணாகி, சத்தியாக்கிரகிகள் விரைந்து சென்றனர். இரண்டாம் நாள் பிரயாணம் மிக்க கடுமையானது. பாழடைந்த குக்கிராமங்கள், சூரிய வெப்பம், புல் பூண்டற்ற கரடு முரடான சமவெளி. குஜராட் புழுதி வானளாவிப் பரவியது. அனல் காற்று சுவாசிப்பதைத் திணற வைத்தது. காந்திஜி இதைப் பொருட்படுத்தவுமில்லை, தயங்கித் தாமதிக்கவுமில்லை. தலையில் ஈரத் துணி. அதை ஐந்து நிமிஷத்திற்கொரு தரம் நனைக்க 'வாலண்டியர்கள்' நீரடைத்த கூசாக்களைத் தாங்கிச் சென்றனர். கோஷ்டியிலோ புழுதியினால் இருமல்கள், கண் துடைத்தல். எனினும் யாத்திரை முன்னேறின வண்ணம்.]

கஷ்டத்திற்குப்பின், சுகமுண்டு என்ற இயல்பை நிரூபித்தது ஆஸ்லா வென்ற இடம்.

பாலைவனம் கடந்து பழத்தோட்டமடைந்து குளிர்ந்த நிழலிலும் நீரோடையிலும் களைப்பைக் கழற்றி ஆறுதலடையும் உணர்ச்சி. பத்திரிகை நிருபர்கள் ஓடோடியும் போய் "இன்னும் அரெஸ்ட் ஆகவில்லை, அதிகாரிகள் எதிர்ப்பு ஒன்றையும் காணோம். ரிசர்வ் படை அங்கங்கே அணிவகுத்துக் காணப்படுகிறது. எல்லாம் திட்டப்படியே நடந்தேறின" என்று அவரவர்கள் பத்திரிகைகளுக்குத் தந்தி கொடுத்துத் திரும்பினர்.

திரும்பும்போது எழுந்தன இச்சொற்கள்; "ஹா! இதென்ன காட்சி! பெண்மணிகள், அதுவும் முஸ்லிம் பெண்மணிகள்! கனவேகமாக, காந்திஜி கொட்டகை அடைகின்றனர்!

* * *

ஆஸ்லா என்பது முஸ்லிம்கள் பெருவாரியாக வசித்துவந்த ஒரு சிற்றூர் என்றே கொள்ளலாம். வரவேற்பு அமோகமாய்த்தானிருந்தது. எனினும் அதில் பங்கெடுத்துக் கொண்டவர்களில் இவர்கள் அதிகமாகக் காணப்பட்டனர் என்பதற்கில்லை. பின் ஏன் இந்தப் பரபரப்பு?

ஓடினார்கள் நிருபர்கள். என்ன விந்தை! என்ன மனதை உருக்கும் உன்னதக் காட்சி! சர்க்கா சுழன்றுகொண்டிருக்கிறது. உலக மகான் சிந்தனையில் ஆழ்ந்தபடி தோற்றம்; எதிரே ஓர் அழகிய முஸ்லிம் மாது ஒரு பையனை இரு தோள்களிலும்பற்றித் தன்னுடன் அணைத்து நிற்கிறாள்; தாயுள்ளம் அன்புமயம் அவள் கண்ணில் பெருக, கண்ணைத் திறக்கிறார் ஐயன். மாது பணிகிறாள். பதில் ஒரு கம்பீரப் புன்னகை. இரண்டொரு நிமிஷம் உருதுவில் சம்பாஷணை; பின்பு பையனை அழைத்துச் செல்கிறாள். என்ன நடந்தது என்று அறியப் பத்திரிகை நிருபர்கள் துடிதுடித்தனர். ஏதோ ஒரு மகத்தான நிகழ்ச்சி நடந்தேறியது! அண்ணலின் முக மலர்ச்சி, மௌனம், சுற்றிக்கொண்டே இருந்த சர்க்காவின் கீதம், நிசப்தம், ஆம், பெரியதொரு எதிர்பாராத நிகழ்ச்சிக்கு இவைகள் அறிகுறிதான் என்று நன்குணர்ந்த நிருபர்கள் அங்குமிங்கும் ஓடினர். சாரணர் முகங்களில் ஒளி வீசும் வெற்றிக் குறி.

தயாபாய் ராம்ஜீ என்பவர் காந்திஜீ பிரத்தியேக முகாமிற்கு அன்று தலைமை பெற்றிருந்தார். அவரை எங்கு தேடியும் காணோம். இங்கிலீஷ் பத்திரிகா நிருபர்கள் அவரை அடித்துக் கொண்டுபோய் விட்டார்களா? அங்கிருந்த உள்நாட்டு நிருபர்களுள் மனக் கலக்கம். ஒருவர் யாத்திரையுடன் கூடவே சென்றுகொண்டிருந்த தபால் தந்தி கூடாரத்திற்குச் சென்று பார்த்தார். அங்கில்லை தயாபாய். உல்லாசமாக ஸிகரெட் இழுத்துக்கொண்டிருந்தார் தந்தி யடிக்கும் பேர்வழி. மெதுவாக, தந்திரமாக ஒரு வாலண்டியர் மூலம்—இவர் தமிழ்நாட்டுத் தொண்டர்—அவர் இருக்குமிடம் கண்டுகொண்டு ஒரு நிருபர் அங்கு விரைந்தார்.

பொது முகாமின் சமையல் விடுதி. ஐந்நூறு அடுப்புக்கள் பிரகாசமாக எரிந்துகொண்டிருந்தன. சப்பாத்திகள் போட்டுப் போட்டு எடுத்துக்கொண்டிருந்தனர். சிலர் மாவு பிசைந்து மிருதுவாக்கிக் கொண்டிருந்தனர். தயாபாயைப்பற்றி அவர்களிடம் விசாரிக்க அதோ முதல் முதல் முகாமின் வாசலில் உட்கார்ந்திருக்கிறார் என்று சொன்னார்கள். அவர் சாவதானமாகச் சிறு உடையணிந்து பனியனுடன், ஒரு கொசுவலையைத் தைத்துக்கொண்டிருந்தார். அவர் அருகே தாவி உட்கார்ந்த நிருபர் என்ன நடந்ததென்று கொஞ்சங் கொஞ்சமாக அறிந்து கொண்டார்.



* * *

தண்டி யாத்திரைக்கு வரவேற்பு ஆஸ்லா வில் ஒருபெரும் திருவிழாவாகத்தான் நிகழ்ந்தது. இரண்டு மைலுக்கப்பால் சத்தியாக்கிரக முகாம் அமையப்பெற்றிருந்தது. ஜனங்கள் ஆயிரமாயிரமாய்த் திரண்டு காத்திருந்தனர். காந்திஜீ அவர்கள் நடுவில் மேடையில் அமர்ந்து இரண்டொரு நிமிஷம் சொற்பொழிவு. பின்னர் தம் பிரத்தியேக முகாம் அடைந்தாரோ இல்லையோ உடனே ஒரு அவயக்குரல் கேட்டது! "ஐயோ! மகனைக் காணோமே!" அவ்வூர் பிரபல ஏற்றுமதி வியாபாரி உசேன்உல்லா லப்தாரி என்பவரின் செல்வப் புதல்வன் வெகு நேரமாகக் காணவில்லை! அவர் ஊரிலில்லை. மதுரை என்ற கிழக்கு இந்தியத்தீவில் வியாபாரத்தின் பொருட்டுத் தங்கியிருந்தவர், ஆஸ்லாவிற்குக் காந்திஜீ விஜயம் செய்கிறாரென்று அறிந்ததுமே அவ்வூர் வரவேற்புக் கமிட்டிக்கு 10,001 ரூபாய் தந்தி மணியார்டர் செய்தவர். அன்னாரின் ஒரே புதல்வன், ஏழு வயது பாலன் காணவில்லை என்று தாய் அழுது புலம்பி அலைகிறாள். சரி, எங்கே போய்விடுவான்? முகாமில்தான் இருக்க வேண்டு மென்றார்கள். ஆனால் முகாமில் பையனைக் காணவில்லை. எங்கும் தேடியும் பலனில்லை. சிறுவன் எங்கே என்ற அவயக் குரல் தலைவரை எட்டியது.

அவ்வளவுதான்! அப்பொழுதுதான், மிக்க களைப்படைந்த யாத்திரீகர்களும், சாரணர்களும் மற்றவர்களும் உண்ண உட்கார்ந்தவர்கள், முக்கிய வேலையிலிருந்தவர்கள், எல்லோருக்கும் வந்தது ஆணை, பையனைக் கண்டுபிடித்துத் தாயிடம் சேர்த்துவிட்டு, பின்பு மற்ற வேலையைக் கவனிக்கலாம், என்று உத்தரவு. ஊழியர்கள், இதர தொண்டர்கள், தோழர்கள், ஆண், பெண், எல்லோரும் முகாமை விட்டு அப்படியே போட்டது போட்டபடி தாவிப் பறந்தனர் வெளியே!

அன்று அவ்வூர் சேர்ந்த ஜனங்களின் வண்டிகள் அவிழ்த்து விடப்பட்டிருந்த பெரியதொரு வண்டிப்பேட்டைச் சதுக்கம் தெற்கே நாலைந்து பர்லாங்கு தூரமிருக்கலாம். உயர்ந்த இரு மாடுகளின் கடும்போர், கண்கொள்ளாக் கொண்டாட்டம். கண் கொட்டாமல் உலகத்தையே மறந்து பார்த்துக் கொண்டிருந்தான் சிறுவன். அருகே தள்ளாடும் முஸ்லிம் கிழவி ஒரு முடிச்சுடன் உட்கார்ந்து சுவாரசியமாகப் பொடி போட்டுக் கொண்டிருந்தாள்! முகத்தில் திருப்தி ஒளி! பையன் சிரித்தபோது அவளும் சிரிப்பாள். அவள் கண் பார்வை மங்கியிருந்தது. பையனைத் தூக்கிக்கொண்டு அவனுடனிருந்த கிழவியை அழைத்துக்கொண்டு அழுதுகொண்டிருந்த தாயிடம் சேர்த்தனர் தொண்டர்கள். தாய் மகனைத் திரும்ப அடைந்தாள். அவனிடம் தன் உயிரையே வைத்திருந்தார் தன கணவன் என்று அவள் உணர்ந்திருந்தாள். இம்மகத்தான வைபவம் வருகிறது. இதில் மகனை ஜாக்கிரதைமாய்ப் பார்த்துக்கொள்ளவும் என்று அவரிடமிருந்து தாய்க்கு முன்னமேயே எச்சரிக்கை வந்தது. மகன் மறைந்த மாயத்தைக் கேட்டாள். குழந்தையின் வசனம் அவளைத் தூக்கிவாரிப்போட்டது. உணர்ச்சி மேலிடும் வேறு உலகத்தில் இழுத்துச்சென்றது.

ஆம், வெகுநாளாய் மிட்டாய்க்கடை வைத்திருந்த அக்கிழவி சரியான கண் பார்வை மற்றவள், சற்றுத்தூரத்தில் வசித்துவந்தவள், பையனை வெகுநாள் வேண்டிக்கொண்டிருந்தாள். காந்திஜீ வந்ததும் தன்னை வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டு வந்து அவரைக் காண அவன் உதவி புரிவதாக வாக்களித்திருந்தான். இதன் காரணமாக, அநேக நாள் பள்ளிக்குச் செல்லும்போதும், வெளிவரும்போதும் இலவசமாக மிட்டாய் வாங்கித் தின்பான். அன்று காலை பெரியார் விஜயமென்றறிந்தவுடன் கிழவி வீட்டிற்குப் போய் அழைத்துவந்தான். கிழவியும் அவனும் வந்தபோது கூட்டம் அதிகமாகி, வழி விடவில்லை. காந்திஜீ எழுந்து மேடையை விட்டு முகாமிற்குப் போகும் வழியில் கிழவியும் பையனும் நின்றனர். "அதோ! காந்திஜீ" என்று காட்டுகிறான் சிறுவன். கிழவி ஒருதரம் தரிசிக்கிறாள், கண்ணில் ஆனந்த பரவசம். உடனே கீழேபணிந்து, தன் கையிலிருந்த பணமுடிப்பை அவிழ்த்து அவர் பாதத்தில் கொட்டுகிறாள், முந்நூறு ரூபாயும், ஏழு அணுக்களும் வெளிவந்து விழுந்தன. ஒரு நிமிஷம் மகாத்மா அப்படியே நிற்கிறார், கீழே குனிந்து பார்க்கிறார். உள்ளம் குளிரவைக்கும் உண்மை அன்புப் பார்வை! மறு நிமிஷம் சென்றுவிடுகிறார். அருகிலிருந்த தொண்டர்கள் தொகையை எடுத்துப் பின் வந்த ஒருவரிடம் ஒப்படைக்கின்றனர். அவர் அதைப் பெற்று, "இதோ! காந்திஜீ நூற்ற நூல் சிட்டம்" என்று பெரியவளிடம் கொடுக்கிறார். எல்லோரும் முகாமிற்குச் சென்றதும் கூட்டங்கலைந்தது. பாட்டியைத் தன்வீட்டிற்கு, குறுக்கு

வழியாய்க் கூட்டிக்கொண்டு போனான் பையன். வழியிலே வண்டிகளிருந்த இடத்தில் இவ்வாச்சரிய மாடுகளின் யுத்தம், என்ன சந்தோஷம்! சிறுவனும் பெரியவளும் உட்கார்ந்து களித்துக்கொண்டிருந்தார்கள், என்று கதையை முடித்தான் மகன்.

தாயின் ஆநந்தம் எல்லையற்றுப் பெருகிற்று. தன் வாழ்வுநாள் பூராவும் சேகரித்து வைத்திருந்த அந்த ஏழைக் கிழவியின் தியாகத்தை நினைப்பூட்டி, 'நீ என்ன செய்யப் போகிறாய், தந்தை தம் கடமையைச் செய்தாய்விட்டது'' என்று மனதை உருக்கும் குரலிலும் ஆவலிலும் கேட்டான், மகன். அவன் ஆசையைப் பாழாக்க மனம் வரவில்லை. மகனின் பெருமையையும் திருப்தியையும் அடையத் தானும் முனைய வேண்டுமென்று திட்டமிட்டது அன்னை மனம். பையனைத் தழுவி விரைந்து வந்தாள் காந்திஜீயின் விடுதிக்கு.

ராட்டை சுற்றிக்கொண்டிருந்தது. தாயும் குழந்தையும் பணிந்தனர். அவரோ கவனித்ததாக இல்லை. கண்ணில் நீர் மிதந்து முகத்தை நனைக்க, காந்திஜீயின் தூய உள்ளத்தில் தங்கள் பரிசுத்தத்தைக் கண்டு, புனிதமானவர்களாய்ப் பணிந்தபடியே, உருது பாஷையில், "நானும் இயக்கத்தில் கலந்துகொள்ளவேண்டும். நானும் இந்நாட்டு இந்தியப்பெண். என்ன செய்யவேண்டும்! உத்தரவைக் காத்து நிற்கிறேன்'' என்றாள்.

சுழன்றுகொண்டிருந்த ராட்டை, சுழன்றுகொண்டே இருந்தது. கண்ணை ஒரு நிமிஷம் திறந்து பின்பு மூடியவண்ணம் மகாத்மா—

"உண்மையாகவா?''

"ஆம்! சத்தியம், நான் எது முக்கியமென்று கருதினேனோ அதன்மேல் ஆணை.''

"இயக்கமென்றால் எது முக்கியமோ அதை இழக்க நேரிடுமே''

"ஆம், இழக்கிறேன்''

"உங்களுக்கு எது முக்கியம், உங்கள் குடும்ப வாழ்க்கையில்?''

"எங்கள் பர்தா (முகமூடி)''

"அப்படியானால் அதைத் தியாகஞ் செய்யலாம்''

ஒரு நிமிஷம் நிசத்தம், மறு நிமிஷம்—

"இதோ!''

காந்திஜீ கண்ணைத் திறக்கிறார். சுழன்றுகொண்டிருந்த சர்க்கா நின்றுவிட்டது! 'பர்' என்று தன்னை மூடியிருந்த பர்தா கிழித்தெறியப்பட்டு, கருமேகத்தைக் கிழித்துக் கிளம்பும் சந்திரனை அம்மாதின் முகம் புதுச் சுதந்திரத்தின் சூரியக் கிரணங்களால் ஒளிபெற்று மலர்ந்து தெளிந்தது! பரிசுத்தமான தியாக ஒளி வீசிற்று! அவ்வொளி மகாத்மாவின் சலனமற்ற மனதைத் தொட்டது! அவரிடமிருந்து ஆமோதிக்கும் சிரிப்பு.

"உங்களை மற்றவரும் பின்பற்றுவரா''?

"நான் ஜவாப்தாரி''

"இவ்வூர் புண்ணிய பூமியே''

"ஆம், இனிமேல், பர்தா இல்லாத, முக்காட்டைக் கிழித்தெறிந்த ஊர் ஆஸ்லா—''

பெரியார் உள்ளே செல்கிறார். அவர் ஓய்வு எடுக்கிறார் என்று கண்ட மாது பையனைப் பற்றி வெளிவந்து நின்றாள். அவ்வளவுதான்! ஒருவர் பின் ஒருவராய் அநேக முஸ்லிம் மாதர்கள் பர்தாவைக் கிழித்தெறிந்தனர். ஒன்று, இரண்டு, மூன்று......திரைகள் விழுகின்றன! என்ன திரைகள்! விடுதலை வாழ்க்கைக்கு இடையூறாய் நின்ற திரைகள்! பார்த்தோர் மனதில் அப்புனித நாளில் பொன்னால் பொறிக்க வைக்கப் பெறும் இவ்வொப்பற்ற நிகழ்ச்சி எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்தது. பெரியார் உண்மைப் பெரியாரே, எனினும் அவர் உள்ளத்தில் மகிழ்ச்சியோ பெருமிதமோ காணக்கிடைக்கவில்லை! மிக்க சாதாரண சம்பவமாகக் கருதினார்போலும்!

* * *

ஓடினார்கள் மறுபடியும் பத்திரிகை நிருபர்கள். இரவு 10 மணி ஆனால் என்ன? இன்னும் அநேகர் உணவு எடுக்கவில்லை, எல்லோருமே முகாமில் ஓய்வின்றி, சுறுசுறுப்பாயிருந்தார்கள். 'கடகட' வென்று டைப் அடிக்கும் சத்தம் அமைதியைச் சதா பிளந்துகொண்டிருந்தது. முகாமில் இணைக்கப்பட்டிருந்த தந்தி ஆபீசுக்கு ஓய்வு ஒழிச்சல் உண்டோ? அவ்விரவே தந்திகள் பல திக்குகளிலும் பறந்தன!

ஒவ்வொன்றும் திரும்பக் கூறமுடியாத சொல் ஓவியம்! மறுநாள் உலகம் முழுவதும் ஆஸ்லா சம்பவத்தை அறிந்து வியந்து மகிழ்ந்தது!

( ராகமாலிகை தொடர்ச்சி )

# ஸ்ரீ ஸ்துதி

ஸங்கீத வித்வான் (கல்கத்தா) A. K. ராகவாச்சாரியாரால் வர்ணமெட்டு அமைக்கப்பட்டது.

अग्रे भर्तुस्सरसिजमये भद्रपीठे निषण्णां
अम्भोराशेरधिगतसुधासंप्लवादुत्थितां त्वाम् ।
पुष्पासारस्थगितभुवनैः पुष्कलावर्तकाद्यैः
क्लृप्तारम्भाः कनककलशैरभ्यषिञ्चन् गजेन्द्राः ॥ १३ ॥

அக்ரே பர்த்துஸ் ஸரஸிஜமயே பத்ரபீடே நிஷண்ணும்
அம்போ ராசே ரதிகதஸுதா ஸம்ப்லவா துத்திதாம் த்வாம் |
புஷ்பா ஸாரஸ்தகித புவனை: புஷ்கலா வர்த்தகாத்யை:
க்லுப்தாரம்பா: கநககலசை: அப்யஷிஞ்சந் கஜேந்த்ரா:|| [13]

**ஸ்ரீ ராகம்** — ஆதி 2 களை

| லகு | த்ருதம் | த்ருதம் |
| --- | --- | --- |
| ·ரீ, க் ஸ் ·ரீ ஸ் ஸ்ா ; ; ; ஸ்ா ·ரி ஸ் ஸ்ா நீ நீ பா நீ ; | ; நீ க்ா ·ரீ ஸ்ா ·ரி ஸ் ஸ்ா நீ | நீ, நி ஸ் நீ ப பா மா பா ; |
| அ க்ரே ப ர்த்து | ஸ்ஸர . ஸி | ஜ ம யே |
| ம ரீ, ப மா, நி பா, ஸ் நீ, ஸ் பா, நி மா ப ரீ கா ரீ ; | ; மா ரீ மா பா, நி ஸ் நீ, | நீ மா பா நீ ஸ·ா நீ ஸ·ா ; |
| ப த்ர பீ டே | நி | ஷ ண் ணா ம் |
| ·ரீ நீ ஸ்ா ; ரீ ; ; ; ·ரீ, க் ·ரீ க்ா க் ·ரி ·ரீ ; ; | ; ·ரீ நீ ; நீ, க் ரீ, க் | ஸ்ா, நி நீ நீ நீ பா நீ ; |
| அ ம் போ ரா சே | ர தி க த | ஸு தா |
| ·ரீ, க் ஸ்ா, நி நீ, நி ஸ் நீ, நீ பா பா மா பா ; நீ | ; ஸ்ா ; ஸ்ா நி ஸா நி பா, ம | நி ப ம ரி ரீ கா க ரி ரீ ஸா ; |
| ஸ ம் ப்ல வா | து த்தி தா ம் | த்வா ம் |

### மத்யம கால நடை

| | | |
| --- | --- | --- |
| நீ நீ பா மா ரீ கா ரீ ; ரீ நீ ஸா ரீ ரீ மா பா ; | ரீ மா பா பா நீ நீ பா மா | பா ரீ மா பா நீ நீ ஸ·ா ; |
| பு ஷ்பா ஸா ர ஸ்தகித புவ னை | பு ஷ்கலா வ ர்த்த | கா த்யை |
| ·ரீ க்ா ·ரீ ஸ்ா நீ பா நீ ஸ்ா ·ரீ ஸ்ா ·ரீ ·ரீ நீ ஸர் பா ; | ஸ்ா நீ ஸ்ா பா நீ பா மா ரீ | கா கா ரீ ஸா ரீ மா பா நீ |
| க்லு ப்தா ர ம் பா க ந க க ல சை | ர ப்ய ஷி ஞ்சந் | க ஜே ந் த்ரா |

### ஸ்வர ஜதி

| | | |
| --- | --- | --- |
| ஸ்ா ; ·ரீ ; க்ா ·ரீ ஸர் நீ ஸ·ா ; ·ரீ ஸ்ா நீ நீ ; நீ | ஸ்ா நீ பா நீ ; பா மா ரீ | கா ரீ ஸா நீ ஸா ; ஸா ரீ |
| ஸா ரீ த க தி ன தாம் ரீ ஸா நீ நீ த | த ஜ ணு தாம் பா மா ரீ | த க தி ன் தாம் ஸா ரீ |
| மா பா ; நீ ; ஸ்ா பா நீ ஸ்ா ; க்ா ·ரீ ஸ்ா ·ரீ ; நீ | ; ஸ்ா நீ பா மா ; ரீ கா | ரீ ஸா ; ரீ ; மா பா நீ |
| மா தா தி கி ண தொம்தாம் கா ரீ ஸா தா தி | கி ண தொம் தாம் ரீ கா | ரீ தா த் கி ண தொம் |

आलोक्य त्वाममृतसहजे विष्णुवक्षस्थलस्थां
शापाक्रान्ताश्शरणमगमन् सावरोधास्सुरेन्द्राः ।
लब्ध्वा भूयस्त्रिभुवनमिदं लक्षितं त्वत्कटाक्षैः
सर्वाकारस्थिरसमुदयां सम्पदं निर्विशन्ति ॥ ॥ १४ ॥

ஆலோக்யத்வாம் அம்ருதஸஹஜே விஷ்ணுவக்ஷ ஸ்தலஸ்தாம்
சாபாக்ராந்தாச் சரணமகமந் ஸாவரோதாஸ் ஸுரேந்த்ரா: |
லப்த்வா பூயஸ்த்ரிபுவநமிதம் லக்ஷிதம் த்வத் கடாக்ஷை:
ஸர்வாகார ஸ்திர ஸமுதயாம் ஸம்பதம் நிர்வி சந்தி || (14)

**ஆபோகி** — **ஆதி 2 களை**

| லகு | த்ருதம் | த்ருதம் |
|---|---|---|
| ஸ்ா ; ; ; ஸ்ா தா தஸ் தா தா மா மா கா ரீ கா க ரி ரீ | ; கா ரீ ; ஸா ; ; ; | கா க ரி ரீ, க மா கா மா ; |
| ஆ லோ க்ய த்வா ம் | அ ம்ரு த | ஸ ஹ ஜே |
| ரீ கா மா தா தா மா தா ; ·ரீ ஸ்ா தா மா ம த கா ரீ ஸா | ; ரீ கா ; ரீ ; ; , க | ரீ ஸா தா ; ஸா ; ; ; |
| வி ஷ்ணு வ க்ஷ | ஸ்த ல | ஸ்தாம் |
| மா கா ரீ ஸா ரீ கா மா ; தா ஸ்ா தா மா தா தா ஸர் ; | ; ·ரீ க·ா ; க் ரி ·ரீ ; ; | 'ரீ ஸ்ா ·ரீ க ம் க்ா ·ரீ க்ா ; |
| சா பா க்ரா ந்தா | ச ர ணம் | அ க ம ந் |
| ·ரீ ; ரீ க்ா ஸ்ா ; ஸ்ா ·ரீ தா ; தா ஸர் தா மா தா ஸ்ா | ; ·ரீ க·ா ; ·ரீ ஸர் தா தா | மா கா ரீ ரீ ஸா ; ; ; |
| ஸா வ ரோ தா | ஸ் ஸு ரே | ந்த்ரா |

### மத்யம கால நடை

| | | |
|---|---|---|
| மா கா ரீ கா தா மா கா மா ஸர் தா மா தா ஸர் ; தா ஸ்ா | தா ; ஸ்ா த்ா தா மா கா ; | கா மா தா ஸ்ா ·ரீ க்ா ·ரீ ; |
| ல ப்த்வா பூ ய ஸத்ரி பு வ ந மி தம் | ல க்ஷி தம் த்வத் | க டா க்ஷை |
| ·ரீ ; ·ரீ கர் க்ா ·ரீ ஸ்ா தா ஸர் தா ; மா கா மா தா ஸ்ா | ·ரீ ஸ்ா ·ரீ தா ஸர் தா மா கா ; | மா கா ரீ ஸா ரீ கா மா தா |
| ஸர் வா கா ர ஸ்தி ர ஸ மு த யா ம் | ஸ ம் ப தம் | நி ர்வி ச ந்தி |

### ஸ்வர ஜதி

| | | |
|---|---|---|
| ஸ்ா ; ; ; ·ரீ ஸர் தா ஸ்ா தா மா தா மா கா ரீ கா ரீ ஸா | ; தா ஸா ரீ கா மா தா ஸ்ா | தா மா தா ஸ்ா ; ; தா ஸ்ா |
| ஸா ரீ ஸ்ா தா த ஜ னு கி ட த க தி மி தாம் | தா ஸா ரீ கா மா தா த | க தி ன தாம் தா ஸ்ா |
| ஸ்ா ·ரீ ·ரீ கர் மா க்ா க்ா ·ரீ ஸ்ா ·ரீ ; க்ா ·ரீ ஸ்ா தா ·ரீ | ; ஸ்ா தா மா கா ; மா கா | ரீ ஸா ; ரீ ; கா மா தா |
| ஸா ரீ ரீ கா த தி கி ண தொம் ரீ கா ரீ ஸா த தீ | கி ண தொம் கா மா கா | ரீ தா தீ கி ண தொம் |

(தொடரும்)

# ஜீவித லக்ஷியம்

கே. சுந்தராம்பாள்

"ஹல்லோ வெங்கடேச்! ரெடியா வந்துட்டயா?" என வரவேற்ருன் ஸ்ரீனிவாஸ்.

"நீ இன்னும் ரெடியாகவில்லையாடா பழி"

"என்னடா ரெடியாக எத்தனை நேரம் பிடிக்கும்? மையிட்டும் புஷ்பம் வைத்து......" என்று முடிக்குமுன்,

"புடவைகட்டி, ஜாக்கெட் சூட்பார்த்து, இல்லையா அதுதானே சொல்லவந்தாய். நாம் அப்படிச் செய்துகொண்டுபோனாலும் ஆச்சர்யபடுவதற்கில்லை. இதுதான் என் ஜீவிதலக்ஷ்யம் என்று சொல்லிவிடலாம்"

"என்னப்பா ஏதோ உட்கருத்து வைத்துப் பேசுகிருய்? என்ன நூதன விஷயம் கண்டாய்?"

"இன்று மாளவி வித்யாலயத்தின் பெற்ருேர் தினக் கொண்டாட்டத்தில் தலைமை வகித்துச் சொற்பொழிவாற்றுவது யார் தெரியுமா?"

"யாரோ போட்டிருந்தார்கள் இன்விடேஷன் கார்டில். அதையெல்லாம் யார் கவனித்தார்கள். பெண்சரசு படிக்கிருள். அதனுல் பெற்ருேர் தினத்திற்கு நான் போயாகவேண்டும். ராஜி கச்சேரிக்குப் போய்விட்டாள். இருண்டுபேருக்குமாக நான் போவது என்ற லக்ஷியம் ஒன்றுதான். மற்றதை அவ்வளவாகக் கவனிக்கவில்லை."

"ஆண்களும் பெண்களும் ஒரே வித்யாலயத்தில் படிப்பதோ, ஒரே காரியாலயத்தில் வேலை பார்ப்பதோ, கூடாது" என்று, மேடைப் பிரசங்கம் செய்து, கக்ஷிபேசிவந்த மாளவிதேவியாரின் வித்யாலயத்தில், ஆணும் பெண்ணும் சேர்ந்து படிப்பதினுலோ, ஒரே இடத்தில் சேர்ந்து வேலை பார்ப்பதினுலோதான் சகோதர உணர்ச்சியும், வாழ்க்கைக்கு வேண்டிய ஒத்துழைப்பு உணர்ச்சியும் உண்டாக வசதியளிக்கிறது" என்று மேடைப் பிரசங்கம் செய்துவந்த விச்வநாத் தலைமை வஹித்து சொற்பொழிவாற்றுகிருன் என்ருல்!"

"யார் நம்ம விச்வமா? ட்ரைனிங் முடிந்ததும் கார்த்திகேய வித்யாசாலையில் நம்முடன் வேலை பார்த்தானே அவனு?"

"சாக்ஷாத் அவனேதான்" என்று சொல்லும் பொழுது என்ன நீங்கள் ரெடிதானு?" என்று கேட்டவண்ணம் வந்தான் ரகுநாத்.

"ஓ. ரெடி. புறப்படவேண்டியதுதான்." என்று கண்ணுடி முன் சென்று தலையை வாரிக் கொண்டபடி, ஏண்டா அவனுக்குக் கல்யாணம் ஆய்விட்டதா தெரியுமா உனக்கு" என்ருன் ஸ்ரீனிவாஸ்.

"யாருக்கு?" என்று பிரமித்தான் ரகுநாத்"

"இன்று கொண்டாட்டத்திற்குத் தலைமை வகிக்கப்போகும் விச்வம் என்பவரைத்தான் கேட்கிருன். காலையில் விசாரித்தேன். இல்லை என்று தெரிந்தது."

"நீ அவனைப் பார்த்துவிட்டாயா?"

"இல்லையடா பழி. நீ இல்லாமல் நான் போவேனு, பிரசங்கம் முடிந்த பின்புதான் அவனைப் பார்த்துக் கேட்கவேண்டும்."

"என்ன கேட்கப்போகிருய்?"

"உன்னுடைய கொள்கை, ஜீவித லக்ஷியம் யாவும் என்னவாயிற்று என்று."

"ஜீவித லக்ஷியமா? அப்படியென்ருல்?" என்ருன் ரகுநாத்.

"அதற்கென்று தனி அர்த்தம் கிடையாது. நண்பன் விச்வநாத் ஏதாவது ஒரு விஷயத்தை விவாதத்திற்கு எடுத்துக்கொண்டானுனல் அது முடிவடையும் சமயம் இதுவே என் ஜீவித லக்ஷியம் என்று முடிப்பான், அவனது கொள்கையே தனியம்சம். அதனுல் அது ஜீவிய லக்ஷியமாக உருப்பெறுகிறது. என்ன லக்ஷியமானுலும், பதட்டமாகவே பேசமாட்டான். அது அவனது உயர்ந்த பண்பு.

நீங்கள் பேசிக்கொள்வதிலிருந்து அவரது வாழ்க்கை புரட்சியான சூழ் நிலையில் அமைந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. "அப்படித்தானு? என்ருன் ரகுநாத்"

"உண்மை உன்யூகம் சரி. போகும் வழியில் விவரமாகச் சொல்லுகிறேன்" என்ருன் வெங்கடேச்.

"நாங்கள் ஆரம்ப காலத்தில் வாத்தியார் வேலை பார்த்துவிட்டுப் பிறகுதான் குறுக்குப் பரீக்ஷை பாஸ் செய்து இவ்வுத்தியோகத்தில் அமர்ந்தோம். கார்த்திகேய வித்யாலயத்தில், சுமார் இருபது உபாத்தியாயர்களும், பதினைந்து உபாத்தினிமார்களும் வேலை பார்த்தோம் அவ்வருஷம். அவ்வித்யாலயத்திற்கு சங்கப் பலகை என்று அவ்வூரார் பெயரிட்டதில் ஆச்சர்யமில்லை. படித்துவிட்டு வேலையின்றி இருக்கும் சமயம் அப்பள்ளிக்கூடத்தின் மானேஜர் தயாள சிந்தையினுல், வேலையில்லாமல் திண்டாடுபவர்களுக்கு வேலை கொடுப்பார்.

மானேஜ்மெண்ட் ஸ்கூலாக இருந்தாலும் உயர்ந்த முறையில் நடந்துவந்தது மன்றி நாளுக்குநாள் விருத்தியாகி, ஐந்தாம் வகுப்புவரை ஆரம்பமான ஸ்கூல் பத்து வருஷங்களுக்குள் ஹைஸ்கூல் ஆனது. அப் பள்ளிக்கூடத்திற்கு ஒரு ராசியுண்டு. வேலையற்றிருப்பவர்கள் அதில்சேர்ந்து ஒருவருஷம் வேலை பார்ப்பதற்குள் வேறு நல்ல வேலை கிடைத்துவிடும். அல்லது மேல் படிப்பிற்காகவாவது சென்றுவிடுவார்கள். உபாத்தினியாக வரும் பெண்களெல்லாம் ஒரு வருஷம் முடிவடைந்ததும் காதல் மணம் செய்துகொண்டு வெளியேறிவிடுவார்கள். படித்து வெளிவந்ததும் வேலைக்கு வருவதினால் கன்னிப் பெண்களாகத்தான் வருவார்கள். "விடோ" என்று வருவது ஏதோ ஒன்றிரண்டு. அதிலும் இரண்டொருவர்தான் தொடர்ந்து வருஷக் கணக்கில் வேலை பார்த்தார்கள். மற்றப்பேர் காதல் மணம், இப்படி ஏற்படுவதினால் தேடி வருபவர்களுக்கெல்லாம் மானேஜர் வேலை கொடுப்பதில் ஆச்சர்யமில்லையல்லவா? அநேகமாக அவ்வூர்ப் பெண்களே படித்துவந்து அதில் வேலைபார்த்தார்கள்.

இந்த ரீதியில் அவ்வருஷம், நான், ஸ்ரீனிவாஸ், விச்வநாத், வரதன் நால்வரும் ஒரே சமயத்தில் வேலையை ஏற்றுக்கொண்டோம் பெண்களிலும் நாலைந்து பெயர்கள் சேர்ந்தார்கள். அதில் ஹேமா அவ்வூரிலேயே படித்துவந்தவள். எல்லோரையும்விடச் சற்று அழகி என்றே சொல்லலாம். சாதாரண குடும்பத்தில் பிறந்தவளாயினும் கண்யமான முறையிலேயே நடந்துவருவாள். எங்களில் விச்வநாத் எவ்வளவு அடக்கமும் பொறுமையுமுள்ளவனோ அதற்கு நேர்மாறாக இருப்பவன் வரதன். படிப்பிலும் வரதன் குறைந்தவன். பத்தொன்பதாம் வயதில் எட்டாம் வகுப்பை ஒருவாறாக முடித்து ட்ரைனிங்கிலும் ஒரு பார்ட் குறையுடன் வேலைக்கமர்ந்தவன். வயிற்றுப்பிழைப்பிற்காக இல்லாமல் உத்யோகம் புருஷ லக்ஷணம் என்பதற்காகவே வேலைபார்த்தான். கொழுத்த பணக்காரன். வரதனுக்கு அடுத்தபடி வெங்கடேசுக்குத் தாம்பூலம் கொடுக்கலாம் கோபத்தில் படபடவென்று பெண்களென்றுகூடப் பாராமல் வாய்க்குவந்தவிதம் பேசுவதில். ஆனாலும் வெங்கடேசும், விச்வநாத்தும் தான் உபாத்திமார், உபாத்தினிமார் யாவருக்கும் சமயத்திற்குக் கடன் கொடுத்து உதவுவார்கள். விச்வநாத் யாவரிடத்தும் சிரித்துப் பேசிப் பழகுவான். பெண்களுக்கு அதிக சலுகை காட்டுவான். வரதனும் வெங்கடேசும் உபாத்தினி



(MADRAS), LTD.
*Retail Branches* 285, China Bazaar. 71, Pondy Bazaar T. Nagar,
*Agencies:* Luz, Mylapore. No. 2, Neeli Veerasami Chetty Street, Triplicane,
MADRAS.

மார்மீது ஏதாவது குற்றம் சொல்லிக்கொண்டே இருப்பார்கள். அந்தச் சமயங்களில் அவர்கள் செய்வது தவறு என்பதைச் சாந்தமாக எடுத்துச் சொல்லி விஷயத்தை மேலே போகவிடாமல் செய்துவிடுவான் விச்வநாத். ஒருசமயம் பரீக்ஷையின்போது, ஒரேவகுப்பில் மூன்று பிரிவில் விச்வநாத், வெங்கடேச், ஹேமா, மூவரும் வேலை பார்த்துவந்தபொழுது, ஹேமாவின் பிரிவே நல்ல மார்க்கு எடுத்தது. மானேஜர் இவர்களைக் குறை கூறவே வெங்கடேசுக்கு மிகுந்த கோபம் உண்டாகவே ஹேமாவை மட்டம் தட்டச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான். விச்வநாத் அதைப் பொருட்படுத்தவேயில்லை. ஆனால் வரதன், வெங்கடேசுக்குத் தூபம்போட்ட வண்ணமிருந்தான். ஹேமா வகுப்புப் பையன் ஒருவன் கேள்வித்தாளை, அதைத் தயாரித்தவருக்குத் தெரியாமல் தான் எடுத்த பெருமையைத் தனது நண்பனிடம் கூறிக்கொண்டிருக்கும்பொழுது, தற்செயலாக அந்தப் பக்கம் வந்த வரதன் காதில் கேட்டுவிட்டது. அவ்வளவுதான். வெங்கடேசனிடம் சொல்லிவிட்டான். அடுத்தபடி நாங்கள் கூட்டம் போட்டோம். அந்தப் பையனை வரவழைத்து, கேள்வித்தாளை என்ன செய்தாய் என்று கேட்டான் வெங்கடேச்.

"படித்துப் பார்த்துவிட்டுக் கிழித்துப் போட்டுவிட்டேன்"

"அந்தக் கேள்விகள் தானே பரீக்ஷையில் வந்தவை?"

"ஆமாம்"

"உங்கள் டீச்சர் கையில் தானே பேப்பரைக் கொடுத்தாய்? நிஜத்தைச் சொல்லு."

"ஆமாம்" என்று பயந்தவாறு கூறினான் பையன்.

"இதை இத்துடன் விடகூடாது. இப்பொழுதே அவளைக் கூப்பிட்டு விஷயத்தைச் சொல்லி மானேஜரிடம் நல்ல ரிஸல்டின் லக்ஷணத்தைப் பார்த்தீர்களா என்று கேட்கவேண்டும்" என்றான் வரதன்.

"நாம் ஒன்றும் சொல்லவேண்டாம். மானேஜரிடம் சொல்லிவிட்டால் அவர் கேட்டுக்கொள்ளுவார். ஒரு பெண்ணை நாம் அவமானம் செய்வது நல்ல காரியமல்ல" என்றான் விச்வநாத்.

"அவள் செய்தது ரொம்ப ஒழுங்கான செய்கை? கேட்டால் என்ன தப்பாம்?" என்றான் வரதன்.

"சரி இப்பொழுது நாழிகையாய்விட்டது. வீட்டிற்குச் சென்றிருப்பாள். சாயங்காலம் பார்த்துக் கொள்ளலாம்" என்றான் வெங்கடேச்.

சாயங்காலத்திற்குள் விச்வநாத் ஹேமாவின் வீட்டிற்குச் சென்று விஷயத்தைக் கூறிவிட்டு "சாயங்காலம் நாங்கள் கூப்பிட்டனுப்பியதும், நேரே மானேஜரிடம் சென்று விஷயத்தைச் சொல்லிவிடுங்கள். அவர் முன்னாக விசாரிக்கட்டும்" என்று சொல்லிவிட்டு வந்துவிட்டான். சாயங்காலம் ஸ்கூல் முடிய அரைமணி முன்னதாக ஹேமாவைக் கூப்பிட்டனுப்பினோம். சென்ற பையன் பின்னால் வருவதாகச் சொன்னான், சற்று நேரத்திற்கெல்லாம் மானேஜர் எங்கள் நால்வரையும் கூப்பிடுவதாகப் பியூன் வந்து சொன்னான். நால்வரும் சென்றோம். அவ்விடம் ஹேமா நின்றுகொண்டிருந்தாள்.

"ஸ்ரீமதி ஹேமாவை எதற்காக அழைத்தீர்கள்?" என்றார் மானேஜர்.

"நீங்கள் அவர்கள் வகுப்பில் நல்ல ரிசல்ட் வந்திருப்பதாகச் சொன்னீர்களே. அதன் மர்மத்தை அம்பலப்படுத்த" என்றான் வெங்கடேச்.

"பதட்டப்படாமல் சாந்தமாக விஷயத்தைச் சொல்லுங்கள் வெங்கடேச்" என்றார் மானேஜர்.

விஷயத்தை விளக்கினான் வரதன்.

"என்னடா ராமு, நீ எடுத்துவந்து இவர்களிடம் கொடுத்தாயா?" என்றார் மானேஜர்.

"ஆமாம்" என்றான் ராமு.

"என்னம்மா நீங்கள் இப்படிச் செய்யலாமா?" என்றார் மானேஜர்.

"உண்மையில் அந்தக் கேள்வித்தாளை நான் பார்க்கவே இல்லை. இந்தக் கேள்விகள் வரலாமென்ற உத்தேசத்துடன் பாடம் நடத்தினேன்; தெய்வச் செயலால் வந்துவிட்டன. ராமு பொய் சொல்லுகிறான்" என்றாள்.

"இல்லை. இவர்கள் சொல்லுவதுதான் பொய். தான் பெரிய லார்டு என்று நினைப்பு. இவர்களெல்லாம் வேலைக்கு வந்தால் பள்ளிக்கூடம் முன்னேறிப்போனாப்போலத்தான்." என்றான் வரதன்.

"அடுப்பூதுபவர்களைப் பேனாப்பிடிக்கச் சொன்னால் என்ன நடக்கும்? திறமை கிடையாது. தகாத வழியினால்தானே காரியத்தை நடத்திக் கொண்டுபோகவேண்டும்." என்றான் வெங்கடேச்.

"சார் மன்னிக்கவேண்டும். இவர்கள் இப்படிப் பேசுவது சரியல்ல." என்று கண்களில் நீர் தளும்பக் கூறினாள் ஹேமா.

"பெண்களுக்கே அழுகை ஒரு ஆயுதம். அதற்கெல்லாம் நாங்கள் பயப்படமாட்டோம்" என்று வரதன் ஆரம்பிக்க, வெங்கடேசும் ஒத்துப்பாட ஏதேதோ சொன்னார்கள். இப்பொழுது நினைவில் வரவில்லை. ஹேமா அழும் காட்சி பரிதாபமாக இருந்தது. நானும் விச்வமும் வாயே திறக்கவில்லை. வரதன் மேலே பேசத் தொடங்கினதும்,

"மிஸ்டர் வரதன்! இந்த விஷயத்தில் நீங்கள் தலையிடுவது விரும்பத் தக்கதல்ல. சம்பந்தப்பட்டவர்கள் நானும், வெங்கடேசும். வார்த்தைகளை அதிகமாகச் செலவழிக்காதிருக்குமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்" என்றான் விச்வநாத்.

மேலே வளர விடாமலிருக்க, "மிஸ். ஹேமா போனது போகட்டும், ராமு பேப்பர் கொடுத்ததாகச் சொல்லுகிறான். நீங்களும் அதே கேள்விகளைப் பாடம் நடத்தியிருக்கிறீர்கள். எதேச்சையாக நடந்தாலும் சமய சந்தர்ப்பம் உங்கள்மீது குற்றம் எனவே எண்ணும்படி இருக்கிறது. ஒரு மன்னிப்பு லெட்டர் எழுதிக் கொடுத்துவிடுங்கள்.

விஷயம் இத்துடன் முடிவடையட்டும்'' என்றார் மானேஜர்.

''மானேஜர் சார். மன்னிக்கவேண்டும். மன்னிப்புக் கடிதம் எதற்காக எழுதுவது? கேள்வித்தாளை ஜாக்கிரதைப் படுத்தாமல் சிறு பையன் எடுக்கும்படி வைத்திருந்தது சுவாமிநாதனின் குற்றமல்லவா? முதலில் அவரை எச்சரிக்கை செய்யவேண்டும். கேள்வித்தாளைக் காண்பியுங்கள் என்றால் அது கைவசமில்லை. அதனால் அவரையும் லேசாக எச்சரித்துவிட்டு, விஷயத்தை இத்துடன் விட்டுவிட்டால்தான் பள்ளிக்கூடத்தின் பெயர் காப்பாற்றப்படும். மன்னிப்புக் கடிதம் என்றால் இருவருமே கொடுக்கவேண்டும். அப்படியானால் வாய்க்கு வந்த விதம் யாரும் பேச இடமேற்படும். மேலும் பெண்களைக் கௌரவமாக நடத்துவது என்பது எல்லா இடங்களிலும் பழக்கமாய் நடந்துவருகிறது. நமக்கு நல்ல பெயர் கெடுவானேன் என்பது என் அபிப்பராயம். பிறகு உங்களிஷ்டம்போல் செய்யுங்கள். நான் சொன்னது தப்பு என்றால் மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்றான் விச்வநாத்.

''ஆனால் உங்கள் அபிப்பிராயம் கேள்வித்தாள் வெளிவரவில்லை என்பதுதானா?''

''அப்படியும் நான் சொல்லவில்லை. அன்று ஹேமா வகுப்பு ரிசல்ட் நன்றாக இருக்கிறது. நீங்கள் சுத்த மோசம்'' என்று எங்களைக் கடிந்து கொண்டீர்கள். அதற்காக வேண்டுமென்றே ராமுவை இப்படிச் சொல்லும்படி செய்திருக்கக் கூடாதா?'' என்ற கேள்வி எழ இடமிருக்கிறதல்லவா? மிஸ். ஹேமா கேள்வித்தாளைப் பார்த்தே விடைசொல்லி யிருக்கலாம். ஆனால் சாக்ஷி இல்லையே. இதனால் வீண் விவகாரமும், அபவாதமும்தானே மிஞ்சும் என்பதுதான் எனது வாதம்'' என்றான் விச்வநாத்.

''மிஸ் ஹேமா நீங்கள் போகலாம்'' என்றார் மானேஜர்.

நன்றி பொங்கும் கண்களுடன் விச்வத்தைப் பார்த்துவிட்டு, உங்களால் என்னசெய்ய முடிந்தது?'' என்பதுபோல் வரதனையும் வெங்கடேசனையும் அலக்ஷியமாகப் பார்த்துக்கொண்டே சென்றுவிட்டாள்.

'மேலே பேச வழியில்லாமல் மானேஜரும் சென்றுவிட்டார். வரதனும் வெங்கடேசும் விச்வத்தை உன்னால் எல்லாம் கெட்டது என்று முறைத்துக்கொண்டே சென்றுவிட்டார்கள்.

ஹேமாவின் தாயார் விச்வத்தைத் தன் வீட்டிற்கு அழைத்து நன்றி சொன்னாள். முன்கூட்டி அவன் தெரிவிக்காதிருந்தால், ஹேமாவை இவர்கள் முன்நிறுத்தி, கண்டபடி பேசியிருப்பார்கள் என்பது நிச்சயம். பெரிய அவமானத்திலிருந்து தப்பியதற்காக ஹேமாவும் நன்றி கூறினாள். அதுதான் அவர்கள் இருவரும் நெருங்கிப் பேச ஏற்பட்ட சந்தர்ப்பம். பிறகு ஸ்கூல் முடிந்ததும், ஹேமாவும் விச்வமும் மாமரத்தினடியில் நின்று பேசுவதைப் பார்க்கலாம். சிலநாள் அவன் வீட்டிற்கே சென்றுவிடுவான். அவர்கள் காதலர்கள் என்பது யாவரும் அறிந்த ரகசியமாக இருந்தது. எங்கள் கோஷ்டியார் கூடும் சமயம் விச்வம் இல்லாதிருந்தால், ''வருங்கால மருமகன் மாமியார் வீட்டிலிருப்பார்'' என்று சொல்லுவான் வரதன். நாங்கள் ஒன்றுகூடும்பொழுது, இந்தப் பெண்கள் வேலைபார்க்க வந்ததுதான் தப்பு. இப்படி ஆணும் பெண்ணும் சேர்ந்து வேலை பார்ப்பதால் அநேக இடஞ்சல்கள் இருக்கின்றன. மானேஜர் அவர்களுக்குத்தான் சலுகை காட்டுகிறார். சில வகுப்புகளில் மாணவர்களுக்கு டீச்சரின் லீவ் லெட்டர் கொடுப்பதற்கே பொழுது சரியாக இருக்கிறது. கண்டிப்பாகப் பெண்களை சேர்க்கவே கூடாது என்று நாம் கிளர்ச்சிபண்ண வேண்டும் என்பான் ராமன்.

''அது தப்பு இரண்டுபேரும் சேர்ந்து வேலை பார்ப்பதில்தான் சகோதர உணர்ச்சி ஏற்படமுடியும். இரு பாலாரும் ஒத்துழைக்கும் மனப்பான்மையும் ஏற்படமுடியும்.'' என்பான் விச்வம்.

''மண்ணாங்கட்டி. அன்று ஹேமா செய்த குற்றத்தை ஒரு ஆண்பிள்ளை செய்திருந்தால் மானேஜர் அப்படி விட்டிருப்பாரா? சகோதர உணர்ச்சியெல்லாம் வாய்ப்பேச்சில்தான்'' என்றான் வெங்கடேச்.

''நீ நினைப்பது தவறு. ஆண்பெண் இருவரும்சேர்ந்து பொது ஸ்தாபனங்களில் வேலை செய்வதில், ஒருவர்க்கொருவர் காட்டவேண்டிய மரியாதையும், பெண் போற்றத் தகுந்தவள் என்ற உண்மையையும் அறிய வசதி கிடைப்பதுடன் பொறுமையும் சகிப்புத் தன்மையும் எவ்வித நன்மையை அளிக்கிறது என்பதையும் புரிந்துகொள்ள முடியும்.''

''அத்துடன் காதல் எப்படி என்பதையும் அறிந்துகொள்ளலாம்'' என்றான் வரதன்.

''அதுதான் தவறு. காதல் என்பது எந்நிலைமையிலும் மாறாது. மனமும் மனமும் கலந்து ஒன்றுபட்டுவிட்டால் மற்றவைகளைப்பற்றிய சிந்தனையே இருக்காது. அப்படியேற்படுவது ஒருவனுக்கு ஒரேசமயம் ஒருவரிடத்தில்தான் ஏற்படமுடியும். பார்த்தவர்கள் மீதிலெல்லாம் ஆவல் தோன்றுவது காதலாகாது. அப்படியேற்படும் ஆவலை அடக்கப் பழக்கினால் மனிதன் மனிதனாகவே வாழமுடியும். அதற்கு வசதி ஒன்று சேர்ந்து பழகுவதுதான். மனிதன் என்றால் அவன் ஜீவிதத்தின் லக்ஷியம், கொள்கை என்று ஏதாவது இருந்தால்தான் வாழ்க்கையை ரஸித்து வாழமுடியும்'' என்றான் விச்வநாத்.

''உன்னுடைய ஜீவிதலக்ஷியம் என்னவென்றால் ஆணும் பெண்ணும் ஒன்றாகப் பழகுவது'' என்பது. என் அபிப்பராயம் அதுகூடாது என்பது. இப்பொழுது நம்ம ஸ்கூலிலேயே பார்ப்போம். எவ்வளவு குழப்பம் மனஸ்தாபம். எல்லாம் இந்தப் பரதேவதைகள் வேலைக்கு வந்தபிறகுதான் என்று சுவாமிநாதன் சொல்லுகிறார்'' என்றான் வரதன். இப்படி எவ்வளவு நாட்களோ நாங்கள் ஒன்றுகூடும்பொழுது வாதப் பிரதிவாதங்கள் நடைபெறும்.

(அடுத்த இதழில் முடியும்)

(8-வது பக்கத்தின் தொடர்ச்சி)
நவீன இயந்திர சாதனங்களைக்கொண்டு உழுது சாகுபடி செய்யவும், அதற்கான நீர்ப் பாசன வசதி, மின்சார வசதி ஏற்படுத்தவும் திட்டமிட்டு வருகிறார்கள். இதற்கு அத்யாவசியம் பெரிய பெரிய நிலப்பரபபு, நிலப்பண்ணைகள். ரூ. 250 கிஸ்தி கொடுக்கக்கூடிய நிலச்சுவானதார் எவ்வகையில், எந்த மூலதனத்தைக்கொண்டு இயந்திரங்களை உபயோகிக்கவும். நவீன உரங்களை உபயோகிக்கவும் முடியும்?

தற்போதுள்ள பெரிய பண்ணைகள், தங்களுக்குச் சொந்தமான எல்லா நிலங்களையும் தாமே பயிரிடுவதில்லை. ஒரு பாகத்தை மட்டும் நேரடிச் சாகுபடியில் வைத்துக்கொண்டு, மற்றவற்றைக் குத்தகை மூலமோ, வார முறைப்படியோ சாகுபடி செய்து வருகிறார்கள். இம்முறைகள் பலதரப்பட்ட நன்மையைப் பயக்கின்றன. பெரிய பண்ணைகள் நேரடியான சாகுபடியில் இறங்கிவிட்டால் அக்கிராமத்திலுள்ள குடிபடைகள் அனைவரும் வெறும் பண்ணைக் கூலிகள் ஆகிவிடுகிறார்கள். அவர்கள் நிலத்தில் ஊக்கம் கொண்டு சாகுபடி செய்யத் தூண்டுதல் இல்லாமல் போய்விடுகிறது. மூலதனம் ஏதும் இல்லாத குடிபடைகள்கூட குத்தகைக்கோ வாரத்திற்கோ நிலங்களை வாங்கிக்கொண்டு, தம் நிலம்போல் பாவித்து, சாகுபடி செய்து அறுவடையில் பங்குபெற வசதி ஏற்படுகிறது. நிலம் நன்றாக விளைந்தால் அதில் அவர்கள் பங்கு அதிகரிக்கிறது. ஒருவாறு தாம் பயிரிடுவதில் உள்ள நிலங்களைக் கொண்டு தாங்களே நிலச் சொந்தக்காரர்கள் போல் திருப்தி அடைய வாய்ப்பு உண்டாகிறது. பெரிய பண்ணைகளைக் காட்டிலும் சிறிய மிராசுதார்கள் தங்கள் நிலங்களைத் தாங்களே நேரடியாகப் பயிரிட முன் வருவதில்லை. காரணம் அதிலிருந்துவரும் வருவாய் அவர்கள் குடும்ப க்ஷேமத்திற்குப் போதாது. கிராமத்தில் வசிக்கும் மூலதனமற்ற எளிய குடிபடைகள் முன்வந்து குத்தகைக்கு அந்நிலங்களைவாங்கிச் சாகுபடி செய்கிறார்கள். எனவே கிராமத்தில் வசிக்கும் பெருவாரியான மக்களுக்கு உழுது பயிரிட, தற்போது நிலம் உள்ளது. மூலதனமில்லாத மக்களுக்கு வேறு வாய்ப்புக் கிடைப்பது அரிது. பல சிறிய மிராசுதார்கள் கிராமத்தில் நேரடியாகப் பயிரிட முன்வராததினால்தான் இவர்களுக்கு இத்தகைய குத்தகைப் பயிர்செய்யும் சந்தர்ப்பம். அவர்களுக்குக் கிடைக்கும் லாபம் போதுமா, போதாதா என்பது வேறு பிரச்னை. அதை அதிகரிக்க வழி வேறு.

கமிட்டியார் செய்யும் சிபார்சின் விளைவு என்ன ஆகும் என்று சிந்திக்கவேண்டும். சின்ன மிராசுதார்கள் கமிட்டியார் விதிக்கும் வாரத்தை ஒப்புக்கொண்டு நிலம் வைத்துக்கொள்ள ஆசைப்பட மாட்டார்கள். அவர்களுக்கு நூற்றில் 45 சதம் தான் பங்கு என்றும், பயறு, உளுந்து, வைக்கோல் கிடையாதென்றால், கிஸ்தி கொடுத்து அவர்களுக்கு மிஞ்சுவது மிகக் குறைவாகத்தானிருக்கும். நூறுகலம் விளையும் ஒருவனுடைய நிலத்தில் முப்பது கலம்கூடக் கிடைக்காவிட்டால் ஏன் அவன் அந்நிலத்தை வைத்துக்கொள்ளப் போகிறான்?

விற்கப்போனால் விவசாயிதான் வாங்கலாம் என்ற கட்டுப்பாட்டைக் கமிட்டியார் விதிக்கிறார்கள். நேரடிச் சாகுபடி செய்யும் பெரிய பண்ணைகள் மேலும் நிலம் வாங்கக் கூடாது என்ற கட்டுப்பாடு இருக்கிறது. நேரடிச்சாகுபடி செய்யாதஒருவன் நிலம்வாங்கக்கூடாது (அவனும்நேரடிச் சாகுபடிசெய்ய வருவதாயிருந்தாலொழிய). விவசாயக் கூலிகளும் குடியானவர்களும் வாங்கலாம். பணம் ஏது? ஆகவே இனி நிலம் வாங்குவாரற்றுச் சீரழியும். சிறிய மிராசுதார்கள் வந்த விலை போதும் என்று விற்று ஓடிவிடுவார்கள். வாங்கும் கிராமத்தான்நேரடிச்சாகுபடிசெய்ய முற்படுவான். இதுவரை ஓரளவுக்குச் சௌகரியமாக நிலத்தைக் குத்தகைக்கோ அல்லது வார சாகுபடிக்கோ பயிரிட்டு வந்தவன் சாகுபடி செய்ய நிலமில்லாமல் நிலக்கூலியாக மாறவேண்டி வரும். அல்லது நகரங்களுக்குச் சென்று வேறு அலுவல்களைக் கவனிக்க நேரிடும். அமைதியாக நடந்துகொண்டிருக்கும் கிராம வாழ்க்கையை இச் சீர்திருத்தங்கள் மிகவும் பாதிக்கும்.

தற்காலிகமாக வாரசாகுபடி அல்லது குத்தகைக்கு நிலம் வைத்துவரும் குடியானவர்களுக்கு நன்மை விளையலாம். ஏனென்றால் அவர்களுக்கு நூற்றில் 55 சதம் பயிரில் பங்கு வருகிறது. ஆனால் இது நிரந்தரமாக இருக்க முடியாது. மிராசுதார் நிலத்தை வந்த விலைக்கு விற்றுவிடுவான்; வாங்குகிறவன் சொந்தப் பண்ணை வைத்தால்தான் லாபம் காண முடியும். ஏன், அத்தகைய சொந்த சாகுபடி செய்பவன்தானே நிலங்களை வாங்கமுடியும்.

அப்படியே சொந்த சாகுபடி செய்யும் மக்களாகவே கிராமம் முழுதும் அமைந்துவிட்டார்கள் என்று வைத்துக்கொள்வோம். பிறகு என்ன? பணமில்லாத கிராமத்துக் குடியானவர்கள் கதி என்ன ஆவது? நேரடிச் சாகுபடி செய்யும் உத்தேசததில் ரூ. 250

கிஸ்திக்குள்ள விஸ்தீரணத்திற்கு மேலில்லாத நிலச்சுவான்தார்கள் கிராமங்களில் குடி புகுந்தாலும் உற்பத்தியைப் பெருக்க என்ன உபாயம் செய்யமுடியும்? அதற்கான மூலதனம் அவர்களிடம் கிடைக்காது. கூட்டுப் பயிர் செய்தாலன்றி அவர்கள் நவீன சாதனங்களை உபயோகப்படுத்தி உற்பத்தியைப் பெருக்க முடியாது. இதற்குப் போதிய ஒத்துழைப்பு மனப்பான்மையும் நம்பிக்கையும் நம் தேசத்தில், அதுவும் கிராம மக்களிடம், உண்டாகுமா என்பதை யோசிக்க வேண்டும். கவர்ன்மெண்டார் உதவிக்கு வந்தாலும் காலக்கிரமத்தில் தனி விவசாயி நசித்துவிடுவான். மறுபடியும் நிலப்பரப்புகள் பெரிய கம்பெனிகள் கைவசம் மாறி, மக்களுக்கு அந் நிலங்களில் கூலிவேலை செய்யும் உரிமைதான் எஞ்சி நிற்கும்.

சொந்த சாகுபடி உரிமையும் ரூ. 250 கிஸ்தி மதிப்பிற்கு மேற்படாமலிருக்கவேண்டுமாம். எனவே பெரிய பண்ணைகளும் இதனால் பாதிக்கப்படுகின்றன. பண்ணை எவ்வளவு பெரிதாயிருந்தாலும் ஒரு பாகத்தைத்தான் நேரடிச் சாகுபடியில் வைத்திருக்கிறார்கள். அவர்கள் தற்போது வைத்துக்கொண்டிருக்கிற அளவுக்குமேல் இனி வைத்துக்கொள்ளக்கூடாது. குத்தகைக்கோ வார சாகுபடிக்கோ விட்டிருந்தால் அதையேதான் நீடிக்க முடியும், தம் சொந்த சாகுபடி ரூ. 250 கிஸ்திக்கு மேற்பட்டால்.

மொத்தத்தில் இந்த நிபந்தனைகள் அனைத்தும் கிராம வாழ்க்கையைப் பாதிப்பதோடு நில மதிப்பையும் அதன் விளைச்சலையும் அதிபாதாளத்தில் தள்ளிவிடும். தனிப்பட்ட ஒரு நிலச் சுவான்தாருடைய அடிப்படை உரிமையை மாற்றும் முறையில் பறிமுதல் செய்வதோடு அவனை அடியோடு வேறு தொழிலுக்கு விரட்டி அடித்துவிடும். விவசாயத்தொழில் மிகவும் எளிய குடியானவனுக்குக் கட்டுப்படியாகலாம். வாழ்க்கைத் தரம் சீராக உள்ள நடுக் குடும்பத்தாருக்கு அது லாயக்கில்லை என்று ஏற்பட்டுவிடும்.

அதிகபக்ஷ நிலம் வைத்துக்கொள்ளுதல், அதிகபக்ஷ வார நிர்ணயம், இவை அறவே மாற்றப்படவேண்டும். சொந்த சாகுபடிக்கு ஏற்படுத்தப்பட்ட, அதிகப்பக்ஷ வரம்பு அகற்றப்படவேண்டும். குறைந்தபக்ஷ நிலப் பண்ணையை நிர்ணயிக்க வேண்டும். நேரடிச் சாகுபடி செய்யாதவர்கள் நிலம் வாங்கக்கூடாது என்ற கட்டுப்பாடு குடியானவர்களைப் பெரிதும் பாதிக்கும். குறைந்தபக்ஷ நிலப்பண்ணையை நிர்ணயித்து அதற்குட்பட்ட நிலங்களைக் காலக்கிரமத்தில் தனிப்பட்டாவாக இல்லாமற் செய்வது அவசியம். வார நிர்ணயம் மொத்த மகசூலில் அல்லாமல், விவசாயச் செலவு, விதை, தசுகூலி, அறுவடைக்கூலி, கிஸ்தி, ஸெஸ் எல்லாவற்றிற்கும் ஒதுக்கிய பிறகு எஞ்சியுள்ள கண்டுமுதலில் விகிதம் பிரிப்பது இருதிறத்தாருக்கும் நல்லது. மிராசுதார் பகுதி மூன்றில் இரண்டாகவும், குடியானவன் பகுதி ஒன்றாகவும் நிர்ணயிப்பது நியாயமானதோடு, இருதிறத்தாரையும் திருப்தி செய்யும். பயறு உளுந்து சமபங்கு என்பதுதான் பழக்கம். இதற்கு மாறாக விதிப்பது தவறு. வைக்கோலில் ஒரு பங்கு மிராசுதாருக்கு அத்யாவசியம்.

மொத்தத்தில் குறைந்தபக்ஷ நிர்ணயம் சாலச் சிறந்தது. விவசாயத்துக்கு அத்யாவசியம் அமைதியும் மனக் கசப்பின்மையும். நிலக் கோர்ட் என்றும் தொட்டதெற்கெல்லாம் விவகாரம் என்றும் ஏற்படுத்துவது கிராமங்களில் சண்டை சச்சரவுக்கு அடிகோலுவதாகும். குத்தகைச் சீட்டின் குறைந்தபக்ஷ காலம் மூன்று வருஷம் என்று விதிப்பதே போதுமானது.

கமிட்டி சிபார்சுகளை மிராசுதார்களும், குடியானவர்களும் செவ்வனே புரிந்துகொண்டு அதை மாற்றியமைக்கப் பாடுபடாவிட்டால், நிலைமை சீர்கேடாகிவிடும். கவர்மெண்டார் நீண்ட நோக்கில்லாமல் தற்காலிகமாகப் பெருவாரியாக உள்ள குடிபடைகளுக்கு இச் சீர்திருத்தங்கள் நன்மைபயக்கும் என்று கருதி, அவைகளை அமுலுக்குக் கொண்டுவருவார்களானால், நில உரிமைகள் பாழடைவதோடு, விவசாயம் சீர்குலைந்து போவது திண்ணம்.

# நிலச் சீர்திருத்தம்

சென்னைக் கவர்மெண்டாரால் நிறுவப்பட்ட நிலச் சீர்திருத்தக் கமிட்டியார் தங்கள் முதல் யாதாஸ்தைச் சமர்ப்பித்துள்ளார்கள். அதில் நிலச் சொத்துரிமையைப் பொறுத்த பல அடிப்படையான பிரச்னைகளும் விவசாய சம்பந்தமான பல சிக்கலான விஷயங்களும் மாற்றியமைக்கவேண்டி, சிபார்சுகள் செய்யப்பட்டுள்ளன.

முக்கியமான சிபார்சுகள் பின்வருமாறு:—

இச் சீர்திருத்தங்கள் விவசாய நிலங்களைப் பொறுத்தவையே.

விவசாயி என்பவர் யார் என்று கமிட்டியார் வரையறுத்துள்ளார்கள்.

யாரொருவர் தம் சொந்தப் பொறுப்பில் (1) தம்முடைய உழைப்பினாலோ, (2) தம் குடும்பத்தினருடைய உழைப்பினாலோ, அல்லது (3) பணம் அல்லது தானியக் கூலி வாங்கும் சிப்பந்திகள் அல்லது அன்றாடக் கூலிகள், இவர்களின் உதவியினால், தன்னுடைய அல்லது தன் குடும்ப அங்கத்தினருடைய நேரடி மேற் பார்வையின்கீழ் நிலத்தைச் சாகுபடி செய்கிறாரோ அவர் தான் 'விவசாயி' எனக் கூறப்படுபவர்.

ஸ்திரீகள், மைனர்கள், உடல் அல்லது புத்தி ஸ்வாதீனம் இல்லாதவர்கள், தங்கள் சிப்பந்திகள் அல்லது கூலி ஆட்கள் மூலம் பயிர் செய்தாலும் அவர்கள் நேரடியாகச் சாகுபடி செய்யும் விவசாயி எனக்கருதப்படும். அவிபக்த குடும்பச் சொத்தை, அக் குடும்ப அங்கத்தினர் ஒருவர் சாகுபடி செய்தால் அச் சொத்து நேரடி சாகுபடி செய்யப்படும் சொத்து எனக் கருதப்படும்.

மேலே விஸ்தரித்துள்ள விவசாயிகள் ஜில்லா கலெக்டரிடமிருந்து தாம் புதிதாக விவசாயத் தொழில் செய்யப்போவதாக ஸர்ட்டிபிகேட் பெற்றவர்கள், விவசாயத் தொழிலாளிகள்—இவர்களைத்தவிற மற்ற எவருக்கும் இனி (1951 ஜூலை 1 உக்கு மேல்) நிலங்களை விற்கக் கூடாது.

விவசாயிகள் ரூ 250 கிஸ்தி செலுத்தக் கூடிய நிலப்பரப்புக்கு மேற்பட்ட நிலம் வைத்திருப்பார்களானால், புதிதாக நிலம் வாங்க முடியாது. ஆனால் மேற் கூறிய 'விவசாயி' என்ற இலக்கணத்திற்குட்பட்ட ஒருவர் ரூ. 250 கிஸ்திக்குட்பட்ட நிலம் வைத்திருந்தால், ரூ 250 கிஸ்திக்குட்பட்ட நிலச் சொத்து வரை அவர் புதிதாக வாங்கிச் சேர்த்துக் கொள்ளலாம். 'விவசாயி' அல்லாத நிலச் சுவான்தார்கள் தங்களிடம் தற்போதுள்ள நிலச் சொத்தைத் தவிர, (அது ரூ. 250 கிஸ்திக்குக் குறைவாயிருப்பினும் கூட) இனி நிலம் வாங்கக்கூடாது. அதிகமாயிருப்பின் அதை அவர்கள் அனுபவிக்கலாம். மேலும் வாங்க முடியாது, அவ்வளவே.

அவிபக்த குடும்பங்கள் சம்பந்தப்பட்டவரை அக்குடும்பத்திலுள்ள ஒவ்வொரு பிரிவிற்கும் (நபருக்கல்ல) தனி நில உரிமை கொடுக்கப்படும். ஆயினும் அக்குடும்பத்தின் மொத்த நில விஸ்தீரணம் ரூ. 1000 நிலவரிக்கு மேற்படாமலிருக்க வேண்டும். மேற்கூறிய நிபந்தனைகள் ஒரு வார்சு முறையிலோ அல்லது உயில் மூலமாகவோ பெறும் நிலப்பரப்பைப் பாதிக்கா. அதாவது, இவ்வகையில் நிலம் அடையும் நபருக்கு முன்னமேயே அதிகப் படி அளவு (ரூ. 250 கிஸ்தி அளவு) நிலமிருந்தாலும், இவ்வகையில் அவர் பெறும் நிலத்திற்கு ஓர் விஸ்தீரண வரையறை இடையாது. அது எவ்வளவு பரப்பாயிருந்தாலும் அதை அவர் வைத்துக்கொள்ளலாம்.

புதிதாக விவசாயத்தில் இறங்க ஆசைப்படுபவர்கள் தாங்கள் வாங்க விரும்பும் நிலம் உள்ள ஜில்லா கலெக்டரிடமிருந்து ஒரு ஸர்டிபிகேட் பெற்ற பின்னரே நிலங்களை

வாங்கலாம். இத்தகைய ஸர்டிபிகேட் பெற்றவர்களுக்கு யாரும் நிலம் விற்கலாம். ஆனால் நிலம் வாங்கின மூன்று வருடத்திற்குள் வாங்கினவர் "விவசாயி' என்ற முறைமையில் நேரடி சாகுபடியில் இறங்கா விட்டால், வாங்கிய நிலம் பறிமுதல் செய்யப்பட்டு அதை நில டிரிபியூனல் ஏலத்தில் விற்று, பின்னரே அவர் வாங்கின விலைக்கு அதிகப்படாத நஷ்டஈடு கொடுக்கப்படும்.

கூட்டுறவுச் சங்கங்கள், விவசாயிகள் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள். மைனர்கள், அசக்தர்கள்—தங்களது சொந்த உரிமை காரணமாக "விவசாயி' என்ற கோட்பாட்டுக்குள் வராவிடினும், விவசாயி அல்லாதாருக்கு நிலங்களை விற்க அனுமதிக்கப்படுவார்கள்.

விவசாயத் தொழிலாளர்கள் எப்பொழுது வேண்டுமானாலும் நிலம் வாங்கலாம்.

விவசாயி அல்லாதாருக்கு நிலம் விற்கக் கூடாது என்பதோடு அவர்களுக்கு நிலதானம், பரிவர்த்தனை, நிலத்தையோ அதிலுள்ள உரிமையையோ குத்தகைக்கு விடுதல் அடமானம்வைத்தல் இவையும் கூடாது.

குறிப்பிட்ட தேதியில் (1951 ஜூலை 1 உ) அதிக பக்ஷ நிலத்திற்கு மேல் வைத்துக் கொண்டுள்ள மிராசுதார் ஒருவர் தம் நிலத்தில் ஒரு பாகத்தை விற்பாரேயானால் அவர் விற்ற அளவுக்கு மறுபடியும் அவர் வாங்க அனுமதிக்கப்பட மாட்டாது.

ஒருவருக்கு 50 ஏகரா நிலம் குறிப்பிட்ட தேதியில் உள்ளது என்று வைத்துக் கொள்வோம். இதற்கு ரூ 1000 கிஸ்து என்று வைத்துக் கொள்ளுங்கள். ரூ 250 கிஸ்துக்கு மேல் நிலம் வைத்துக் கொள்ளக் கூடாது என்ற நிபந்தனை அவரைப் பாதிக்காது என்று மேலே குறிப்பிடப்பட்டது. அந்த 50 ஏகரில் அவர் 25 ஏகராவை விற்றால், அவர் அதிக பக்ஷமாக வைத்துக்கொள்ளக்கூடிய அளவு 25 ஏகராதான், 50 அல்ல. பின்பு அவர் மறுபடியும் 25 ஏகரா வாங்கிச் சேர்த்துக்கொள்ள முடியாது. ஆயினும் அவர் 45 ஏகராவை விற்று விட்டால், பிறகு இஷ்டப்பட்ட போது அவர் நேரடி சாகுபடி செய்யும் 'விவசாயி' யாக இருந்தால் ரூ. 250 க்கான கிஸ்தி உள்ள ஏகரா நிலம் வாங்கிச் சேர்த்துக் கொள்ளலாம், அவ்வளவே.

வரையறுக்கப்பட்ட அதிக பக்ஷ நிலத்திற்குமேல் (ரூ 250 கிஸ்திக்கு மேல்) ஒருநபர் வாங்கினால், அப்படி அதிகப்படியாக உள்ள நிலங்கள் நஷ்ட ஈடின்றிப் பறிமுதல் செய்யப்படும்.

நிலச்சுவான்தார்கள், அவர்கள் நிலங்களை வாரம் அல்லது குத்தகை மூலம் சாகுபடி செய்யும் குடியானவர்கள் என்ற இரு பாகுபாட்டை மாற்றக் கமிட்டியார் உத்தேசிக்கவில்லை. ஆனால் அம்முறையில் சீர்திருத்தங்கள் மட்டும் செய்திருக்கிறார்கள்.

பிறருக்குச் சொந்தமான—நிலச்சுவான்தாரரால் நேரடியாகப் பயிரிடப்படாத—நிலத்தை எவரொருவர் சட்டபூர்வமாக உழுது பயிரிடுகிறாரோ, அவர்தான் குடியானவர். (1) நிலச்சுவான்தாருடைய குடும்ப அங்கத்தினர் (2) பணம் அல்லது தானியத்தை ஊதியமாகப்பெற்று வேலைசெய்யும் சிப்பந்தி அல்லது நிலச்சுவான்தாரரின் அல்லது அவர் குடும்ப அங்கத்தினரின் நேரடி மேற்பார்வையில் சாகுபடி செய்வதற்காக அமர்த்தப்பட்டிருக்கும் கூலி ஆள் (3) நிலப் போக்யம் வாங்கியிருக்கும் நபர்—இவர்கள் 'குடியானவர்கள்' என்று கருதப்படமாட்டார்கள். ஆனால் விளைந்துவரும் பயிரில் பங்குபெற்று விவசாயம் செய்யும் வாரம்தார்கள் குடியானவர்கள் என்று கருதப்படுவர்.

ரயத்துவாரி நிலங்களில் மேலே குறிப்பிட்ட குடியானவர்களுக்கு குடிவார பாத்தியம் கிடையாது.

கவர்மெண்டார் சட்டபூர்வமாக நியாயமான அதிகபக்ஷ வாரம் அல்லது குத்தகை இவ்வளவுக்கு மேற்படக்கூடாது என்பதை நிர்ணயிக்கவேண்டும். அது மொத்தக் கண்டு முதலில் இவ்வளவு பங்கு என்று நிர்ணயிக்கப்படவேண்டும். அதிகபக்ஷ வாரம் கீழ்க் கண்டவாறு நிர்ணயிக்கப்படலாம் என்று கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. மொத்த மகசூல் 100 என்றால்

| நெல் | நிலச்சுவான்தார் பங்கு | குடியானவர் பங்கு |
|---|---|---|
| முதல்தரநிலங்கள் | 45 | 55 |
| இரண்டாம்தர நிலங்கள் | 40 | 60 |
| வியாபாரப் பயிர்கள் | 40 | 60 |
| (புன்செய், நன்செய் நிலங்களில் பயிராகும் மஞ்சள், கரும்பு, வெங்காயம், வாழை, நிலக்கடலை, வெற்றிலை, பருத்தி முதலியன. | | |
| மற்றத் தானியங்கள் | 40 | 60 |

இந்த நியாயப் பகுதி தேங்காய் மாங்காய் முதலிய பழம் கொடுக்கும் நிலங்களைக் கட்டுப்படுத்தாது.

உளுந்து, பயறு, முதலியன முழுமையும் குடியானவர்களைச் சேரவேண்டியதே. வைக்கோலும் அவர்களுக்குத்தான். நிலவரி, தண்ணீர்ப் பாசன வரி, உள்ளூர் ஸெஸ் முதலிய வரிகளை மிராசுதாரே கொடுக்க வேண்டும். உழவு மாடு, சாகுபடி சாமான்கள், விதை, தசுகூலி, உரம் எல்லாம் குடியானவன் கொடுக்கவேண்டும். இதில் தகராறுகள் வந்தால் நில டிரிபியூனல்கள் அதைத் தீர்த்து வைப்பார்கள்.

மொத்த மகசூல் என்றால் அறுவடைச் செலவுகள் கழிக்கப்படாத கண்டு முதல்.

மேலே குறிப்பிட்ட நியாய வாரத்திற்கு மேலாக எந்த மிராசுதாராவது குடியானவரிடமிருந்து வசூலித்தால், அந்த அதிகமாக வசூலிக்கப்பட்டதைத் திருப்பிக்கொடுக்கும்படி நேரிடுவதோடு, அதேபோல் ஐந்து மடங்கு அபராதம் கொடுக்க நேரிடும்.

நியாய வாரம் அல்லது குத்தகை என்ன என்பதை நிர்ணயிக்கும் பொறுப்பு நில டிரிபியூனல்களிடம் ஒப்படைக்கப்படும். அவை, ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர், மிராசுதார், குடியானவர், விவசாயக் கூலிகள் இவர்களின் பிரதிநிதிகள் அடங்கியவையாக இருக்கும்.

இனிமேல் எல்லாக் குத்தகைகளும் குறைந்த பக்ஷம் 5 வருடத்திற்குட்படாமலிருக்க வேண்டும்.

குத்தகைச் சீட்டு எழுத்து மூலம் இருக்க வேண்டும். ஆனால் அதை ரிஜிஸ்டர் செய்யத் தேவையில்லை. இதற்கான சட்டம் கவர்மெண்டார் செய்ய வேண்டும்.

அது அமுலிலிருக்கும் கால அளவிற்குள் குத்தகையை ரத்துச் செய்ய வேண்டுமானால் அதைக் கீழ்க்கண்ட காரணங்களால் தான் செய்ய முடியும். (1) குத்தகையில் குறிப்பிட்ட காலக் கெடுவிலிருந்து ஒரு மாதத்திற்குள் பகுதியைத் தராமலிருத்தல். (2) நிலத்திற்கு நிரந்தர ஹானி உண்டாகும்படியான காரியம் செய்தல் (3) நிலத்தை விவசாயத்திற்கன்றி வேறு விதத்தில் உபயோகப்படுத்தல். (4) குத்தகையில் கண்டுள்ள பயிர் சம்பந்தமான நிபந்தனைகளுக்கு மீறி நடத்தல். (5) உள் குத்தகைக்கு நிலத்தை விடுதல். (6) குடியானவன் இன்ஸால்வெண்ட் என்று கோர்ட்டாரால் தீர்மானிக்கப்படுதல்.

வேறு எக்காரணத்தைக் கொண்டும் குத்தகையைக் கால அளவிற்குள் ரத்துச்செய்ய முடியாது.

ஒரு குத்தகை அமுலிலிருக்கும்பொழுது, மிராசுதார் தாமே நேரடியாகச் சாகுபடி செய்யவேண்டுமென்று நிலத்தை மீட்டுக் கொள்ள முடியாது.

ஓர் நிலம் விற்பனையினால் கைமாறி விட்டாலும், குறிப்பிட்ட கால அளவுவரை அந்நிலத்தைச் சாகுபடி செய்யும் குடியானவனை மாற்ற முடியாது. ஓர் குடியானவர் இறந்து விட்டால், அவருடைய வார்சுகள் அவர் குத்தகைக்கு வைத்திருந்த நிலத்தைக் குத்தகைப் பத்திரத்தில் கண்டுள்ள கால அளவு முடியும்வரை அதே வரம்பிற்குட்பட்டு, சாகுபடி செய்துவர உரிமை உள்ளவர்களாவர்.

குத்தகை வாரம் விஷயமாக ஏற்படும் தகராறுகளை விசாரிக்க ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்களுக்கும், இதற்கென ஆங்காங்கு ஏற்படுத்தப்படும் ரெவின்யூ கோர்ட்டுகளுக்கும் அதிகாரம் உண்டு. இதே அதிகாரிகள் குத்தகைப் பாக்கியைப் பற்றின தாவாக்களையும் விசாரிப்பர். இதற்கு அப்பீல் ஜில்லா கலெக்டரிடம், அதற்குமேல் ரெவின்யூ போர்டாரிடம்.

பெரிய பட்டாதார்களும், தர்ம மதபரிபாலக ஸ்தாபனங்களும் ஏலத்தில் சிலருக்குத் தங்கள் நிலங்களைக் குத்தகைக்கு விட்டுவிடுகிறார்கள். இவர்கள் மொத்தப் பணம் மிராசுதாருக்குக் கொடுத்து விடுகிறார்கள். பிறகு அந் நிலங்களை கூறுகூறாகப் பிரித்து, சில்லறைக் குடியானவர்களிடத்தில் குத்தகைக்கு ஒப்படைத்து அவர்களைக் கசக்கிப்பிழிந்து லாபம் சம்பாதிக்கிறார்கள். அல்லது தாமே கூலியாட்களை வைத்துச் சாகுபடி செய்கிறார்கள். இவர்கள் உண்மையான விவசாயிகள் அல்லர். நியாயமான பகுதி நிர்ணயம் இத்தகைய,(மிராசுதாருக்கும் குடியானவனுக்கும் நடுவில் இருந்து கமிஷன் அடிக்கும்) பேர்வழிகளுக்குச் சாதகம் செய்வதற்கேற்பட்டதல்ல. எனவே இவர்களை அகற்றுவதற்குச் சட்டபூர்வமான ஏற்பாடுகள் உடனே செய்யவேண்டும். நேரடியாகத் தர்ம, மதஸ்தாபனங்கள் குடியானவர்களிடம் நிலத்தைக் குத்தகைக்கு ஒப்படைக்கவேண்டும்.

மேலே குறிப்பிட்ட சீர்திருத்தங்கள் குடியானவர்களை மிகவும் பாதிக்குமாகையால், நேரடியாக மிராசுதார்கள் சாகுபடி செய்யும் அதிகபக்ஷ விஸ்தீர்ணத்தை நிர்ணயிக்க வேண்டும்.

ஒருவன் ரூ. 250 கிஸ்தி செலுத்தக்கூடிய நிலத்திற்கு மேல் நேரடிசாகுபடி செய்து வரக்கூடாது. அதாவது அதற்கு மேற்பட்டுள்ள நிலங்களை வாரத்திலோ அல்லது குத்தகையிலோதான் சாகுபடி செய்யலாம்.

குறிப்பிட்ட தேதியில் மேலே நிர்ணயிக்கப்படும் விஸ்தீரணத்திற்கு மேற்பட்டு நேரடி சாகுபடி செய்துவரும் விவசாயிகளை இந்த அதிகபக்ஷ நேரடி சாகுபடி நிர்ணயம் பாதிக்காது. அவர்கள் அன்று எவ்வளவு நேரடி சாகுபடி செய்துவந்தார்களோ அந்நிலத்தைத் தொடர்ந்து நேரடி சாகுபடியில் வைத்துவரலாம்.

குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு அதிகபக்ஷம் என்று நிர்ணயிக்கப்பட்ட விஸ்தீரணத்திற்குமேலுள்ள நிலங்களை நேரடி சாகுபடி செய்துவரும் விவசாயி அப்படி அதிகமாக நேரடி சாகுபடியிலிருந்து வரும் ஒரு பகுதியைக் குத்தகைக்கு விட்டால், பின்பு விட்ட அளவை அவன் மீண்டும் தன் நேரடி சாகுபடி விஸ்தீரணத்தில் எக்காலத்திலும் சேர்த்துக்கொள்ள முடியாது. ஆனால் அப்படி அவன் குத்தகைக்கு விடுவதினால் அவன் நேரடி சாகுபடி செய்யும் நிலம் ரூ. 250 கிஸ்திக்குக் குறைந்துபோனால் அவன் ரூ. 250 கிஸ்தி செலுத்தும் அளவுக்கு நேரடி சாகுபடிக்கு, பின்பு நிலத்தை மீட்டுக்கொள்ளலாம்.

மிராசுதாரின் வாரிசுகள் தங்களுக்குண்டான நிலப் பகுதியை பெறுங்கால், அப்பகுதி குறிப்பிட்ட அளவிற்கு மேலாக இருக்குமானால் அவர்கள் நேரடி சாகுபடி செய்யும் உரிமை பாதிக்கப்படாது.

குடியானவர்களில் பெரும்பாலோர் பயனடையும் பொருட்டு, அவர்கள் பயிரிடும் நிலப்பரப்பு இவ்வளவுக்குமேல் இருக்கக் கூடாது என்று நிர்ணயிப்பது அவசியம். ஒரு குடியானவன் ரூ. 50 கிஸ்தி செலுத்தக் கூடிய நிலப்பரப்புக்குமேல் நிலத்தைக் குத்தகைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது.

குறிப்பிட்டுள்ள அளவைமீறி நிலத்தை நேரடி சாகுபடியில் வைத்துக்கொள்ளும் மிராசுதார்கள், வரம்பை மீறின நிலத்தைப் பறிமுதல் கொடுக்க வேண்டிவரும். அதற்கு நஷ்டஈடு கிடையாது. அதேமாதிரி, குடியானவர் குறிப்பிட்ட அளவிற்கு மீறி, குத்தகைக்கு நிலம் வைத்துக்கொண்டால், மீறின நிலத்தைப் பொறுத்த குத்தகை ரத்தாவதுடன், அவர் அபராதமும் கொடுக்க நேரிடும்.

தினசரி விவசாயக் கூலிகளின் ஊதியம் அவனுடைய அத்தியாவசிய தேவைக்குப் போதியதாக இருத்தல் வேண்டும். குறைந்தபக்ஷக் கூலி தொழிலாளியின் குறைந்த பக்ஷ வேலைத் திட்டத்தையும் ஒத்ததாக இருக்கவேண்டும். வேலை செய்யும் நேரம், விடுமுறை நாட்கள் இவைகளை இத் தேசத்தில் நிர்ணயிப்பது அர்த்தமற்றது என்று கமிட்டி கூறுகிறது. நில டிரிபியூனலே கூலி நிர்ணயிக்கும் போர்டாக மாறி, கூலியை நிர்ணயம் செய்யும். ●






எஸ். கோமதி சுப்ரமணியம்

தெருவின் கலகலப்பெல்லாம் இரவின் மௌனத்திலடங்கி வெகு நேரமாகி விட்டது. ஊரடங்கி ஒரு ஜாமத்திற்கு மேலே யிருக்கும். எங்கும் இருளின் அந்தகாரம். பயங்கரம் சூழ்ந்த இரவின் மௌனத்தைக் கலைத்தவாறு தொடர்ந்து நடந்துகொண்டிருந்தது எங்களிருவரின் சம்பாஷணை.

'விமலி, உன் அம்மாவுக்குத்தான் உன் பேரில் அக்கரையில்லை யென்றால் உனக்குக் கூட உன் உடம்பைப்பற்றிக் கவலையில்லையா? பகலில்தான் குழந்தைகள் ஹிம்சை என்றால் இரவிலாவது நிம்மதியாக ஒய்வெடுத்துக் கொள்ளவிடாமல் உன் அம்மாவின் தொண தொணப்பா......' என்று எச்சரிக்கை விடுத்தார்கள் அப்பா.

பல வருஷங்களுக்கப்பால் வடநாட்டு அனுபவத்திலிருந்து விடுபட்டு, பிறந்தவீடு திரும்பியிருக்கும் எனக்கும் என் அம்மாவுக்கும் பேசுவதற்கா விஷயம் அகப்படாது. வீடுகூட்டி வீராயி முதல் பேங்க் செக்ரடரி செல்லம்பிள்ளை வரையிலும் அந்தத் தெருவிலுள்ள அத்தனைபேரின் க்ஷேமலாபங்களைப் பேசித் தீர்ப்பதெனக் கங்கணம் கட்டிக் கொண்டிருந்தவர்களைப் போல் பேசிமுடித்தோம்.

என் சிரமம் அப்பாவுக்குப் பொறுக்கவில்லை. அப்பாவின் முணுமுணுப்பு அம்மாவுக்குத் தாங்கவில்லை.

ஏதடா இத்தனை வருஷங்களுக்குப்பின் சந்தித்த குழந்தையிடம் ஆசையார நாலு வார்த்தை பேசுவதற்குக்கூட, தடையுத்தரவு போடுகிறார்களே என்கிற ஆதங்கம்.

"ஆமாம், உங்கள் நித்திரைக்குப் பங்கம் வருவதாயிருந்தால் மாடிப்பக்கம் போவது தானே" என்றாள் அம்மா.

அதுதான் உசிதமெனப் பட்டதோ என்னவோ, படுக்கையைச் சுருட்டிக் கொண்டு மாடிக்குப் புறப்பட்டு விட்டார்கள் அப்பா.

"இதுவரை எத்தனையோ பேர்களுடைய வாழ்க்கைக் குறிப்புகளைப் புரட்டி விட்டாயே அம்மா. என் லலிதையைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே!" என்றேன்.

'உம், எந்த லலிதை?' என்று அம்மா இழுத்தாற்போல் அசுவாரஸ்யமாகப் பதிலளித்தாள். இதுவரை கடல் மடை திறந்தது போல் முழங்கிச் சிவந்த வார்த்தைக் கொப்புளங்கள இப்பொழுது உள்ளடங்கிப் போவானேன்? கரும் போர்வைத் திரையிட்டதுபோலக் கன்னங்கரேலென்றிருந்த அந்த மையிருட்டில் அம்மாவின் முக பாவம் என் கண்களுக்குப் புலனாகவில்லை. அவள் அசிரத்தை காட்டிய அந்தப் பேச்சு என் பரபரப்பைத் தட்டியெழுப்பியது.

'என்னம்மா அப்படிக் கேட்கிறாய்; மூன்றாவது வீட்டு லலிதை எனது பள்ளித் தோழி. பள்ளித் தோழி மட்டுமல்ல. உயிருக்குயிரான ஆப்த லலிதையைப்பற்றி உனக்குத் தெரியாது?"

"ஏன் தெரியாது அந்தப் பயித்தியத்தைப் பற்றி?"

"ஆ பயித்தியமா" என்று திடுக்கிட்டேன். யாருக்கம்மா பயித்தியம்? நீ என் லலிதையைத் தெரிந்துகொண்டு சொல்லுகிருயா அல்லது யாராவது ஆள் மாருட்டமாக?" என் குரலில் தேங்கிய நடுக்கம் அப்பாவின் இதயத்தை நன்ருகத் தொட்டிருக்க வேண்டும்.

"சட், அர்த்தராத்திரியில் வேண்டாததையெல்லாம் பேசிக் குழந்தையின் மனதைக் குழப்பாதே என்று எத்தனை தடவை முட்டிக் கொள்வது" என்று அம்மாவைக் கடிந்து கொண்டார்கள் அப்பா.

அப்பாவுக்கு வேண்டாத விஷயமாக இருக்கலாம். ஆனல் என் இதயத்தின் ஒவ்வொரு அணுவும லலிதையின் சரிதையை அறிவதில் துடித்துக்கொண்டிருந்தது என்பது அப்பாவுக்கு எப்படித் தெரியும். அதற்குமேல் சம்பாஷணையைத் தொடர்ந்தால் உண்மையாகவே அப்பாவின் ஆக்ரோஷத்துக்கு ஆளாக நேரிடும் என்பது தெரியும். ஆகவே அத்துடன் நிறுத்தப்பட்டது அன்றைய சம்பாஷணை.

தாயின் அதட்டலுக்குப் பயந்து கண்ணை மூடிக்கொண்டு தூங்குவதாகப் பாசாங்கு செய்யும் குழந்தைபோல, முகத்தைப் படுக்கையில் புதைத்துக் கொண்டிருந்தேன். ஆனல் என்னவோ அடக்குமுறைத் தடையுத்தரவு எதற்கும் கட்டுப்படாமல் எல்லை மீறிச்சென்று லலிதையின் கடந்தகால வாழ்வைநோக்கி வட்டமிட்டது.

2

எனக்கு விவரம் தெரிந்த நாளிலிருந்தே லலிதையும் நானும் ஒரே வாசலில் குடியிருந்தோம். குழந்தைகளாகப் பொம்மை வைத்து விளையாட ஆரம்பித்ததிலிருந்து பள்ளிக்கூடப் படிப்பு முடியும்வரையும் ஒன்ருகவே இருந்தோம். ஏன் அதன் பிறகும் இரண்டு வருஷ வாழ்க்கை ஒன்ருகவேதானிருந்தோம். அப்பொழுதுதான் பார்க்கவேண்டும். இந்த உலகத்தையே அளந்து விட்டவர்கள்போல் பேசுகிற பேச்சும், கட்டிலடங்காத கற்பனைக்கோட்டைகளும் பிரமாதமாக அடிபடும் எங்கள் சம்பாஷணையில்.

"லட்சியம் லட்சியம் என்கிருர்களே லட்சியம் என்ருல் என்னடி விமலா?" என்பாள் என்னிடம்.

"ஏதாவது ஒரு தீர்மானத்தை மனதில் கொண்டு, தான் கொண்ட தீர்மானத்தைச் செய்து முடிப்பதுதான் லட்சியம்" என்று எல்லாம்தெரிந்தவள்போலக் கதைவிடுவேன் அவளுக்குச் சளைக்காமல்.

"அப்படியானல் நீ ஏதாவது தீர்மானம் கொண்டிருப்பாயல்லவா?" என்று என்னையே திருப்பி மடக்குவாள்.

"நான் ஒன்றும் லட்சியவாதியில்லையம்மா. என்வரை எனக்கெனத் தனித்தீர்மானம் எதுவுமே இருந்ததில்லை இதுவரை..."

"ஆனல் இனிமேல் கடைப்பிடிப்பாயாக்கும்......?"

"நான்தான் அப்பொழுதே சொல்லிவிட்டேனே லட்சியவாதி யில்லையென்று. உன்னுடைய பேச்சுத்தான் நீ ஏதோ லட்சியம் கொண்டிருப்பதாகப் பறை சாற்றுகிறது. ஆமாம், லலிதா! உண்மையாகவே கேட்கிறேன், உன் மனதில் எதையாவது லட்சியமாகக் கொண்டிருக்கிருயா? அப்படி ஏதாவது இருந்தால் என்னிடம் சொல்லிவிடம்மா முதலில்" என்றேன்.

"அப்படிக் கேள் விமலா. இதோ உன் கேள்விக்குப் பதில். நான் கொண்டுள்ள லட்சியம் என்னவென்றுதானே கேட்கிருய்?



"பாரதத்தில் பெண்கள் பேருக்கேற்பட்டுள்ள பல அவப் பெயர்களையும் துடைக்க முயல வேண்டும்."

"ஏது ஏது பெரிய போடாக வல்லவா இருக்கிறது உன் லட்சியம்? ஆமாம், நான்தான் கேட்கிறேன்; இப்பொழுது எந்தப் பெண்ணுக்கு என்ன அவப் பெயர் வந்துவிட்டதாம். எனக்குத் தெரிந்தவரை பெண்கள் சுகவாசிகளாகத்தான் வசித்து வருகிறார்கள்."

"நீயும் நானும் வேண்டுமானால் சுகவாசிகளாக இருக்கலாம். அனாதைகளாகத் திரியும் அபலைகள் எத்தனை எத்தனையோ, காரணமில்லாமலே பழிச் சொல் தாங்கும் பாவையர் எத்தனையோ. உதாரணமாக எடுத்துக்கோயேன்; உலகத்தில் சிற்றன்னை என்ற பெருக்கே கொடுமைக்காரி என்று அர்த்தம் கற்பித்து விடுகிறார்களே; கொடுமைப் படுத்தாத சிற்றன்னையே வாழ்க்கையில் காண முடியாதா......"

இந்த ரீதியில் போகும் அவள் பேச்சு. 'உன்னுடைய புதிர் எனக்குப் புரியவில்லை' என்று எனது தோல்வியை ஒப்புக்கொண்டு விடுவேன். அன்றும் அவள் பேச்சு புரியாத புதிராக இருந்தது. இன்றும் அவள் வாழ்க்கை புரியாத புதிராகத்தான் நின்றது என் கண்முன்.

3

மறுநாள் காபி சாப்பாடு முடிந்தது. அப்பா ஆபீஸிற்குச் சென்றதின்பின் அரைகுறையாக நின்றுபோன சம்பாஷணையைத் தொடங்கி வைத்தேன்.

"ஆம் அம்மா, அந்த லலிதாவைப்பற்றிப் பாக்கி ஒன்றுமே சொல்லவில்லையே, பைத்தியம் என்பதோடு நிறுத்திவிட்டாயே" என்று அம்மாவின் முகத்தை ஏறிட்டு நோக்கினேன்.

என் அன்புத் தோழியின் வாழ்க்கைக் குறிப்பின் ஏட்டைப் புரட்டப் போகும் அம்மாவின் முகத்தை ஆவல் ததும்ப நோக்கிக்கொண்டிருந்தேன்.

"என்னத்தைச் சொல்ல இருக்கு அந்தப் பயித்தியத்தைப்பற்றி" என்ற பதில் ஆசையுடன் காத்திருந்த என்னை முகத்திலடித்தாற்போலிருந்தது.

"அம்மா அவள் எப்பொழுது பைத்தியமானாள்; ஏன் பயித்தியமானாள்?" என்று சரமாரியாகக் கேள்வியைத் தொடுத்து அம்மாவைத் திணற அடித்தேன்.

"அதையெல்லாம்பற்றி எனக்கென்ன ஜோஸ்யமா தெரியும்? உனக்கு ஆசையுண்டானால் அந்தப் பயித்தியத்தையே வேண்டுமானால்போய்க் கேள்" என்றாள். அம்மாவின் குரலில் தொனித்த ஏளனம் எனக்குச் சற்று ஆத்திரத்தை மூட்டிற்று.

"இந்தாம்மா, இன்னொரு தடவை என் காது கேட்க அவளைப் பைத்தியம் என்று ஏளனம் செய்யாதே. நன்றாக நிலையைப் பரிபூரணமாக ஆராயாமலே அவர்களைப்பற்றிக் கண்டபடி முடிவுகட்டிவிடுவதுதானே உலக இயல்பு. அதிருக்கட்டும், அவளையே போய்க்கேள் - என்றாயே, அவள் எங்கிருக்கிறாள்? இந்த ஊரில்தானிருக்கிறாளா? அவளிருக்குமிடம் உனக்குத் தெரியுமாம்மா?" என்று கோபத்தை மட்டுப்படுத்திக் கொண்டு குழைவாகக் கேட்டேன்.

"விமலி, இத்தனை வருஷங்களுக்கப்பாலும் உங்களன்பு குன்றாமல் ஒளிவீசிக்கொண்டிருக்கும் என்கிற எண்ணத்தை மறந்து, உன் மனம் புண்படப் பேசிவிட்டதைப் பொருட்படுத்தாதே. அவளிருக்குமிடத்தை நம் வேலைக்காரி வந்தவுடன் கொண்டு போய்க் காண்பிக்கச் சொல்கிறேன், சாயந்திரம் போய்ப் பார்த்துவிட்டு வா" என்று மனம் கனிவுடன் மொழிந்தாள் அம்மா.

"சாயந்திரம் வரையிலும் என்னால் பொறுமையுடன் காத்திருக்கமுடியாதம்மா; இப்பொழுதே சென்று திரும்பிவிடுகிறேன்" என்று புறப்பட ஆயத்தமானேன்.

என் ஆதங்கத்தில் குறுக்கிட விரும்பாதவள் போல் அம்மா தன் காரியத்தைக் கவனிக்கப் போனவள் எதையோ நினைத்துக் கொண்டவள் போல் நானிருக்குமிடம் திரும்பினாள்.

"விமலி, உன் மன விருப்பத்திற்காக நீ மட்டும் வேண்டுமானால் போய்விட்டுவா. குழந்தைகள் ஒன்றையும் அழைத்துச் செல்லாதே, ஆமாம், சொல்லிவிட்டேன். அவள் பைத்தியமானதிற்குக் காரணமே குழந்தைதான் என்றும் சொல்லிக் கொள்கிறார்கள். அதோடுமட்டுமல்ல, எதிரே எந்தக் குழந்தைகளைக் கண்டாலும் அவள் பைத்தியம் ஜாஸ்தியாகிறதாம்" என்று எச்சரித்தாள்.

அதே சமயம் வேலைக்காரி அங்கே வந்துவிடவே, "இந்தா செல்லம்மா, நம்ம சின்னம்மாவை மேலத்தெரு பைத்......" நறுக்கென உதட்டைக் கடித்துக் கொண்டாள் அம்மா.

'ஆமாம், மூன்றாவது வீட்டிலிருந்தாளே லலிதா, அவள் வீட்டிற்கு என்னை அழைத்துப்போ' என்றேன்.

'ஏம்மா வந்ததும் வராததுமாய் அந்தப் பயித்தியத்தையா அவசர.........?'

நான் என்ன சொல்லிவிடுவேனோ என்று பயந்த அம்மா செல்லம்மாவுக்குக் கண்ணால் ஏதோ ஜாடை காட்டினாள். சரி, போகலாமென்று முன் நடந்தாள் செல்லம்மாள்.

4

வீட்டு வாயிற்படியில் அடி எடுத்து வைத்ததும் ஏனோ என்னையறியாமல் மனம் திக் திக் கென அடித்துக்கொண்டது.

என் ஆருயிர்த் தோழியை எந்நிலையில் காணப் போகிறேனோ. எத் தோற்றத்தில் காட்சி யளிக்கப் போகிறாளோ என்கிற பதைப்புடன் வீட்டினுள் நுழைந்தேன்.

முதன்முதல் என் எதிர் பட்டது லலிதாவின் அம்மாதான். அடியோடு உருமாறிப் போயிருந்த அந்த அம்மாவின் வதனம் விசனத்தால் சோபை யிழந்து காணப்படுவதுபோல் தோன்றியது என் கண்களுக்கு. அவர்கள் குசலப் பிரசனம் விசாரித் ததைக்கூடச் சரியாகக் கவனிக்க முடியாமல் என் எண்ணம் முழுவதும் லலிதாவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது......

என் குறிப்பை அறிந்துகொண்டதைப்போல் அந்தம்மாள் 'அதோ பார்; உன் தோழி லலிதா, என்று பக்கத்து அறைப்பக்கம் சுட்டிக் காட்டி னார்கள். அதே சமயம் அவ்வறையினின்றும் வெளிப்பட்ட ஓர் உருவம் ஓடிவந்து என்னை இறுகக் கட்டிக்கொண்டது. அதன் பலமான இரும்புப் பிடியினின்றும் என்னை விடுவித்துக் கொள்வதற்கு என்பாடு பெரும்பாடாகிவிட்டது. எதிரே நின்ற உருவத்தைக் கண்டதும் என்னையறி யாமலே என் கண்களில் நீர் தளும்பி நின்றது. வாய்திறந்து ஏதுவும் பேசாமல் எதிரே இருந்த என்னையே வெறிக்க வெறிக்க நோக்கிக்கொண் டிருந்தாள் லலிதா.

உலகத்தையே தன் கைக்குள் நிர்ணயித்துவிடு வதைப்போல் வீரம்பேசும் வீர லலிதை எங்கே மறைந்துவிட்டாள்? லட்சியம் லட்சியமென்று லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டு இடி முழக்கம்போல் கர்ஜிக்கும் அவள் கம்பீரக்குரல் எங்கு மறைந்துவிட்டது? எது வந்தாலும் நிக ரில்லை என்று வீரம்பேசும் அவள் விழிகள் இன்று ஏன் எதை நோக்கினும் அச்சம் கொண்டதைப் போல் மருண்டு விழிக்கின்றன? சஞ்சலமே கண் டறியாத அக்கண்களுக்கு எங்கிருந்து வந்தது இந்த மருட்சி?

பல திசைகளிலிருந்து சிந்தனை அலைகள் வந்து மோத, நாம் யாரென்பதே அவள் அறியமுடியா மல்தான் வீடு திரும்ப நேருமோ என்பதை நினைத்தபோது என்னை யறியாமலே விசனம் மேலிட்டது. முடிந்தவரை முயற்சிசெய்து பார்த்துவிட்டுத்தான் அப்பால் நகருவது என்று திடம் செய்துகொண்டு துணிவுடன் அவள் கரம் பற்றினேன்.

"லலிதா என்னைத் தெரிகிறதா?" என்ற கேள் வியை எழுப்பி அவள் சுவாதீனத்தைப் பரிசீலனை செய்தேன்.

"ஏன் தெரியாது? என் அடிப்படை விமலாவை என்றால் மறக்கமுடியுமா?" என்று டக்கெனப் பதிலளித்தாள் லலிதா.

அவள் பதில் என்னை ஒருகணம் ஆச்சரியத்தில் மூழ்கடித்தது. எந்த விஷயத்தையும் ஆராய்ந்தறி யாமலே முடிவுகட்டிவிடுகிறது உலகம் என்று தான் எண்ணினேன் ஒரு நிமிஷம். ஆனால் அடுத்த கணம் அவளிடமிருந்து எழுந்த அந்தப் பேய்ச்சிரிப்பு என்னைத் திகிலடையச்செய்தது.

அந்தப் பேய்ச்சிரிப்பில் ஒலி அடங்கி வெகு நேரமாகியும் என் இதயத்துள் எழுந்த அதிர்ச்சி அடங்கவேயில்லை,

பைத்தியத்துடன் போராடவந்த என்னையும் ஒரு பைத்தியமாகக் கருதிவிட்டாளோ என்னவோ செல்லம்மா.

"ஏ சின்னம்மா, நீ இப்போ வீட்டுக்கு வரப் போறியா, அல்லது நான் போவட்டுமா" என்றாள்.

"ஆம் செல்லம்மா, நீ போய்க் குழந்தைகளைப் பார்த்துக்கொள். நான் இன்னும் சிறிது நேரத் தில் வந்துவிடுகிறேன்" என்று அவளை வழியனுப்பி னேன்.

எனக்கும் செல்லம்மாவுக்கும் நடந்த சம்பா ஷணையை உற்றுக் கவனித்துக்கொண்டிருந்த லலிதா சட்டென என் பக்கம் திரும்பினாள்.

"விமலா, உனக்குக் குழந்தைகள் இருக்கின் றனவா? எத்தனை குழந்தைகள்? அவர்களை அழைத்து வந்தாலென்ன?' என்று சரமாரியாகக் கேள்விகளை அடுக்கினாள் லலிதா.

அவளது போக்கு ஒன்றும் புரியாமல் மலைத் துப் போய் நின்று கொண்டிருந்த என்னைக் கை யைப் பிடித்து அவள் அறைக்குள் அழைத்தாள். 'விமலா, நீ கூட மற்றப் பயித்தியக்கார மனிதர் கள்போல என்னைப் பயித்தியம் என்று நினைக் கிறாயா?' என்று அவள் கேட்ட கேள்வி என் மனதை என்னவோ வேதனைக்குள்ளாக்கிற்று.

'அதெல்லாமொன்றுமில்லை லலிதா, அப்படி நினைப்பதாயிருந்தால் உன்னைப்பார்க்க வருவேனா' என்று இருக்கிற தைரியத்தை யெல்லாம் வர வழைத்துக்கொண்டு அவள் இழுக்கிற இழுப்புக் கிசைந்து அவள் அறைக்குச் சென்றேன்.

'அப்படிச் சொல் என் அன்புத்தோழி! நீயும் எங்கே பைத்தியமென்று என்னை ஒதுக்கிவிட்டு ஓடிவிடுவாயோ என்று என் மனம் என்ன பாடு பட்டது தெரியுமா" என்றாள்.

மெள்ள மெள்ள அவள் பேச்சில் பாலியத்தில் புயலடிக்கும் வீரம் தலைகாட்டத் தொடங்கியது. என் மனத்திலும் சற்றுத் தைரியம் தலைதூக்கத் தொடங்கியது. என்னுள் வாட்டும் சந்தேகத்தைச் சந்தர்ப்பம் கிடைத்த இந்தச் சமயத்தில் தீர்த்துக் கொள்வதென முடிவு கட்டினேன்.

'ஆமாம் லலிதா, வந்து......வந்து......' மேலே பேச முடியாமல் மென்று விழுங்கினேன்.

'என்ன கேட்கப் போகிறாய் என்பதை நான் சொல்லட்டுமா விமலா? உன்னை ஏன் பைத்திய

மென்று சொல்கிறார்கள்' என்றுதானே கேட்க வந்தாய்" என்று இடை மறித்தாள் லலிதா.

'எனக்கேற்பட்டிருந்த பிரமிப்பில் 'ஆமாம்' என்று மட்டும் தலையாட்டிவிட்டுப் பேசாதிருந்து விட்டேன். அதன் பிறகு அவள் ஒன்றும் பேச வில்லை; நானாகவும் பேச்சை இழுக்கவில்லை.

ஏதாவது பேச்சுக் கொடுக்கப்போய் அவள் நிலை எக்கச் சக்கமாக மாறிவிட்டால்......எந்த நிமிஷம் அவள் போக்கு எப்படி மாறுமோ என் கிற திகில் உள்ளூர உதைத்துக்கொண்டுதானிருந் தது.

'விமலா, நான் சொல்வதையெல்லாம் பயித்தி யத்தின் உளறல் என்று தள்ளிவிடாமல் பொறு மையாகக் கேட்பதாயிருந்தால் என் இதயத்தை உறுத்தும் ஒரு சம்பவத்தை உயிர்த் தோழியான உன்னிடம் விட்டுச் சொல்கிறேன்' அவள் விழி கள் என்னவோ போல் பயங்கரமாய்ச் சுழன்று விழித்தன. எதை அறியும் ஆவலில் எத்தனை இடையூறு வந்தாலும் லக்ஷியமில்லை என்று புறப்பட்டு வந்தேனோ அதே விஷயத்தை அவளாகவே கூற முன்வந்தபோது வேண்டா மென்று சொல்லிவிடுவேனா? ஆகவே அவள் கூறப் போகும் வரலாற்றின்மேல் பைத்தியம் கொண்டு அவளையே உற்று நோக்கிக்கொண்டிருந்தேன்.

5

நாம் குழந்தையாக இருந்த காலத்தில் வார்த் தைக்கு வார்த்தை, பேச்சுக்குப் பேச்சு லட்சியம் என்ற வார்த்தை அடிபட்டது என் பிராண சிநேகிதியான உனக்குத் தெரியாததல்ல. மற்றவர்களைப்போல் வாய் வீரம் பேசிவிட்டு, செயலில் காட்ட மறுக்கும் கோழைகள்போல் மறைந்து கொள்கிற கொள்கை என்னிடம் கிடை யாதென்பதும் உனக்குத் தெரியும். வயது வளர வளர நான் கொண்ட லட்சியமும் வளர்ந்து கொண்டேதான் வந்தது. என் லட்சியத்தைச் சோதிக்கும் சந்தர்ப்பம் ஒன்று வந்தது.

நீ விவாகமாகிப் போன இரண்டு மாதத்திற்குப் பிறகு ஒரு நாள் என் அப்பா ஒரு வரனைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். மற்றொரு பெண்ணாக இருந்தால் அந்த வரனுக்கு லகுவில் சம்மதித் திருக்க மாட்டாள்.

'நீ சம்மதித்துவிட்டாயாக்கும்.' என்று அவள் கதைக்குப் போக்கு வகுத்துவிட்டேன்.

'என்னுடைய லட்சியத்தைச் செயலில் நிரூபித் துக் காட்டச் சரியான சந்தர்ப்பம் கிடைத்ததை நழுவ விட நான் பயித்தியமா என்ன?' என்று என்னைக் கர்வமாகப் பார்த்தாள்.

'அப்படி உன் லட்சியம் பூர்த்தியாகும்படியான விசேஷம் என்ன அமைந்திருந்தது அந்த வரனிடம்' என்று இடையே குறுக்கிட்டேன்.

'சொல்கிறேன் கேள். என்னைப் பார்க்க வந்த வரன் இரண்டாம் தாரம். இரண்டாம்தாரத் திலும் எத்தனையோ வகையுண்டு. இவர்தான் என் லட்சியத்தைப் பூர்த்திசெய்ய வந்தவர் என்று எதனால் தீர்மானித்தேன் தெரியுமா?'

'எனக்கென்ன தெரியும் நான்தான் உன்னை விட்டுப் போய் இருநூறு மைல்களுக்கப்பால் இருக்கிறேனே. அதிருக்கட்டும் லலிதா, லட்சியம் லட்சியம் என்று புரியாத எதையோ பேசி என் மண்டையைக் குழப்பாதே. சட்டென்று சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லு' என்றேன்.

என் அவசரம் அவளுக்கு வேறு விதத்தில் அர்த்தம் கற்பித்தது. 'ஏன் வீட்டில் உன் கணவர் காத்துக்கொண்டிருப்பாரோ.........'

'இல்லை, அதெல்லாமில்லை.........நான்.........! (குழந்தைகளும் தான் என்று சொல்ல வந்ததைச் சொல்லாமல் விட்டுவிட்டேன்!) மட்டும்தான் வந்திருக்கிறேன்.'

"அப்படியானால் நாம் சாவகாசமாகப் பேச லாம். சொல்கிறேன்"

ஐந்து வயதான பெண் குழந்தை ஒன்றும் இருந்தது அவருக்கு. எதற்காக இளையாளாகச் சம்மதித்தேன் தெரியுமா? சிற்றன்னை கொடு மைக்காரி என்கிற பட்டத்தைத் தகர்த்தெறி யவே சம்மதித்தேன் என்பது நான் சொல்லா மலே உனக்கு விளங்கியிருக்குமல்லவா?"

'ஆமாம்' என் பதில் அடையாளமாகத் தலையசைத்தேன். ஆனால் என் உள்ளம் மட்டும் அவள் கொண்டிருந்த அறியாமைக்காக வருத்தம் தெரிவித்துக்கொண்டிருந்தது.

"மூட நம்பிக்கையில் ஊறித்துப் போயிருக்கும் சமூகத்தின் முன் நாம் எத்தனை உண்மையாக நடந்துகொண்டாலும் நம்மைப்பற்றி அவர்கள் கொண்டுள்ள தீர்மானத்தை மாற்றவே போவ தில்லை. கண்ணுக்குக் கண் எதிரே காணுவதைக் கூட லக்ஷியம் செய்யமாட்டார்கள். ஆனால் அவர் கள் கண் காணாமலே கருத்தில் பதிந்துவிட்ட ஒரு விஷயம் அவர்கள் இதயத்தில் ஆழமாகப் பதிந்து வேர் விட்டுப் போயிருக்கிறது. அப்படிப் பதிந்து விட்ட விஷவித்துக்களை வெட்டி யெறிய நாம் முயற்சித்தாலும் ஆழம் பதிந்து போயிருக்கும் அந்த வித்து வேரின் மூலம் மீண்டும் மீண்டும் களை விட்டுக்கொண்டுதானிருக்கும் என்பதைப் பரி பூரணமாகத் தெரிந்துகொள்வதற்குக் கிட்டத் தட்ட ஆறுமாதகாலம் வேண்டியிருந்தது எனக்கு. சுருங்கக் கூறிவிடுகிறேன் விமலா. நான் எத்தனை தான் அக்குழந்தையிடம் பாசமாக நடந்துகொண் டாலும், உலகம் அதை வேஷமென்றே கெக்கலித் தது. என்னைக் கட்டிய கணவரே அப்படித் தீர் மானித்துவிட்டார் என்றால் மற்றவர்களைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது. எதையோ கூறி

உன் மனதையும் நேரத்தையும் வீணுக்க விரும்ப வில்லை விமலா. இதற்குச் சில உதாரணங்களையும் கூறி. அந்த முக்யமான சம்பவத்தையும் கூறி விடுகிறேன் கேள்.

பாலாவை (அதுதான் இந்தக் குழந்தையின் பெயர்)விதவிதமாக அலங்கரிப்பதிலும் அவளுக்கு விளையாட்டு வேடிக்கை காண்பிப்பதிலும் என் பொழுதில் பெரும் பாகத்தைப் போக்குவேன். அதற்குக் கணவனை மயக்குவதற்கான சூத்திரம் என்று பெயர் சூட்டினவர்கள் உலகத்தார்.

குழந்தை கண்ட நேரங்களில் கண்ட வஸ்துக்களைத் தின்பதால் அதன் உடல்நலம் குன்றிவிடும் என்பது என் கொள்கை. அதன்படியே டயப்படி ஆகாரம் கொடுத்து மற்ற வேளைகளில் எதுவும் வாங்கிக்கொடுக்காமல் வெகு முறையாக வளர்த்து வந்தேன்; இல்லை, வளர்த்து வருவதாக நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்குக் கிடைத்த பெயர் என்ன தெரியுமா? கொடுமைக்காரி, குழந்தைக்கு ஒன்றும் வாங்கிக் கொடுக்காமல் ஏமாறவிடுகிருள் என்று பழிதூற்றினர்கள்.

நான் செல்லும் இடங்களுக்குக் குழந்தையை அழைத்துச்சென்ருல் 'மாய்மாலக்காரி. இவள் குழந்தையை விட்டுப் பிரியாமல் இருக்கிருள் என்று பிறர் அறியவேண்டுமாம். அதற்காக இந்த நடிப்பு' என்பார்கள். வீட்டில் விட்டுச் சென்ருல், அடிபாவி, இத்தனை சிறிய குழந்தையைத் தன்னந்தனியே விட்டுச்செல்ல எப்படித் தான் மனம் துணிந்ததோ! அவள் தான் கூறினுலும் அந்தப் புருஷனும் குஷாலாய்க் கிளம்பிவிட்டானே என்று குறைகூறுவார்கள். பாலாவின் பெற்ற தாயாரே இருக்கிருள் என்று வைத்துக் கொள். என்னைப்போல் அவள் நடந்துகொண்டிருந்தால் உலகம் அதற்காக அவளைப் பழி கூறுமா? கூருது; அவள் குழந்தை வளர்ப்புத் திட்டத்திற்காக அவளுக்குப் பாராட்டளிக்கும். அதே உலகம் அதே ஸ்தானத்திலுள்ள என்னை அதே கண்கொண்டு நோக்கினுலென்ன? சிற்றன்னை என்னும் பழியுடன் ஏன் நோக்கவேண்டும்? இதுதான் என் மனதை அரித்துக்கொண்டிருந்த விஷயம். இந்த மனப்புண்ணுக்கு என் கணவரிடம் மருந்தை நாடிச்சென்றேன். என் கணவரிடம் கூறினுல் என் மனப்பாரம் நீங்குமாறு ஏதாவது ஆறுதல் கூறுவாரென்று நினைத்து ஒரு நாள் அவரிடம் இதைப்பற்றிப் பேசினேன்.

ஆனுல் அவர் அளித்த பதில், சூடுபட்ட என் இதயத்தை ரணமாக்கிவிட்டது. 'அவர்கள் கூறுவதில் தவறென்றுமில்லையே. சிற்றன்னையின் நிலையை நன்ருக ஆராய்ந்தே முடிவுகட்டுகிருர்கள் உலகத்தார்' என்ருர். எப்படி யிருக்கும் எனக்கு?

சிற்றன்னை என்ற பதத்திற்குக் கொடுமை நிறைந்தவள் என்கிற பழிச்சொல் மறைய வேண்டுமென்ற லட்சியத்திற்காக — சிற்றன்னை என்ற பட்டத்தைப் பெற்றோர்கள் விருப்பத்திற்கு மாருக நானே வலுவில் ஏற்றுக்கொண்டேன். உலகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்க வேண்டுமென்று எத்தனையோ வழிகளில் பாடு பட்டேன். எப்படியும் உலகத்தவரின் கண்முன் நான் ஆதர்ச சிற்றன்னையாக விளங்கவேண்டும். சிற்றன்னையின் பெயருக்குள்ள இழுக்கு என்னிலிருந்தாவது மங்கி மறையவேண்டும் என்று விரும்பினேன். நான் கொண்ட லக்ஷியத்தால் நாளுக்குநாள் நான் தான் மங்கிமறைந்து கொண்டு போனேன். உலகத்தவரின் கண்முன் இதற்குமுன் சென்றுபோன சிற்றன்னைகளின் ஜாப்தாவில் என்னுடைய பெயரும் பதிவு செய்யப்பட்டிருப்பதைக்கண்டு என் உள்ளம் துடித்த துடிப்பை எப்படிச் சொல்வேன்?

என்ன விமலா, ஒரு மாதிரியாகப் பார்க்கிருயே? நீ கூட என் லட்சியத்தைச் சோதிக்கிருயா?'' என்று பேச்சினுாடே இடை மறித்தாள். லலிதை.

"இல்லையில்லை மேலே சொல்லு லலிதா'' என்றேன்.

குழந்தைகள் என்னைத் தேடிக்கொண்டு என்ன ரகளை செய்கின்றவோ என்கிற கவலையெனக்கு.

"கேள் விமலா, வருஷங்கள் எப்படியோ மூன்று ஓடிவிட்டன. மூன்றல்ல, முப்பது வருஷமானுல்தானென்ன? சிற்றன்னை — கொடுமைக்காரி என்கிறபட்டம் என்னை விட்டு அகலப் போகிறதா என்ன?

இதற்கிடையில் நான் ஒரு குழந்தைக்குத் தாயாகி விட்டேன். அதன் பிறகுதான் என் பெயருக்கு அதிக களங்கம் ஏற்பட ஏதுவா யிருந்தது. இதுவரை கொஞ்ச நஞ்சம் நம்பிக்கை கொண்டிருந்த என் கணவர் ராமு பிறந்த பிறகே என்மீதிருந்த நம்பிக்கையை அறவே இழந்துவிட்டார். தன் குழந்தை மீதிருக்கும் பிரியத்தால் பாலாவை அதிக கொடுமைப் படுத்துவாள் என்று வீண் பிரமை கொண்டுவிட்டார்.

அப்படி எண்ணும் அவர் மனம் குழந்தையோடு குழந்தையாக நன்ருகச் சேர்த்துக் கவனித்துக் கொள்வாள் என்று மட்டும் நம்பிக்கை கொண்டிருந்தால் அவர் மனமும் புண்பட்டு, பிறர் மனதையும் புண்படுத்தாமலிருந்திருக்கலாம். அது எப்படி முடியும்? கொடுமைக்காரி என்கிறபதம் தான் அவர் நெஞ்சில் ஆழமாகப் பதிந்துவிட்டதே!

இந்த எண்ணத்தினுல் அவர் மனமும் நைந்து, என்னையும் அணு அணுவாய் நலித்துக்கொண்டிருந்தார். தொட்டதெல்லாம் குற்றம். செய்வதெல்லாம் தீமை என்று அவர் மனதில் பட்டது. இதனுல் என்னைப் படுத்தி வைத்த பாடு இப்பொழுது நினைத்தாலும் என் நெஞ்சம் கொதிக்கிறது.

எப்படியோ நாட்களை ஓட்டிக் கொண்டிருந்தேன். ஒன்று சொல்ல மறந்துவிட்டனே. இத்தனைக்கும் என் பாலாவின் அன்பு ஒன்றுதான்

என் கொடுமை நிறைந்த துயர வாழ்க்கைக்குப் பற்றுகோடாயிருந்தது. அந்தக் கள்ளங்கபடமற்ற குழந்தை என் மீது தன் அன்பு முழுவதையும் அர்ப்பணித்திருந்தாள். அதற்கு இந்தப் பழிகார உலகம் என்ன கூறிற்றுத் தெரியுமா? மருந்திட்டுக் குழந்தையை மயக்கிவிட்டேனென்றுதான் முடிவு கட்டிவிட்டார்கள். எது எப்படியானாலும் பாலாவின் அன்பு மட்டும் மாறாமலிருக்க வேண்டுமென்று அடிக்கடி பகவானைப் பிரார்த்தித்துக் கொள்வேன்.

ஒருநாள் என் வீட்டிற்குச் சில விருந்தினர்கள் வந்திருந்தார்கள். ராமு என்னுடைய வேலைக்குத் தொந்தரவு கொடுத்துக்கொண்டிருந்தானாதலால் பாலாவைச் சற்று வெளியே அழைத்துப் போகச் சொன்னேன்.

அரைமணி நேரம் வேலை மும்முரத்தில் பறந்திருக்கலாம். 'அம்மா அம்மா, தம்பியை வந்துபார்' என்று பாலா என் கையைப் பிடித்திழுத்துச் சென்றாள்.

'எங்கேயம்மா அவன்' என்று கேட்டுக் கொண்டே வாசலுக்கு ஓடினேன்,

"தெருவில்போய் மோட்டார் காண்பித்துக் கொண்டிருந்தேம்மா. தம்பி ஓடினான். மோட்டாரில் அடிபட்டுவிட்டது......"

இதை அவள் சொல்லி முடித்தாளோ இல்லையோ என் இதயத்தில் கொந்தளித்த புத்திர வாஞ்சை ஆவேச வெறியாக மாறிவின்றது.

'நீ நாசமாய் போக. குழந்தையை ஏன் அங்கே அழைத்துச் சென்றாய்; அகம்பாவம் பிடித்தவளே' என்று என்றுமில்லாதபடி அன்று ஒரு அறை வைத்தேன். அதே சமயம் ஆபீஸிலிருந்து வந்த என் கணவர் நான் பாலாவை அடிப்பதைப் பார்த்துவிட்டார். 'சண்டாளி' என்று கூவிக்கொண்டு என்னை நெருங்கவும் அடிபட்ட பாலா சுருண்டு பூமியில் விழவும் சரியாக இருந்தது.

'கொலைகாரி, என் குழந்தையைக் கொன்றுவிட்டாயே!' என்று பக்கத்தில் கிடந்த கழியால் ஓங்கி என் மண்டையில் போட்டார்.' அத்துடன் நிறுத்திக்கொண்டாள் லலிதா. அவள் அதைக் கூறி முடித்த சமயம் வெளியே அரவம் கேட்டது; திரும்பிப் பார்த்தேன். அந்த வீட்டில் வேலை செய்பவள் தன் குழந்தையைக் கையில் பிடித்துக் கொண்டு அந்த அறையைத் தாண்டிச்செல்வது தெரிந்தது.

குபீரென்று என்னைவிட்டு எழுந்து ஓடினாள் லலிதா வாசலுக்கு. போய்க்கொண்டிருந்த குழந்தையைப் பலவந்தமாய்ப்பற்றி இழுத்துக்கொண்டு "பாலா, நீ சொல்லு நான் கொலைகாரியா? நான் அடித்தேன். ஆனால் உன்னைக் கொல்லவேண்டுமென்று அடிக்கவில்லையே. உன் விதி அதோடு மட்டுமல்ல. கொலைகாரி என்று பழிச்சொல் வாங்கவேண்டிய என் விதியுமாகச் சேர்ந்து உன்னைக் கொன்றுவிட்டது. அதற்கு நான் குற்றவாளியா? உன் வாய் திறந்து நீ சொல்லாவிட்டால் உன்னை என்ன செய்கிறேன் பார்" பேய்ச் சிரிப்பொன்று சிரித்தாள்.



'ஐயய்யோ' என்று அலறினாள் வேலைக்காரி. இதற்குள் பெரிய கூட்டம்கூடி, குழந்தையை அவளிடமிருந்து விடுவிக்கப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தனர். இந்தக் கண்ணராவிக் காட்சியைக் காண மனம் சகியாமல் வீட்டைநோக்கி நடந்தேன்.

குழந்தையை அழைத்துப் போகாதே; குழந்தைகளைக் கண்டால் அவள் பித்து அதிகமாகிவிடுகிறதாம் என்று கூறிய அம்மாளின் மொழிகள் என் செவிகளைத் துளைத்து ரீங்காரமிட்டுக்கொண்டிருந்தன. அம்மாவின் எச்சரிக்கை எத்தனை உதவியாக இருந்தது என்பதைச் சிந்தித்தவாறே வழி நடந்தேன்.

6

'என்ன உன் சிநேகிதியைப் பார்த்து வந்துவிட்டாயா' என்று கேட்டுக்கொண்டே அம்மா வந்து சேர்ந்தாள்.

என் முகத்தில் ஊசலாடும் விசனக்குறியைக் கண்டு அம்மா திகைத்துப் போய்விட்டாள்.

'நான்தான் அங்கே போகாதே என்று முட்டிக்கொண்டேனே, கேட்டால்தானே; போன இடத்தில் ஏதாவது நடந்ததா? என்றாள்.

'அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா. ஒரு சந்தேகம்' என்றேன்.

'என்ன' என்றாள் அம்மா.

'அவள் குழந்தைகளிரண்டும் என்னவாயின?' என்றேன்.

'இறந்துவிட்டன. கணவனும் எங்கோ காணாமல் போய்விட்டான். அவளுக்கேற்பட்டிருந்த மன அதிர்ச்சியாலும் அவள் கணவன் மண்டையில் அடித்த வேகத்தினாலும் மூளைக்கோளாறு ஏற்பட்டுவிட்டது. இதுதான் அவள் கதை' என்று கூறிமுடித்தாள் அம்மா.

'என்ன அவளிடம் கதை யளந்துகொண்டிருக்கிறாய். வந்த குழந்தைக்கு ஆகாரம் எதுவும் கொடுத்து ஆசுவாசப்படுத்தாமல் பேச்சு என்ன வேண்டிருக்கு' என்றார்கள் அப்பா. யாவரும் எழுந்து உள்ளே போனோம். ●



# மனிதனும் சமூகமும்

டி. சேஷாத்திரி

அது மான சரோவரம் அன்று; லாகூரின் ஒரு அழகிய பங்களாவின் வாசற் பக்கமுள்ள (லான்) பசும் புற்றரை தான். அவைகள் முத்துக்கள் அல்ல; இரவு உகுத்துச் சென்ற பனித்துளிகளே. அதே போல அவைகளின் இடையே அந்தப் புல் தரையின் மேல் நடந்து கொண்டிருந்ததும் அன்னமன்று; உஷா என்ற உருவத்துக்கும் குணத்துக்கும் ஏற்ற பெயருள்ள ஒரு பெண் தான். அவள் யௌவனத்தின் உஷா காலத்தைக் கடந்து கொண்டிருந்தாள். அவள் நடை, பனித்துளிகளின் தோற்றம், தரையின் மயக்கம் மூன்றும் சேர்ந்து சாதாரண மனிதனின் மனதில் கூடப் பாற்கடலில் முத்துப்பொறுக்கும் அன்னத்தை நினைவுறுத்தும் சக்தி வாய்ந்திருந்தன.




விடியற்காலையில் காலில் ஒன்று மணியாமல் லானில் நடந்து கொண்டிருந்த அந்த மடவன்னம், திடீரென்று கேட்டில் வேகமாக நுழைந்து ஓடி வரும் ஒரு மோட்டாரின் ஹார்ன் சப்தத்தைக் கேட்டு நிமிர்ந்தாள்.




எதிரே வந்து கொண்டிருந்தது ரவீந்திரனுடைய கார்.

ரவீந்திரனைக் கண்டதும் உஷா சங்கோசப்பட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. காந்தனின் எதிர் பாராத வரவினால் தூண்டப்பட்ட வெட்கம் காதைத் திருகியதால் ஏற்பட்ட சிவப்பு மறையவும், அவன் கார் "கததவை டப்" என்று சார்த்தி விட்டு உஷா ராணி என்றவாறு நெருங்கி வரவும் சமயம் ஒன்றியிருந்தது.

"அட, நீங்களா, டில்லியிலிருந்தா என்று?" அவள் கேட்ட குரலினால் ஆச்சர்யத்தால் விம்மும் ஆனந்தத்தை அள்ளி முத்தமிடும் ஒரு லஜ்ஜை குனிந்து நின்றது.

"!நீ இவ்வளவு சீக்கிரமாகவே எழுந்துவிட்டாயா? எங்கே ஆவலுக்குத் தூக்கம் அடைக்கும் தாழாகி விடுமோ என்று பயந்து கொண்டே வந்தேன்!" என்றான் ரவீந்திரன் உஷாவின் கைகளைத் தன் கைகளில் வாரிக் கொண்டே!

"சரிதான்; உங்களுக்கு மனோ விக்ஞான அறிவு சூனியம்..........."என்று சிரித்தாள் நங்கை. ஒன்றும் புரியாமல் விழித்தான் ரவீந்திரன்.

'அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்று சொல்லி விட்டு உஷா குறும்பாகச் சிரித்த பிறகுதான் ரவீந்திரனுக்குத் தனக்கு அனுயாசமாகக் கிடைத்த சர்டிபிகேட்டின் பொருள் புரிந்தது.

பிறகு இருவரும் உள்ளே சென்று ஒரு சோபாவில் அமர்ந்தனர். அவள் தாய் தந்தையர் எங்கே என்று அவன் கேட்டு, பதில் வந்த பிறகு தான் அவள் அவ்வளவு சீக்கிரம் விழித்ததன் மர்மம் புரிந்தது.

டாக்டர் வர்மாவும், அவர் மனைவியும் உஷாவின் தம்பியை அழைத்துக் கொண்டு முப்பது மைல் தூரத்திலுள்ள ஒரு ஊருக்குத் தங்கள் காரிலேயே சென்றிருந்தனர். அவர்கள் எட்டு மணிக்குள் திரும்பி விடுவார்கள்,

அவர்கள் சுமார் எட்டரை மணிக்குத் திரும்பி வந்தார்கள். அவர்களும் ரவீந்திரனைக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள்; சந்தோஷத்தைக் காட்டினார்கள். காரணத்தையும் கேட்டார்கள்.

ரவீந்திரன் தில்லியில் பிரசித்தி பெற்ற வியாபாரி சியாமலாலினுடைய புத்திரன்; வெளி நாடுகளுக்குச் சென்று இஞ்ஜினீயர் படிப்புமுடித்து வந்த அவன் வேலைக்குப் போகவில்லை. தந்தையினுடைய கம்பெனியை முன்னேற்றுவதில் வேலை செய்யத் தொடங்கினான்.

அந்தத் தொடர்பில் அவனுக்கு மீண்டும் சில இயந்திரங்கள் வாங்க இங்கிலாந்து செல்ல நேர்ந்தது. அடுத்த வாரம் ஆகாய விமானத்தில் போகப்போகிறான். அதனால்தான் செல்வதற்கு முன் உஷாவைப் பார்த்து விட்டு அவர்களிடம் சொல்லிவிட்டுப் போகலாம் என்று வந்தான்.

உஷாவின் தாய் ரவீந்திரனுக்கு டீ கொடுத்தாய்விட்டது என்று தெரிந்து கொண்டு சமையலுக்கு ஏற்பாடு செய்யச் சென்று விட்டாள், தந்தையும் குளிக்கச் சென்று விட்டார். உஷாவின் தம்பியும் பள்ளிக்கூடம்போவதற்காக, "குளிக்கணும் பைக்கட்டைக் காணும்" என்று சத்தம் போட்டுக்கொண்டு அங்கும் இங்கும் ஓட ஆரம்பித்து விட்டான்.

ரவீந்திரன் உஷாவைக் காரில் சுற்றிவிட்டு வரலாம் என்று அழைத்தான். உஷாவும் சம்மதித்தாள். இருவரும் காரில் அமர்ந்தனர். கார் வேகமாகச் செல்ல ஆரம்பித்தது.

சற்று நேரம் மௌனமாயிருந்த பிறகு உஷா, "ரவீந்திரா" என்று அழைத்தாள்.

இருவருக்கும் கலியாணம் ஆவதென்று நிச்சயம் செய்து மூன்று மாதமாகியிருந்தது.

"மேற்கே போகிறீர்களே, "அக்பர்" கவிதை ஞாபகமிருக்கிறதல்லவா? படிக்கச் செல்லும் இந்தியப் பையன்கள் பெண்களின் கேசச் சுருள்களில் மாட்டிக் கொள்கிறார்களாமே."

"எனக்குச் சற்று முன் ஒரு பட்டம் கொடுத்தாயே ஞாபகமிருக்கிறதா?"

"எல்லாம் ஞாபகமிருக்கிறது. அது வேறு, இது வேறு, என்னை முட்டாள் என்று பட்டம் கட்டுவது சுலபமில்லை?"

"இல்லைதான். ஆனாலும் நான் படிக்கச் செல்லவில்லை இப்பொழுது. படிக்கச் சென்ற பொழுதே நான்தப்பி வந்து விட்டேனே, இப்பொழுதா ஏமாறப் போகிறேன். தவிரவும்........"

"தவிரவும்...? சொல்லுங்கள்... தவிரவும்...?"

"இந்தத்தடவை எனக்குக் காவலாக உன் திருமுகமும் அன்பு மொழிகளின் ஞாபகமும் துணை நிற்காவா?"

உஷாவின் கன்னம் சிவந்தது. கண்கள் மலர்ந்தன. உடல் வியர்த்தது. வேகமாக ஓடும் கார் எதிரே குறுக்கே வரும்போல இருந்த மாடு தானே திரும்பி மறைந்தது. அவள் தன் உள்ளத்தின் நிலைமையை அதனுடன் ஒப்பிட்டுக்கொண்டாள், கார் ஓட்டி, 'நல்லவேளை!' என்று சொன்னதை அவள் மனமும் ஆர அனுபவித்தது. ஸ்டீயரிங் சக்கரத்திலிருந்து எடுத்து, தன் மடிமேல் வைத்த அந்த இடது கையை அவள் ஏந்தி மார்போடு அணைத்துக்கொண்டாள். சற்று நேரம் அவன் வலது கை மோட்டாரின் போக்கையும் இடது கை இவளுடைய இதயத்தின் போக்கையும் துரிதப்படுத்திக்கொண்டிருந்தன. எதிரேயிருந்த பாதை நிசமாகவே கழிந்துகொண்டிருந்தது. அவளுடைய வாழ்க்கைப் பாதையும் கற்பனையில் சுகமாகக் கழிந்துகொண்டிருந்தது.

## 2

காலத்திற்கும் நிகழ்ச்சிகளுக்கும் சம்பந்தம் ஏதாவது உண்டா என்பது ஒரு பெரிய



கேள்வி; மர்மமான கேள்வி. அது என்னவோ, "எல்லாம் காலம்" என்று சொல்லும் வழக்கம் ஒரு நம்பிக்கையைத்தான் குறிக்கிறது. ரவீந்திரன் இங்கிலாந்து சென்றான். வருவதற்குக் குறைந்தது ஆறு மாதம் ஆகும் என்று எழுதியிருந்தான்.

அவன் சென்றபிறகு இரண்டு மாதங்கள் கழிந்தன. இந்திய அரசியல் வானம் பூமி எல்லாம் சிவந்தன. சரித்திரத்தின் ஏடுகள் கரு நிறத்துடன் புரள ஆரம்பித்தன. இந்தியத் தாயின் உடல் அங்கங்கே சகோதரர்களின், அவள் குழந்தைகளின் உஷ்ண ரத்தத்தால் நலிவுபட ஆரம்பித்தது. அவள் ஏக்கம் அதிகரித்தது.

பஞ்சாபிலும் இந்துக்களும் முஸ்லிம்களும் பழைமையை மறந்தனர்; சகோதரத் தன்மையை மறந்தனர்; ஏன்? மனிதத்தன்மையையே மறந்தனர்; தம்மை மறந்தனர். சகோதரர்களின் கழுத்தை அறுத்தனர்; ரத்தத்தைப் பெருக்கினர். சகோதரிகளின் பெண்மையைக்கொள்ளையிட்டு இந்தியத் தாய்க்குக் களங்கம் ஊட்டினர். பீஹார் வங்காள மாகாணங்களில் அட்டூழியம் நடந்தபோதும்கூட அடக்கமாயிருந்த பஞ்சாப் மாகாணம் திடீரென்று ஏனோ வெடித்து எழுந்தது. அறியாமையா? ஆணவமா? வீண் ஆசையா? தூண்டப்பட்ட மிருக உணர்வா? என்ன சொல்வது? தலைவர்களின் சுயநலத்தைக் குறை கூறுவதா? மக்களின் மதியின்மைக்கு இரக்கப்படுவதா? இந்திய மாதாவின் ஜாதகத்தை இகழ்வதா? நடந்தது அந்தக் காரியம்; என்றுமே எதிர்பாராமல் நடந்து என்றுமே மறையாமல் தன் ஞாபகத்தைக் கருமை எழுத்துக்களில் நாட்டிக்கொண்ட அந்தச் சம்பவம் நடந்தது. எண்ணினாலே கண் பெருகும்; உள்ளம் உருகும்; உணர்வு மயங்கும் அந்தச் செயலை இந்தியர் செய்தனர்!

ஒவ்வொருநாளும் இறவாத மனிதர்கள் உள்ளத்தில் பயத்தையும், கலவரத்தையும் நிரப்பி இறந்து கொண்டிருந்தனர் மனிதர். அங்கே, பெண்கள் எல்லாவிதத்தாலும் அழிக்கப்பட்டனர். அன்று அங்கே; இன்று இங்கே. தீப்போல் பரவிற்று குண்டர்கள் எண்ணிக்கையும், செயலும். குண்டர்கள் யார்? அன்னியர் யார்? மனிதர்களே குண்டர்களாக ஆகிவிட்டனரா?

டாக்டர் வர்மாவிடம் சிநேகிதர்கள் வற்புறுத்தினர். நீங்கள் முஸல்மான்கள் இருக்கும் இடத்திற்குப் போகவேண்டாம் என்று கெஞ்சினர். அவர் 'என்ன நீங்கள் தெரியாமல் சொல்கிறீர்கள்? நான் அன்று முதல் இன்றுவரை முஸல்மான்கள் தயவில்தானே பிழைத்துவருகிறேன்' என்றார். நண்பர்கள் ஸ்ரீமதி வர்மாவிடம் சொன்னார்கள். அவளும் இந்த வம்பை விட்டு எங்கேயாவது போகலாம் என்றுதான் எண்ணினாள். ஆனால் டாக்டர் வர்மாவிடம் யார் சொல்வது?

டாக்டர் வர்மா கார் வேகமாகச் சென்றுகொண்டிருந்தது, அந்தத் தெருவில் மூன்று முஸல்மான்கள் நின்றுகொண்டிருந்தனர்.

'அட, அதோ பார் வர்மா' என்றான் ஒருவன்.

'வரும்போது தீர்த்துவிடலாம்' என்றான் மற்றொருவன்.

மூன்றாமவன், 'அட பாவி! டாக்டர் வர்மாவால் எவ்வளவு முஸ்லிம்கள் வியாதியிலிருந்து உயிர் தப்பினார்கள் தெரியுமா?' என்றான்.

"அது தெரியும். அது டாக்டர் வேலை; மனிதத் தன்மை. இது மத விஷயமல்லவா?"

என்னவோ அவர்கள் முடிவு செய்தவாறே செய்து தீர்த்தனர். வர்மா கார் திரும்பி வந்தது. டாக்டர் என்று கத்தினான் ஒருவன் கீழேவிழுந்து உதைத்துக்கொண்டே. கார் நின்றது. டாக்டர் இறங்கி வந்தார். என்ன என்று கேட்க அவருக்குச் சாவகாசம் கொடுக்கவில்லை. மற்றொருவனுடைய கூரிய பிச்சுவாவால் அலறிச் சாய்ந்தார் அவர். பிணத்தைக் கூட டிரைவருக்குக் கொடுக்கவில்லை, அந்தப் பாவிகள். அதை இழுத்துச் செல்லும் பணியையும் அவர்களே ஏற்றுக்கொண்டனர்.

ஸ்ரீமதி வர்மா அழவில்லை. அழ முடியவில்லை. உஷாவைக் கூப்பிட்டாள். இனியாவது கிளம்பலாம்—கிளம்பவேண்டியதுதான். இந்தத் தெருவிற்கும் வியாதி பரவிவிட்டது.

டிரைவர் நல்லவன். பழகியவன். காரில் சாமான்களை முடிந்தவரையில் ஏற்றிக்கொண்டனர். தாய் மகன் மகள் மூவரும் கிளம்பி விட்டனர். ஒரு முறை திரும்பிப் பார்த்தனர். கல்லும் கரைந்திருக்கும் அந்த ஆறு கண்களையும் கண்டு.

அமிருதசரஸ் பக்கம் பறந்துசென்றது மோட்டார். டிரைவர் நன்கு பழகியவன்; காரும் தெரியும் வழியும் தெரியும். பாகவான்பூர் சமீபம் வந்தது மோட்டார். எதிரே கும்பல் கத்தி முதலிய ஆயுதங்களுடன் நின்றது. அந்தக் கும்பல் கண்களிலே ரத்த வெறி தாங்கிய முஸ்லீம்களின் கும்பல். மோட்டாரிலுள்ளவர்கள் நடுங்கினர். வேறு வழியில்லை. டிரைவர் அக்ஸிலேட்டரை அமுக்கினான்; எலெக்ட்ரிக் ஹாரனையும் சேர்த்து அமுக்கினான். கூட்டம் கொஞ்சம் விலகிற்று. கார் இடையில் புகுந்து வெளியேற ஆரம்பித்தது.

எவனோ ஒருவன் "அடே ஹிந்துடா!" என்றான். அவ்வளவுதான், சரமாரியாகக் கற்கள் விழ ஆரம்பித்தன. இரண்டு பக்கமும் கண்ணாடிகள் உடைந்தன; உள்ளிருந்தவர் தப்பினர்.

ஆனால் எங்கே தப்புவது? கடவுள்கூட அல்லவா அட்டூழியக்காரருக்கு உதவி செய்யத் துணிந்திருந்தார்! ஒருவன் கூரியஒரு கத்தியை வீசி எறிந்தான், அது நேரே வந்து ஸ்ரீமதி வர்மாவின் விலாவில் பாய்ந்து சொருகிக் கொண்டது?

நிறுத்த நேரமா? கார் பறந்தது. ஸ்ரீமதி வர்மா பல்லைக் கடித்துக் கொண்டாள். தலை நான்று

விட்டது. உஷாவுக்கு அழத் தெரியவில்லை. தாயை மடியில் தாங்கினாள்.

அமிருதசரஸ் கார் வந்து சேர்வதும் டாக்டரின் மனைவி தன் நிலை இழப்பதும் ஒன்றாயிருந்தது. ஆஸ்பத்திரியில் பெரிய டாக்டர்கள் முயன்றனர், அவளுடலில் உயிரைத் தூண்ட. அது அணைந்தே விட்டது. அம்மாளின் உடல் அமிருத சரஸிலேயே அக்னிக்குச் சமர்ப்பிக்கப்பட்டு விட்டது.

## 3

இனி எங்கே அக்கா போவது? என்றான் உஷாவின் தம்பி அவள் மடியில் தலையைச் சாய்த்தவாறே? உஷா டிரைவரைப் பார்த்தாள்.

டிரைவர், எங்கே அம்மா போகலாம்? என்று கேட்டான் மரியாதையாய்! அதே கேள்விதான், இந்தக் கேள்வி உத்தரவை எதிர் பார்த்து எழுந்தது.

எங்கே போவது? இருபது வயதுப் பெண் எங்கே போவாள்? உறவினர் வீடு எல்லாம் லாஹூரிலும் அதைச் சுற்றியும் இருந்தன. அங்கேயா போகமுடியும்?

"எதிரே செல்லும் ரஸ்தா எங்கே போகிறது?"

"அது நேரே தில்லிக்குப் போகிறது?"

"சரி அங்கேதான் போ; பெட்ரோல் இருக்கிறதா?"

டிரைவர், "பெட்ரோல் இருக்கிற" தென்று சொல்லிவிட்டு ஏறி உட்கார்ந்தான். மோட்டாரும் அவன் ஆவலைப் பூர்த்தி செய்ய ஆரம்பித்தது.

உஷா சொல்லி விட்டாள், 'தில்லிக்குப் போ' என்று! பிறகு அவள் மனம் அவளையே குடைய ஆரம்பித்து விட்டது. தில்லிக்கு அவர்கள் வீட்டுக்குப்போவதா ? அங்கே யார் இருக்கிறார்கள் அவளை வா என்று அழைக்க ? உயிரையே தருவதாகச் சொல்லி, வந்த ரவீந்திரன்தான் ஆயிரக் கணக்கான மைல்களுக்குப்பால் இருக்கிறானே ? அவனே இருந்தாலும் ஏழையாகி இரங்கி நிற்கும் அவளை ஏற்றுக்கொள்வானா ? ஒரே சந்தேகமும் குழப்பமும் அவள் மூளையை அடைத்துக் கொண்டன. அவள் டிரைவருக்கு ஒரு உத்தரவும் கொடுக்கவில்லை.

கார் தில்லி வந்து சேர்ந்தது ; சியாமலால் வீட்டிற்கும் வந்து சேர்ந்தது. அவர் மனைவி நந்தினி தேவி வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் உஷா தேவிக்கு ஒருமுறை புல்லரித்தது. ரவீந்திரன் அவளுடைய சாயல் !

இறங்கி வந்த உஷாவை நந்தினி கேள்விக் குறியை எறியும் கண்களுடன் பார்த்தாள்.

உஷா தன்னுடைய பெயரையும் அடையாளத்தையும் சொல்லி ஒதுங்கி, குனிந்து வணங்கி நின்றாள்.

அது அவளுக்குத் தான் தெரியுமே?

'அடி ! நீ எப்படி வந்தாய் ?' என்றாள் நந்தினி தேவி.

வார்த்தைகள் சுடும் என்று சொல்வதுண்டு. என்னைக் கேட்டால் பாபம் வார்த்தைகளுக்கு மட்டும் அந்தப் பலம் கிடையாது என்று சொல்வேன். இரும்பு ஜில் என்றிருக்கும். வெள்ளிதடவ விரல்களை அழைக்கும். பொன்னோ மேனியை அணையும். ஆனால் அவைகளில் சூடேறி விட்டால் தான் அவை சுடும். அதே போல் எந்த வார்த்தைகளும் குணமில்லாத மனமாகிய அடுப்பில் குரல் கொண்டு சூடேறினால்தான் சுடும் சக்தியைப் பெறும்.

உஷாவின் உள்ளமும் தொண்டையும் வறண்டு விட்டன. கொடியின் மாதக்கணக்காக வளர்ந்த வளர்ச்சியை ஒரு நிமிஷ நேரம் அடிக்கும் தீக்காற்று வறள வைத்து விடும், உஷா பொசுங்கி நின்றாள்.

"அம்மா ? காலமும் கஷ்டமும் சேர்ந்து என்னை அழைத்து வந்து விட்டன ?" என்று சொல்லி உஷா தன் கதையைச் சொல்லி, "என்னைக் கொஞ்ச காலம் இங்கே வைத்துக் கொள்ள மாட்டீர்களா ?" என்று கெஞ்சாக் குறையாகச் சொல்லி முடித்தாள்.

"என்ன ? அது எப்படி முடியும்? கேட்பதையும் யோசித்துக் கேட்க வேண்டும் அம்மா. நீ எல்லாம் படித்த பெண். வீட்டில் இந்த நிலையில் உன்னை வைத்துக் கொண்டால் நான் என் முகத்தை வெளியே காட்ட முடியுமா ? நான்கு பேர் என்ன சொல்வார்கள் ? போகட்டும். அவர் வரட்டும், உனக்கு ஏதாவது அனுதாசிரமத்தில் ஏற்பாடு செய்யச் சொல்கிறேன். இதோ இரு, அவரை இப்பொழுதே அழைத்து வரச் சொல்கிறேன். அதுவரை இப்படி நாற்காலியிலே உட்கார்?" என்று அம்மாள் மிகவும் சிரமப்பட்டுப் பேசி முடித்துத் திரும்பினாள்,

'அம்மா, அந்தக் கஷ்டம் நீங்கள் படவேண்டாம் !' என்று சொல்லி உஷா அவளை நிறுத்தி ஒரு நமஸ்காரத்தைப் போட்டு விட்டு காரில் சென்று அமர்ந்து விட்டாள்.

"டிரைவர்! காரை ஏதாவது ஹோட்டலுக்கு விடு ! "

ஆசிரமம்! சமூகம்! முகத்தை எப்படிக் காட்டுவது? சமூகம் மனிதத் தன்மையை வளர்க்க ஏற்பட்டதா? அதை அழிக்கவா? சபாஷ்!

நந்தினிதேவி " போட்டாளே போடு! எப்படி வந்திருக்கிறாள், என்ன நிலையில் வந்திருக்கிறா

யார் கண்டது? நல்ல பெண்ணடா இவள்! அவளைச் சொல்லிப் பயனில்லை, இந்தக் காலத்துப் படிப்பைச் சொல்லு! அதுக்கு மேலே இந்த அசட்டுப் பிள்ளைகளைச் சொல்லு!'' என்று முணு முணுத்துக் கொண்டேயிருந்தாள். உஷாவுக்கு அதெல்லாம் காதிலே விழவில்லை.

சற்று நேரத்திற்கெல்லாம் சியாமலால் வந்தார், நந்தினிதேவி கதையைச் சொன்னாள். டிரைவரின் வயது இருபத்தைந்து தான் இருக்கும் என்று சொல்லவும் மறக்கவில்லை.

விஷயத்தைக் கேட்ட சியாமலால் 'ஒரு பெருமூச்சு விட்டு' 'சரி, அவர்கள் போன இடமாவது தெரியுமா?' என்று கேட்டார்.

'எதற்காகவாம்? நான் விரட்டிவிட்ட பாட்டில் அவளைத் திரும்ப அழைத்துவர ஏற்பாடா? கழிந்து கெட்டதெல்லாம் இங்கே வந்தால் நான் என்ன செய்வேன் தெரியுமா?'

அந்தக் கேள்விக்குப் பதிலைக் கேட்கச் சியாமலால் தயாராயில்லை. அவர் அந்த எண்ணத்தையே மனதைவிட்டுத் துரத்திவிட்டார்.

* * *

லீலா ஓடி வந்தாள்.

"அடி உனக்கு வயது இருபத்திரண்டடி! என்று சிரித்தாள். உஷா படித்துக்கொண்டிருந்தவள் தலையைத் திருப்பி,

"அடி இப்பொழுது எழுபத்திரண்டு வயதாயிருந்தால்கூட பத்து வயதுப் பெண்ணாகிவிடுவேன் தெரியுமா? இருபத்திரண்டு ஒரு பிரமாதமா? தவிர இந்த ஜனுக்கு எனக்குப் பத்தொன்பதுதானே முடிந்தது?''

"அப்படி என்ன 1948ஆம் ஸு ஜனவரி மாதம் 19-உ மாலை எட்டு மணிக்கு வந்த விசேஷம்?''

"அடி அது காலத்தின் விசேஷமில்லை. என் உள்ளே இருக்கும் ஒரு நல்ல சமாச்சாரத்தின் விசேஷம்!''

"என்னடி அது அப்படி சமாச்சாரம்! பாரிஸ்டருக்கு எட்டு மாதத்தில் கிடைக்கப் போகும் தந்தைப் பட்டம் ஆறு மாதத்திலேயே கிடைக்கும் என்பது யாராவது சொல்லி விட்டார்களா?''

'அது இல்லை; நீ கண்டு பிடி பார்க்கலாம்!

'உன் வழக்கமே அது தானே! நச்சுப் பிடித்து சமாச்சாரத்தை வாழைப் பட்டை தேய்க்கிறுப் போல் தேய்த்து விடுவாய். படீர் படீர் என்று வெடித்து, புதுமை எல்லாம் அடங்கிய பிறகு சமாச்சாரம் தன் இனிமையையே இழந்து விடும்.'

'கோபிக்காதே, சொல்லி விடுகிறேன். இன்று அகதிகளுக்கு வந்த செய்தியில் உனக்கும் செய்தி வந்திருக்கிறது.'

'' அப்பாடா யாரிட மிருந்து?''

'' யாரிடமிருந்தா? உரிமையுடையவரிடமிருந்து தான்!''

'யார்? ரவீந்திரனா? அவர் வந்து விட்டாரா?'

உஷா கேட்டாள். தன் சிநேகிதியான லீலாவிடம் கேட்டாள். லீலாவும் உஷாவும் பழைய சிநேகிதிகள். வேறு வழியின்றி அங்கங்கேசு அலைந்து உஷா லக்னௌவில் அவளிடம் வந்து சேர்ந்தாள். லீலாவும் தன் கணவன் மூலம் அந்த ஊர் முனிஸிபல் பெண் பாடசாலையில் அவளுக்கு உபாத்தியாயினி வேலை வாங்கித் தந்திருந்தாள். சிநேகிதியிடம் உள்ள அன்பினால் இந்தச் சமாச்சாரத்தைக் கேட்ட அவள் உள்ளம் அன்று அடிபட்ட ரப்பர் பந்து போல் குதித்துக் கொண்டிருந்தது

'பதில் இல்லை என்று எழுதி விடு!' என்று உஷா சொன்ன வாக்கியம் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த லீலாவுக்குச் சாட்டை நுனி போல் பட்டது.

'ஏனடி பித்துக் குள்ளி?'

"அசடே! பெண் என்றால் சுயமரியாதை என்று ஒன்று கிடையாதா?'

'உளறாதே, அவர் என்ன செய்தார்?'

'அவர் வேறு செய்ய வேண்டுமா? அவர் அம்மா சொன்னதை மறந்து விடுவதா?'

லீலா பேச்சை வளர்க்கவில்லை. 'சரி, உன் இஷ்டம்! மிஞ்சிப் பேசினால் என் வீட்டையும் விட்டுப் போய் விடுவாய்!' என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள். அவள் உள்ளபடி உஷாவை விட்டுப் பிரியவும் தயாராயில்லை.

நாலைந்து நாட்கள் சென்று விட்டன. அன்று ஞாயிற்றுக் கிழமை. உஷா பள்ளிக்கூடத்தில் நாடகம் தயாரித்துக் கொண்டிருந்தாள். அதைப் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்த சமயம் லீலா மாடியில் இருந்து இறங்கி ஓடிவந்து அவளை நிறுத்தினாள், "இரு உஷா சற்றுநேரம், போகலாம்.''

"என்ன லீலா? குழந்தைகள் காத்துக்கொண்டிருக்கமாட்டார்களா?''

"பேசாமலிரு; நானும் வருகிறேன் காரிலேயே போகலாம். அவரும் இன்னும் வரவில்லை; தனியாயிருக்கப் பிடிக்கவே இல்லை!''

அவள் பேசும் விதம் அவள் உண்மை பேசவில்லை என்று நன்றாய்க் காட்டிக்கொடுத்தது. அவள் அடிக்கடி வாசற் பக்கத்தைப் பார்த்துக் கொண்டாள். உஷாவுக்குச் சந்தேகம்தான்!

அவள் அதிகநேரம் தயங்கவேண்டிய அவசியம் இல்லாமலே போய்விட்டது. வாசலில் போர்ட்டிகோவில் வந்து நின்ற காரிலிருந்து ஒரு யுவன் இறங்கி வந்தான்.

"லீலா உன்......?''என்று ஆரம்பித்தாள் உஷா.

"இல்லேடி அசடே.........எல்லாம் உன் தான்......!'' ஆம் இறங்கிவந்தது ரவீந்திரனே!...லீலா நழுவிவிட்டாள்.

உஷாவுக்குக் கோபம் பொங்கி எழுந்தது!

உஷா ! என்று ஆவலாய் அழைத்தான் ரவி.

"வாருங்கள் எப்பொழுது வந்தீர்களோ?" என்ருள் உஷா.

"வந்து பதினைந்து நாளாயிற்று. இவ்வளவு நாளாயிற்று உன்னைக் கண்டுபிடிக்க;"

"சரி, உங்கள் சௌகரியா சௌகரியத்துக்குக் காரணம் எனக்கு எதற்கு? இங்கே எங்கே லீலாவைப் பார்க்க வந்தீர்களா? பாரிஸ்டரையா? அவரை உங்களுக்குத் தெரியுமா?"

"இல்லை உன்னைத்தான்........."

"எதற்காகவோ?"

"உன்னிடம் மன்னிப்புக் கோர......!"

"நான் முன்னமேயே மன்னித்துவிட்டேன்!"

ரவீந்திரன் பதறிவிட்டான்.

"உஷா இது என்ன? இவ்வளவு கோபத்துக்குக் காரணம்தான் என்ன? நான் அறிந்து பிசகு செய்யவில்லையே! தெரியாமல் ஏற்பட்ட பிசகுக்கு மன்னிப்பே கிடையாதா? சுயமரியாதை ஒன்று மட்டும் அன்புக்கு அடைப்புத்தாழாகலாம் என்று நீ எனக்கு முன்னமே சொல்லித் தந்திருக்கலாமே......!"

உஷாவின் நிலைமை மிகவும் சங்கடத்துக்குள்ளாயிற்று.

"நீங்கள் என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?"

"ஒரு வார்த்தை சொல்லிவிடு. உனக்கு என்னிடம் கொஞ்சமாவது தயை இருக்கிறதா இல்லையா?"

"ஏன் இல்லை? அன்பும் இருக்கிறது. ஆனல் அதை வைத்துக்கொண்டு நான் என்ன செய்கிறது? எரியும் விளக்கை அணைத்துவிட்டு நடுக் கூடத்துக்கு வெளிச்சம் தர வேண்டி என்னலாபம்? கண்ணுடிக் கதவைத் தாழிட்டுப் பூட்டிவிட்டு காற்றை வீச அழைக்கிறீர்கள்."

"இல்லை, நீ தெரியாமல் சொல்கிருய் !'

"எல்லாம் தெரிந்து தான் சொல்கிறேன். உங்கள் சமூகம் அப்படிப் பட்டது. அதன் கணக்குப்படி அழுக்குத் தண்ணீர் புஷ்கரிணியாகி விடும் ..."

"நான் அந்தச் சமூகத்தை லக்ஷியம் செய்தால் தானே."

"நீங்கள் சமூகத்தை லக்ஷியம் செய்யாமலிருக்கலாம். உங்களுக்குத் தாய் வேண்டும்; தாய்க்குச் சமூகம் வேண்டும்."

"அடி அசடே! இந்தச் சந்தேகம் தானே; சற்று இரு." ரவீந்திரன் வெளியே ஓடிஞன். திரும்பி வரும் போது நந்தினி தேவியும் லீலாவும் வந்தனர்.

வரும் போதே நந்தினி தேவி–"அடி பெண்ணே மன்னித்து விடடீ? அசட்டுத் தனம் பண்ணிட்டேன். எனக்குப் பிள்ளை வரம் வேண்டுமடி? ஒன்றேஒன்று தாண்டீ வைத்திருக்கிறேன்,' என்று சொல்லிக் கொண்டே வந்தாள் அழாக் குறையாக.

உஷா லீலாவைப் பார்த்தாள் குறும்பு தாண்டவமாடியது கண்களில்.

"ஸ்நேகிதிக்குக் கூட ஒரு வரம்பு உண்டு. பிறர் காரியங்களில் தலையிடுவதற்கு ......"

"அந்தப் பாடம் நம் உபாத்தியாயர் தான் சொல்லிக் கொடுக்கவே யில்லையே. அதற்குத் தலையை வாங்கிக் கொள்ளலாம். அப்புறம் இப்பொழுது மாமியார் கேட்ட வரனைக் கொடு !"

உஷா, சற்று நேரம் திகைத்து நின்ருள். ரவீந்திரன் அருகே நெருங்கிஞன் " நான் கேட்ட வரமாவது தா !" என்றவாறே,

உஷா தாவிச் சென்று "அம்மா" என்றவாறே நந்தினி தேவியின் கால்களில் விழுந்தாள்.

"உன் போல இல்லாமல் நிரம்பப் பிள்ளையும் குட்டியும் பெற்றுக்கொள், என்று ஆசீர்வாதம் செய்!" என்று யார் சொன்னது? என்று திரும்பிப் பார்த்தாள் நந்தினி தேவி. அங்கே சியாமலால் நின்று கொண்டிருந்தான். ●






# சிலையின் கண்கள்

முத்து-சுப்பிரமணியன்...

நிர்மானுஷ்யமான இடம். பௌர்ணமி கழிந்து இரண்டு தினங்கள் ஆகி விட்டபடியால் இருட்டிய பின்பும் சந்திரன் இன்னும் உதிக்கவில்லை. ஆனால் நன்றாக இருட்டிவிட்டபடியால் 'டார்ச்' விளக்கை உபயோகித்துத் தான் சிற்பங்களைப் பார்க்கவேண்டி இருந்தது.

ஊர் பெயர் தெரியாத ஒருவன் உருவாக்கி விட்டுப் போய் விட்டான். அழிவுள்ள உலகிலே அழியாச் சிருஷ்டிகளை உண்டாக்கி விட்ட பெருமையோடு—அல்லது மனச் சாந்தியோடு போய் விட்டான். அவன் யாரென்று யாருக்கும் தெரியாது—யாருக்கும் தெரிய வைக்க அவன் விரும்பவில்லை போலும்! ஆனால் அங்கு வந்த ஒவ்வொருவரும் அந்த, 'தெரியாத' ஆத்மாவைப் புகழ்ந்து மனதார வாழ்த்தி விட்டுப் போனார்கள். அரைமனதோடு தான் திரும்பினார்கள்! ஒவ்வொரு சிற்பத்தையும் விட்டுப் பிரியும் போதும் மனமில்லாமல் தான் பிரிந்தார்கள். "இதை இன்னொரு முறை பார்க்கவேண்டும். அதை வேறொரு கோணத்திலிருந்து படம் பிடித்துக் கொள்ள வேண்டும். அடாடா! அந்தச் சிற்பத்தைப் பக்கவாட்டிலிருந்து படம் பிடித்துக் கொள்ள மறந்து விட்டேனே!" இப்படி பற்பல எண்ணங்கள் உள்ளத்திலே எழுந்து அவர்களை அங்கு மிங்குமாக அலக்கழித்து, கால்கடுக்க வைத்தன. ஆனால் அந்தக் கால் வலிக்குப் பதிலாக அவர்கள் அந்தச் சிற்பியை வாழ்த்திவிட்டுத் தான் போனார்கள்!

அப்படி வந்த வழிப் போக்கர்களில் நானும் ஒருவன். எட்டுத் திக்கும் சென்று 'கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்து' சேர்க்க முடியாவிட்டாலும் அவைகளைக் கண்டாவது களிக்கலாமே என்ற எண்ணம் தான். காலையில் இதே சிற்பங்களை என்னுடன் சுற்றிப்பார்த்த நண்பன் உடல் நலமில்லையென்று இப்போது கூடவர மறுத்து விட்டான். ஆயினும் இன்னொரு முறை பார்க்க வேண்டுமென்ற எண்ணம் உள்ளத்திலே உருவெடுத்து விட்டால் அப்புறம் ஓய்வேது? அதோடு இன்னொரு ஆசை. காலையில் நாங்கள் இங்கு வந்தபோது, இந்தச் சிற்ப மண்டபத்திலிருந்து சிறிது தூரத்தில், தன்னந் தனியாக ஒரு சிலை நின்று கொண்டிருந்ததைப் பார்த்தேன். கிழக்குப் புறமாகப் பார்த்துக் கொண்டு எங்களுக்கு முதுகைக் காட்டிய வண்ணம் ஒரு உருவம் உட்கார்ந்திருப்பது போன்ற சிலை. எங்களுடன் கூட வந்த வழி காட்டி அதைப் பார்க்க வேண்டாமென்று தடுத்து விட்டான். அவனைப் பகைத்துக் கொள்வது புத்திசாலித்தனமாகாது என்பதற்காக அப்போது அந்த ஆசையைக் கைவிட நேர்ந்தது. இப்போது அந்தச் சிலையையும் பார்க்க வேண்டுமென்ற அவா என்னைத் தூண்ட, தனியாகப் புறப்பட்டு விட்டேன்.

சிற்ப மண்டபத்தைப் பார்த்து முடிந்ததும் நேரே அந்தத் தனிச் சிலையை நோக்கிக் கிளம்பி விட்டேன். அப்போது அங்கே நிலவிய அசாதாரண நிசப்தம் எனக்குப் பயத்தையும் வியப்பையும் ஒருங்கே தந்தது. இவ்வளவு அழகாக, தான் கற்ற கலை

யெல்லாம் கொட்டி இன்பக் கோயில் ஒன்று சமைத்திருக்கிருன் சிற்பி. இரவெல்லாம் இங்கேயே இன்பமாகக் கழிக்கலாமே! அப்படியிருக்க ஏன் இந்த இடம் இப்படி ஜன சஞ்சாரமற்று இருக்கிறது?

கிழக்கு வானத்திலே சந்திரன் சடுதியில் தோன்றிடுவானென அறிவிக்கச் சாம்பல் நிற ஒளி மெல்லத் தோன்றியது. அந்த மங்கிய நட்சத்ர ஒளியிலும் எதிரே இருந்த கிழக்கு வானத்தின் மங்கிய ஒளியிலும் அந்தச் சிலையின் பின்புறம் தெளிவற்று நிழலுருவமாகத் தெரிந்தது. ஆனல் அந்தத் தெளிவற்ற தோற்றத்திலேயே அதில் நிறைந்திருந்த ஒரு காம்பீர்யம் என் மனதைப் பறித்து விட்டது. உருண்டு திரண்டு சற்றே மேலே உயர்ந்து நின்ற அந்தப் புயங்கள் போர் என்றதுமே விம்மிப் பூரித்த பண்டைத் தமிழ் வீரனின் புஜங்களை நினைவூட்டின, நிமிர்ந்து நின்ற அந்தத் தலையிலும் அகன்றிருந்த அந்த மார்பிலும் சொல்ல முடியாத காம்பீர்யம் நிறைந்திருந்தது. சிலையின் பின்புறமே இவ்வளவு உணர்ச்சிகளை எழுப்புவதாக இருந்தால் முன் புறம் எப்படி இருக்க வேண்டும்!

ஆவல் காலையிழுக்க, வாய் ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருக்க, சிலையை நெருங்கினேன். இன்னும் வானில் வெண்மதி தோன்றவில்லை. சிலையின் முன்புறம் போய் நின்ற எனக்கு அதன் முகம் தெளிவாகத் தெரியவில்லை. என்னை அறியாமலே சிலையின் முன்பு உட்கார்ந்து விட்டேன். வாய் இன்னும் பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருந்தது. ஆனல் கையிலிருந்த விளக்கைச் சிலையின் முகத்தில் அடித்துப் பார்க்கவே தோன்ருமல் உட்கார்ந்திருந்தேன் பித்தனைப் போல,

சோமன் தன் கடனை முடிக்க உதயமாகி விட்டான். நிலவொளி மெள்ள மெள்ளச் சிலையின் முகத்தைப் பிரகாசப் படுத்தத் தொடங்கியது. நானும் பைத்தியம்போலச் சிலையைப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தேன். சிலையின் முன்புறத் தோற்றம் கம்பீரமாக இருந்ததோடு வேருெரு உணர்ச்சியும் அதிலே கலந்திருந்தது. அதை என்னவென்று சொல்ல! பயங்கரம் என்று சொல்லலாமா? ஆனல் அருவருக்கத் தகுந்த பயங்கரமில்லை அது!

என் வாயிலிருந்து கிளம்பிக்கொண்டு இருந்த இசையின் ஓசை மெள்ளக் குறைந்துகொண்டே வந்து கடைசியில் நின்றேவிட்டது. ஆனல் உதடுகள்மட்டும் அசைந்துகொண்டே இருந்தன.

சிலை! ஐயோ! சிலையா அது! அது என்ன உருவமென்றே எனக்கு விளங்கவில்லை. ஐயனர்? இராவான்!......இப்படிப் பற்பல பெயர்கள் என் மனதில் தோன்றி மறைந்தன. ஆனல் என் கண்கள் சிலையின் கண்களோடு ஒன்றிப்போயின! அந்த முகத்தில் இருந்த உணர்ச்சி—பயங்கரம்!... இல்லை காம்பீர்யம்—அதுவும் இல்லை வெறி...... மகிழ்ச்சி, சோகம், எல்லாம் கலந்திருந்தன அந்த முகத்தில்.

ஆனல் அந்தக் கண்கள்!...—... அப்பப்பா! என்ன சக்தி அவைகளுக்கு! எப்படித்தான் சிற்பி அவற்றிற்கு அந்த ரத்தச் சிவப்பு நிறத்தைக் கொடுத்தானே! அவை என்னை ஊடுருவிப் பார்த்தன. என் இதயத்துள்ளே நுழைந்து, அதைக் கிளறி, இன்னும் என்னவெல்லாமோ செய்தது அந்தப் பார்வை. வெளிச்சம் அதிகமாக அதிகமாக அந்தக் கண்கள் என்னை மேலும் மேலும் ஊடுருவிப் பார்த்தன. பார்க்கப் பார்க்க என் தலை சுற்றியது. ஏதேதோ எண்ணங்கள் என் மனதிலே ஓட வாரம்பித்தன. என் கடந்த வாழ்க்கை என் கண்ணில் பின்னே ஓடியது. பிறகு முன்னே திரும்பி ஓடியது. தாறுமாருக முன்னும் பின்னும் ஓட்டப்படும் சினிமா படத்தைப்போல நிகழ்ச்சிகள் ஓடி மறைந்தன. பிறகு மெல்ல அவைகளின் வேகம் குறைந்தது. ஆனல் ...ஆனல்...... நான் என் வாழ்க்கையிலே செய்துள்ள குற்றங்கள் மட்டும் என் முன்பு வந்து நர்த்தனமாடத் தொடங்கின...... ஆம்! குற்றங்கள் மட்டுமே! ஒவ்வொன்ருக என்னை வாட்டி வதக்கி......

தலையைச் சிலையினின்று திருப்ப நான் முயற்சிக்கவேயில்லை! அந்தக் கண்கள் என்னையே பார்த்தன! என்னைத் துழாவின! என்னை அலசி அலசிப் பார்த்துக் கத்தின: "சொல்லு! சொல்லு!"

நானும் பதிலுக்குக் கத்தினேன்! சிலையைப் பார்த்து வீரிட்டேன்! "போய்விடு! ஓடிபபோய் விடு! அல்லது உன் கண்களையாவது மூடிக் கொள்!" ஆனல் அது என்னைப் பார்த்துக் கொண்டேதான் இருந்தது.

நான் கத்தினேன்! "போதும்! போதும் என்னைப் பார்க்காதே! பார்க்காதே!" என் மனதிலிருப்பதை யெல்லாம் கொட்டி விடவேண்டும் போலிருந்தது எனக்கு.

என் குரல் சிற்ப மண்டபத்தில் மோதிவிட்டுத் திரும்பியது "பார்க்காதே!—பார்க்காதே!"

என் உடல் நடுங்கியது,

"பயப்படாதே!" ஏதோ ஒரு குரல் கேட்பது போலிருந்தது. நானே பேசிக்கொள்கிறேனு, என்னையே சமாதானம் செய்துகொள்ள? சுற்றுமுற்றும் திரும்பிப் பார்க்க வேண்டுமென்ற எண்ணமே என் மனதில் உதயமாகவில்லை. அந்தச் சிலையின் கண்களிலிருந்து என் கண்களை எடுக்கவே முடியவில்லை!

"தனியாக இரவில் வந்திருக்கிருயே! நீயாவது தைரியசாலியாக இருப்பாய் என்று நினைத்தேன்! நீயும் ஒரு பயங்கொள்ளிதானு!"

யார் பேசுகிறது? என் உள்ளுணர்வுதானா!

"நான் தான் உன்னெதிரே நின்றுகொண்டிருக்கும் சிலை; பேசுகிறேன்!"

அந்தச் சிலையின் கண்களில் ஏதோ ஒரு புது ஒளி வீசியது. அதன் மற்ற அங்கங்களெல்லாம் மறைந்து, அந்தக் கண்கள்—சிவந்த அந்தக் கண்கள் மட்டுமே எனக்குத் தெரிந்தன. அவை என்னுடனே ஒன்றிவிட்டதாக— என் கண்களுக்குள்ளேயே நுழைந்துவிட்டதாகத் தோன்றின! சிலையின் கண்களே பேசின. அவைகளே சிரித்தன! ஆனால் இப்போது அவை என் இதயத்தைக் கலக்கவில்லை. "சொல்லு! சொல்லு!" என்று கத்தவில்லை!

"ஏன் ஆச்சரியமாக இருக்கிறதா சிலை பேசுவது? கலைஞன் தத்ரூபமாக உயிர்ப் பிம்பமாகச் சிருஷ்டிக்க முடியுமென நம்பும் நீங்கள் அவன் அந்தச் சிலைக்கு உயிரை அல்லது உயிரின் ஒரு சின்னமாகிய பேச்சை ஊட்டியிருக்க முடியுமென்று ஏன் நம்ப மறுக்கிறீர்கள்!"

நான் சிலையின் கண்களையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

"என்னைப் படைத்த பிரும்மன்—அந்தச் சிற்பி—அதோ இருக்கும் அந்த மண்டபத்தை முடித்துவிட்டு என்னை உருவாக்கினான்! உலகத்திற்கே ஒருகலைப்பொக்கிஷத்தைக் கொடுக்கப்போகிறோம் என்ற மகிழ்ச்சியுடன் செதுக்கினான். ஆனால் அவன் பிறகு என்னாலேயே செத்தான்! ஆம்! நானே அவனைக் கொன்றேன்! இந்தப் பாழும் கண்களாலேயே கொன்றேன்!"

நான் நடுங்கினேன்!

"என்ன பயமாக இருக்கிறதா? என் கதையை முழுவதும் சொல்லட்டுமா?"

நான் பதில் சொல்லவில்லை. ஆனால் சிலை தொடர்ந்து பேசிற்று. அந்தக் கண்கள் பேசின!

"அந்தச் சிற்பி — இந்தச் சிற்ப மண்டபத்தின் தந்தை – கலை உலகத்தின் அரசன்! மண்ணுலகத்தின் அரசன் அவனை ஆதரிக்க வந்தான். ஆனால் கலையரசன் அதை உதறிவிட்டுத் தன்னந்தனியாக இந்தக் காட்டிற்கு வந்து தன் கலையை அப்யசிக்க ஆரம்பித்தான்.

பேருக்காகவும் புகழுக்காகவும் அல்ல. அவன் மனச்சாந்திக்காக- தன் உள்ளத்திலே கொந்தளித்துக்கொண்டிருக்கும் உணர்ச்சிகளுக்கு உருக்கொடுக்க! இந்தக் காடே வீடாக அமைந்தது அவனுக்கு. உணவுக்குக் கானகத்துக் கனிகள். நீரோடையின் தண்ணீர் பானகம்! கல்லும் உளியும் காதலிகள் – அவனுக்கும் அவைகட்கும் பிறந்த குழந்தைகளே இந்த அழியாச் சிற்பங்கள்.

"ஆனால் அவன் குழந்தைகளுள் ஒன்றே அவனைக் கொன்றுவிட்டது!"

சிலையின் கண்களிலே முதலில் இருந்த அமானுஷ்ய ஒளி திரும்ப ஒரு முறை தோன்றி மறைந்தது.

"சிற்பியின் குரு தம் சிஷ்யனுக்கொரு அபூர்வக் கலையை கற்றுக் கொடுத்திருந்தார். இதுவரை யாரும் அறிந்திராத முறையிலே சிலையின் கண்களை உருவாக்கும் முறை அது. அதை அவரே முயன்று பார்த்ததில்லை. சீடனுக்குக் கலையைக் கொடுத்துவிட்டுக் கூடவே கவலை தரும் செய்தியொன்றும் சொன்னார்—'சிஷ்யா! ஒரு சிலையைப் பூரணமாக வடித்துவிட்டு இந்த முறையில் அதற்குக் கண்களைத் திறக்க வேண்டுமென்றால் அதற்குப் பெரும் மனோதிடம் வேண்டும். வாழ்க்கையிலே அதற்கு முன்பு மனமறிந்து குற்றங்களே புரியாதிருந்திருக்க வேண்டும். இந்தச் சாதனையை நீ கைக்கொள்ள விரும்பினால் இதையெல்லாம் யோசித்துச் செய்!" என்று.

சிற்பி முதலில், அதோ தெரிகிறதே அந்தச் சிற்ப மண்டபத்தைச் சமைத்தான். ஆனால் எல்லாச் சிலைகளுக்கும் சாதாரண முறையில்தான் கண்களைத் திறந்துவிட்டான் ஆனால் அவன் உள்ளத்தின் ஓரத்தில் ஒரு ஆசை எப்போதும் குடிகொண்டிருந்தது, தனக்கு மட்டும் தெரிந்த வித்தையைச் செய்து பார்க்கவேண்டுமென்று.

"கட்டுக்கடங்காத ஆசை குருவின் வார்த்தைகளை மறக்கடித்துவிட்டது. என்னை உருவாக்கத் தொடங்கிய பின்னர் அவனுக்கு உலகமே மறந்து போயிற்று. வியூகத்தைப் பிளந்துகொண்டு உள்ளே சென்றுவிட்டு பிறகு வெளியில் வரத் தெரியாத அர்ஜுன குமாரனின் நிலையில் இருந்தான் சிற்பி.

"அன்று பௌர்ணமி! என் சிலை முடிந்துவிட்டது. கண்கள்தான் பாக்கி! அணுவணுவாக மிக ஜாக்கிரதையாக என் கண்கள் தயாராயின. சிற்பிக்கு வேறு நினைவே இல்லை. கடைசியில் அந்த நேரம் வந்தேவிட்டது. என் கண்கள் உருவாகிவிட்டன.

"சிற்பி மெள்ளத் தூரச்சென்று, நீ உட்கார்ந்திருக்கிறாயே அங்கே சென்று உட்கார்ந்து என்னைப் பார்த்து, 'ஆனந்திக்க' ஆரம்பித்தான். ஐயோ! அவன் ஆனந்திக்கவா செய்தான்! தான் செதுக்கிய சிலையே தனக்கு யமனாகவரும் என்று கனவுகூடக் கண்டிருக்கமாட்டானே! அவன் என்னைப் பார்த்தான். என் கண்களைப் பார்த்தான். நான் அவனைப் பார்த்தேன்! உற்றுப்பார்த்தேன். அவன் இதயத்தைக் குடைந்து பார்த்தேன்!

"முகத்திலே குடிகொண்டிருந்த புன்னகை மெல்ல மறைந்தது. அதிலே சொல்லமுடியாத பயங்கரம் வந்து புகுந்துகொண்டது. மிரளமிரள

விழிக்க ஆரம்பித்தான். பிறகு உன்னைப் போலவே கத்தினான்! என் கண்களை மூடிக்கொள்ளச்சொல்லிக், கத்தினான்! கண்ணைத் திறந்து விட்டவனே கண்ணை மூடச் சக்தியற்றவனாய்ப் புலம்பிக்கொண்டிருந்தான்.

அவன் புலம்பல்: "ஐயோ நிர்மலா! நானே உன்னைக் கொன்றேனே பாவி! கலையிலே காதல் கொண்டு கொண்டமனைவிக்குச் செய்யவேண்டிய கடமையை மறந்து நின்றதை எனக்கு நினைவூட்டினாய்! நீ உண்மையைத்தான் சொன்னாய்! ஆனால் நான் வெறியன்! வெறியில் உன்னையே நமனுலகுக்கு அனுப்பிவிட்டேனே!" இதையே திரும்பத் திரும்ப விழிபிதுங்கக் கத்திக்கொண்டிருந்தான் சிற்பி. கடைசியில் கையிலிருந்த உளியாலேயே தன்னையும் மாய்த்துக்கொண்டான்.

"என் தந்தை—எனக்கு உருக்கொடுத்து உயிர் கொடுத்தவன் குருதி வெள்ளத்திலே மிதந்தான். அதுவும் என்னாலேயே—என்னுடைய இந்தப் பாழும் கண்களாலேயே! ஆனால் சக்தியற்று—இந்தப் பாபக் கண்களை மூடவும் சக்தியற்று ஜடமாய் நின்றுகொண்டிருந்தேன் நான்.

"இந்தக் கண்கள் செய்த முதல் கொலை அது! அதோடு போயிற்று! பிறகு இங்கு வருபவர் ஒவ்வொருவரும் தற்செயலாக நீ உட்கார்ந்திருக்கும் அவ்விடத்துக்கு வந்துவிட்டால் உடனே கத்த ஆரம்பித்துவிடுவார்கள். தங்கள் வாழ்க்கையின் பயங்கர ரகசியங்களை எல்லாம் வெளியிட்டு விடுவார்கள். சுற்றி எத்தனைபேர் இருந்தாலும் சரி. எந்த நேரமாக இருந்தாலும் சரி. கத்திக்கொண்டே இருப்பார்கள்!



"முதலிலே ஒரு பிரயாணக் கூட்டத்தோடு ஒரு இளம் தம்பதிகள் வந்தனர். அந்தக் கணவன் மட்டும் தனியாகப் பிரிந்து முதலில் என்னைப் பார்க்க வந்தான். இதே நேரம் இதே உணர்ச்சிகள். பிறகு சத்தம்.

"அவன் வீரிட்டுக் கத்த ஆரம்பித்தான். அவனும் ஒரு கொலைகாரன் போலிருக்கிறது." ஆம்! நான் தான் அவனைக் கொன்றேன்? நானேதான் கொன்றேன். எனக்கும் அவளுக்கும் நடுவே குறுக்கிட்டு எங்கள் வாழ்வைப் பாழடிக்க வந்த அவனைக் கொன்றேன்." அவன் இவ்வாறு கத்திக்கொண்டேயிருந்தான். எல்லோரும் ஓடிவந்தனர்.' அவனுடைய மனைவி அழ ஆரம்பித்து விட்டாள். அப்போது அந்தக் கூட்டத்திலிருந்து வஞ்சகப் புன்னகையுடன் ஒருவன் வெளியேறினான்! இவனுக்கு விரோதியோ என்னவோ!

"கொஞ்ச நேரத்தில் அரசாங்க அதிகாரிகள் வந்து விட்டனர். அவனே முன்போலவே தானே கொன்றதாகக் கத்திக் கொண்டிருந்தான். அவன் கையிலே விலங்கிட்டு அவனை அழைத்துக் கொண்டு போனார்கள். என் கண்களை விட்டுத் தன் கண்களை எடுத்ததும் அவனுக்குத் தன் நினைவு வந்தது; ஆனால் பயன்! அவனைக்கதறக் கதற அழைத்துப் போனார்கள்! அவன் இளம் மனைவியும் கதறினாள். "பாழும் சிலை'" என்று என்னைத் திட்டினாள். கல் கொண்டு என்னைச் சிதைக்க வந்தாள்.

"ஆனால் சுற்றியுள்ளவர்கள் தடுத்து விட்டார்கள். கலைப் பொக்கிஷம் என்றார்கள் என்னை. கலையைக் காப்பதில் தான் எவ்வளவு அக்கரை அவர்களுக்கு! ஆனால் ஒருவராவது என் முன்பு தைரியமாக வந்து நிற்கவில்லை! இது தான் எனக்கு இரண்டாவது பலி!"

சிலையின் கண்களிலே இருந்த பயங்கரம் இப்போது முற்றிலும் போய் விட்டது. ஆனால் அதிலே எல்லையில்லாத சோகம் குடி கொண்டிருந்தது.

"இந்தக் கதை பிறகு அடிக்கடி நடந்தது. அநேக குற்றவாளிகள் என்னால் பிடிக்கப் பட்டனர். குற்றவாளிகள் தண்டிக்கப் படவேண்டியவர்கள்தான். ஆனால் அதற்கு நானா கருவியாக வேண்டும்? நாளாக ஆக என்னைச் சுற்றி நடமாட்டம் குறைந்தது. என்னைக் கண்டாலே எல்லோருக்கும் பயம். என்னுள்ளே ஒரு பேய் குடி கொண்டிருக்கிறதென்று பேசிக் கொண்டார்கள். ஆம்! இந்தக் கண்கள் பேய்கள்தான்!

"என்னைப் பார்க்க யாரும் வராதது எனக்கு மகிழ்ச்சியே தந்தது ஆயினும் அடிக்கடி விவரம் தெரியாத யாராவது உன்னைப்போல் என்னைப் பார்க்க வந்துவிடுகிறார்கள் அப்புறம் பழைய கதைதான்.

"என்னால் இந்தக் கண்ணராவி வாழ்க்கையைத் தாங்கவே முடியவில்லை. இதற்கு என்றுதான் முடிவோ!"

சிலையின் கண்களிலே நிறைந்திருந்த சோகம் என்னைப் பிழிந்தெடுத்தது. என் கண்களிலேயும் என்னை யறியாமலே இரண்டு பொட்டுக் கண்ணீர் வடிந்தது.

சிலை பேசிற்று. "ஆஹா! நீயும் அழுகிறாயா! எனக்காக என் கதையைப் பொறுமையுடன் கேட்டு அதற்காக வருந்தும் ஆத்மாகூட இவ்வுலகில் இருக்கிறதா! அப்படியானால் நீ எனக்குச் செய்யக்கூடியது ஒன்றே ஒன்றுதான். அதோ உன்னருகில் கிடக்கும் அந்தக் கூர்மையான பாராங் கல்லினால் பயமில்லாமல் என் கண்களை, இந்தப் பாபக் கண்களை உருத்தெரியாமல் சிதைத்துவிடு! ஆம்! கலையரசனின் கடைசி அமர சிருஷ்டி அழிந்தே போகவேண்டும். தன்னைக் கண்டவர்களுக்கெல்லாம் அழிவு தேடும் இந்தச் சிற்பம் தொலைந்தே போகவேண்டும்? என்னுடைய இரண்டாவதுபலியான மனிதனின் மனைவி செய்ய முயன்ற புண்ய கைங்கர்யத்தை நீயாவது முடித்து விடு.

"ஏன்? என்னருகில் வரக்கூடப் பயப்படுகிறாயா! அல்லது 'கலைப் பொக்கிஷத்தை அழிக்கத்' தயக்



கமா! நான் அமர கலையின் சின்னம்தான்! ஆனால் நான் கொல்லும் கருவி! மனதிலே மறைந்துபோன உணர்ச்சிகளை யெல்லாம் கிளறும் கருவி. ஆறப்போகும் புண்ணை ரத்த விளாருக்கும் வேல்......

"முடியாது! என்னால் முடியவே முடியாது. இந்தக் கோர வாழ்க்கை முடிந்துதான் போக வேண்டும். மனமிரங்கி என் வேண்டுகோளைப் பூர்த்திசெய்!"

சிலை கத்திற்று "செய்! செய்" என்று.

எனக்கு மறுபடியும் தலை சுற்றிற்று. எப்படியோ என் இடத்தைவிட்டு எழுந்து அந்தக் கல்லைக் கையில் எடுத்தேன். திமிர்ந்து சிலையை நோக்கினேன்.

அப்போது நான் முதலில் இருந்த இடத்தில் இல்லை! சிலையின் கண்களிலே நான் கண்ட உணர்ச்சிகள் ஒன்றுமே எனக்குத் தெரியவில்லை. ஆனால் காதுகளில் மட்டும் "செய்! செய்" என்று சப்தம் கேட்டுக்கொண்டே இருந்தது.

பித்துப் பிடித்தவனைப்போலக் கல்லை எறிந்து விட்டு ஓட ஆரம்பித்தேன். என் காதுகளில் ஏதோ குரல் கேட்டது.

"ஐயோ! நீயும் அந்த இரக்கமற்றவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவன் தானா! உனக்கும் இரக்கம் இல்லையா! இரக்கமே இல்லையா!"

கொஞ்ச தூரம் ஓடியவன் தலைகுப்புற விழுந்தேன். அப்படியே வெகு நேரம் கிடந்தேன். நான் விழித்துப் பார்த்தபோது சந்திரன் உச்சிக்கு வந்து விட்டான். என் அனுபவங்கள் கனவா நனவா என்று எனக்குப் புரியவில்லை. விடு விடென்று எழுந்து வீடு நோக்கி நடக்க ஆரம்பித்த என் தலை என்னை யறியாமலேயே பின்புறம் திரும்பிப் பார்த்தது.

தூரத்திலே தெரிந்த சிலையின் பின்புறம் காம்பீர்யத்தின் சின்னமாக விளங்கிக் கொண்டிருந்தது!

* * *

மறு நாள் நான் விட்டுப் போன 'டார்ச்' விளக்கை எடுத்துவரச்சென்றபோது அந்தச் சிலையைப் பல இடங்களிலிருந்து பார்த்தேன். முந்திய இரவு நான் உட்கார்ந்த இடத்தில் உட்கார்ந்து பார்த்தேன். ஆனால் என் மனதில் ஒரு உணர்ச்சியும் தோன்றவில்லை!

அப்படியானால் என் முந்திய இரவு அனுபவங்கள் கனவு தானா! குழம்பிய மனதின் எதிரொலி தானா!

இதற்கு விடை எனக்கு இன்னும் கிடைக்கவில்லை. ஆனால் அந்தச் சிலையை இன்னொரு இரவு போய்ப்பார்க்க எனக்குத் துணிவு வரவில்லை!


# இண்டோ கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

**மதராஸ்**

**ஸர். A. ராமஸ்வாமி முதலியார்,**
K. C. S. I., D. C. L. (Oxon)
**சேர்மன்**

செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 18,75,000
ரிஸர்வ் நிதி ரூ. 10,75,000

சென்னையிலுள்ள ஆபீஸ்கள் :

நேதாஜி ஸுபாஷ் சந்திரபோஸ் ரோட், மயிலாப்பூர், திருவல்லிக்கேணி, தியாகராயநகர் & பெரியமெட்.

தென்னிந்தியாவிலுள்ள எல்லா முக்கிய நகரங்களிலும் கிளை ஆபீஸ்கள் உள்ளன.

# போனவன் போனவனே!

எம். எஸ். சுப்பிரமணிய அய்யர்

புஷ்பவனம் என்று ஓர் ஊர். அங்கே பரம ஏழை ஒருவன். அவனுக்கு ஆஸ்தி ஒரே ஆடு. அவன் குடும்பமோ பெரிது. குழந்தை குட்டிகளைக் காக்க வகை இல்லை. ஆதலால், ஆட்டை விற்க அவன் எண்ணினான்; அதனைக் கையில் பிடித்துக்கொண்டு திருவையாறு சென்றான்.

திருவையாற்றிலே வாரந்தோறும் சந்தை கூடும். அச் சந்தையிலே ஆட்டைவிற்று, அதன் விலையைக்கொண்டு குடும்பத்தைக் காப்பதே அவன் கருத்து. போகும் வழியில் துஷ்டர் இருவர் அவனைச் சந்தித்தனர். ஆட்டின் கொழுமை கண்டு உள்ளம் களித்தனர்.

ஆட்டை வாங்கித் தின்ன அவர்களுக்கு ஆசை. அவனோ அதன் விலைரூபாய் ஐந்து என்றான். அவர்கள் ஐந்து பணத்துக்குக் கேட்டனர். அவன் மறுத்தான். அத் துஷ்டர் அவனையும் அடித்து, ஆட்டையும் கொன்று போட்டனர். ஆஸ்தி போனதோடு அடியும் கிட்டியதே என்று அவன் அலறிக் கொண்டு வீடு திரும்பினான்.

புஷ்பவனத்தை அணுகுகையில், ஒரு மா மரத்தின் அடியிலே யோகி ஒருவரைக் கண்டான். அவர் கண்மூடி, கருத்தைக் கடவுள் பால் இருத்தி, யோகத்தில் அமர்ந்திருந்தார். அவரது முகத்திலே ஒளி யொன்று வீசியது. ஆதலின் அவருக்கு முன்னே, அந்தச் செத்த ஆட்டைப் போட்டு விம்மி விம்மி அவன் அழுதான். அவர் கண் திறக்க வில்லை.

"ஆலயத்திலே கடவுள்தான் கல்லாய்க் கிடக்கிறார் என்றால், இப் பெரியவரும் பாறைக்கல்போல் அசைவற்றுத் தோன்று கிறாரே. எல்லாம் எனது பாவம்,'' என்று அவன் எண்ணும் நேரம், கண் திறந்தார் அவர். ஆட்டை நோக்கினார். அவனையும் உற்றுப் பார்த்தார்.

உடனே அவர் ஒருதுளி மண்ணை எடுத்து, அவன் கையில் கொடுத்து, "இதனைக் கெட்டியாய் மூடிக்கொள். வீடு சேர்ந்ததும் கையைத் திறந்து பார். கருதிய காசு காணப்படும்,'' என்று கூறி விடுத்தார்.

நம்பினார் கெடுவதில்லை, இது நான்கு மறைத் தீர்ப்பு, என்று தேசிய கவிராஜ சிங்கம் பாடியிருக்கிறார் அல்லவா? யோகியை நம்பின ஏழை தனது குடிசை சென்று, கையைத் திறந்தான். அதில் ரூபாய் ஐந்து இருந்தது. அப்போது அவன் அடைந்த ஆனந்தத்துக்கு ஓர் அளவே இல்லை.

அக் காசு கொண்டு அவன் களிப்பு மிகுந்து காலம் தள்ளிவந்தான். இதனை அத் துஷ்டர் அறிய வந்தனர். வரவே, "ஏழை பாழைகளை இவ்விதம் கெடுக்கும் சாமியார்களின் புரட்டை அம்பலம் ஆக்க வேண்டும்,'' என்று துணிந்தனர். சூழ்ச்சி யொன்றும் செய்தனர்.

அப் பெரியார் சமாதி கலைந்து கண் விழிக்கும் தருணம். எதிரே பாடையொன்று பார்த்தார். அதில் ஒரு மனிதன் கிடத்தப் பட்டுப் பிணக் கோலத்துடன் கிடந்தான். அதனைத் தூக்கி வந்த நால்வரும் தம் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அரற்றினர். பார்த்தார் அப் பெரியவர்.

"எங்கள் ஐயனே! ஆட்டுக்கு உயிர் ஊட்டிய உத்தமனே! அன்று அத்துஷ்டர் அடித்துப்போட்ட ஆடு இதோ தங்கள் முன் னிலையில் படுத்துக் கிடப்பதைப் பார்க் கின்றோம். ஆட்டுக்கு உடையவனும் அதன் கிரயத்தைப் பெற்றுக் களிப்பதையும் அறிவோம். இதோ பாடையில் கிடப்பவன் பெரிய குடும்பி. அக் குடும்பத்துக்கு வேறு திக்கு இல்லை. எனவே இவனைப் பிழைப்பு மூட்டிக் கருணை புரிய வேண்டும். ஆட்டுக்கு இரங்கினவர், மானிடன் மீது இரக்கம் வையீரோ? '' என்று பேசினர்.

அவர், "அப்படியா, இப் பாடையில் கிடப்பவன். இறந்துவிட்டானா? அவன் இறந்தது உண்மைதானா? உண்மையானால் அவனது பெருங் குடும்பம் பெரிதும் வருந்துமே,'' என்று மனங்கரைந்து மொழிந் தார்.

அவர்கள், "ஐயா! பெரியாரே! இம்மனிதன் எங்களது பெரு நண்பன். உங்களுக்குச் சங்

தேகம் ஏன்? உண்மையில் இவன் இறந்தே போய்விட்டான். இவனைப் பிழைப்பு மூட்டவேண்டும்,'' என்று கூறிக் கண்ணீர் வடித்தனர்.

''உங்களுக்கு நண்பனு? இறந்தே போய் விட்டானு? ஐயோ பாவம்! என்ன செய்யலாம். போனவன் போனவனே'' என்று அப் பெரியவர் புகன்ருர்.

"இவரால் என்ன ஆகும்? பெரிய வேஷ தாரி. பாரை மயக்க வந்திருக்கிருர். இவனைப் பிழைப்பிக்க இவரால் ஆகாது. பெரியவரே! பாரும் எங்கள் சக்தியை! நாங்கள் இவனுக்கு உயிர் ஊட்டுகிறேம் என்று கம்பீரமாக வார்த்தையாடினர்.

உடனே, அப் பாடையைக் கலேத்து, பிணக்கோலத்தையும் களேந்து, "அன்பனே எழுந்திரு'' என்று எக்களிப்புடன் இசைத்தனர்.

உயிரோடு இருப்பவனேயே பாடையில் கட்டி, அவர்கள் கொண்டு வந்திருந்தனர். ஆதலின் அவன் இனிதாக எழுந்து விடுவான் என்பதே அவர்களின் துணிவு. ஆனுலும் என்ன? வானம் பொய்த்தாலும், வாரிதி வறண்டாலும் நல்லோரின் வாக்குப் பொய்க்குமா? போனவன் போனவனே என்று அவர் உரைத்தது வீண்போமோ?

"விஷப் பரீட்சை செய்தோமே. பெரியாரைப் பகைத்துக்கொண்டோமே. அருமந்த நண்பனே இழந்தோமே. அன்று ஆட்டைக் கொன்றவன் இன்று மாண்டுபோனுனே'' என்று சொல்லவும் முடியாமல் வந்த வழியே திரும்பிப் போயினர் அத் துஷ்டர் நால்வரும்.

*  *  *

அப் பெரியவரின் பெருமை அப் புஷ்ப வனம் எங்கும் பரவிற்று. சாப, அனுக்கிரஹ சக்தி அவருக்கு உண்டு என்பதை எல்லோரும் அறிந்துகொண்டனர். அவர்களில் ஓர் அந்தணச் சிறுவன். தள்ளாத வயதுடைய தந்தையையும் தாயையும் காப்பாற்ற வேண்டும். குழி நிலமும் கிடையாது. கையிலே காசும் இல்லே. பாடுபட்டு உழைக்கவோ அறியான். ஆனுல் வேதம் ஒன்றில் வல்லவன். உச்சரிபபும் ஸ்வரமும் இம்மியும் பிசகாமல் ஓதுவான். தினம் தினம் அவன் அப் பெரியாரின் முன்னேவந்து நிற்பான். அவரை மும்முறை வலம்வருவான். பின்னர் அவர் எதிரே நின்றுகொண்டு சிறிதும் பிசகின்றி அவ்வேதத்தை ஓதுவான்.

அன்று துஷ்டரால் அடிபட்டு உயிர் பிழைத்த அந்தஆடும் அவரை நாள்தோறும் குறிப்பிட்டநேரத்தில் சுற்றிவரும். அப்பால் அவரது எதிரில் படுத்துக் கிடக்கும். அந்தணச் சிறுவன் வேதம் ஓதும்போது, அவனது வாயைப் பார்த்துக் கொண்டே நிற்கும். அவரை அவன் வணங்கி விடை கொள்ளும் பொழுது சிறிது தூரம் அவன் பின்னே சென்று வழிவிடும்.

அவன் வேதம் ஓதுங்கால், சிலநாள் அவர் யோகில் இருப்பார். சிலநாள் விழித்து நோக்குவார். அவ் விளேஞன் மீது அவருக்கு ஆர்வம் பிறந்தது. வேத கோஷம் கேட்டு அவரது உள்ளம் உருகியது. ஒரு நாள் அவனே அவர் கனிந்து நோக்கினுர். "அப்பா!'' என்று அழைத்தார். அவன் கைகட்டி, வாய் புதைத்துக் கடவுளேக் கண்ணெதிரே கண்டதுபோல் பரவசம் கொண்டான். கலி நீங்கும் என்றும் நினேத்தான்.

அப்போது தஞ்சையை ஆண்டுவந்த அரசர் சரபோஜி எனப்படுவார். அவர் மராட்டிய மரபினர். மிக்க தெய்வ பக்தி உள்ளவர். பிருகதீசுவரரிடம் பெரும் பற்றுக் கொண்டவர். நாள் தவறினுலும் அக் கடவுளின் ஆலயஞ் சென்று தரிசனம் செய்ய அக் காவலன் தவருன்.

அவனது சபையிலே பலவாருன கலேவல்லார் இருந்தனர். அவனுக்கு நெற்றியிலே ஒரு சிலந்தி உண்டாயிற்று. மருத்துவ வல்லாரினுல் அக் கட்டியை ஆற்ற இயலவில்லே. தெய்வத்தை வேண்டிக்கொண்டும் தக்க பலன் கிட்டவில்லே. அச் சிலந்தியிலிருந்து சதா சீழ்வடியும். அது முகத்தில் சொட்டும். அந்த அருவருப்பு அவனுல் தாங்க முடியவில்லே.

முன்னே வினேயின் பயன் இச் சிலந்தி தோன்றியது. இதனே எவரும் போக்க முடியவில்லே. அவ் வினே தீர்ந்தால் அல்லவா, இச் சிலந்தி மறையும். "இது மறையும் நாள் எந்நாளோ?'' என்று அச் சரபோஜி சிந்தாகுலத்துடன் கிடக்கலானுன்.

ஒரு நாள் அம் மன்னவன் உணவு அருந்த உட்கார்ந்து, கைதனிலே ஒரு பிடி சாதம் எடுத்து வாயிலே போட்டுக் கொள்ளப் போகையில், சிலந்தியிலிருந்து வடியும் சீழில் ஒரு சொட்டு அந்த அன்னத்தில் வீழ்ந்தது. அது கண்டதும், "அந்தோ என்ன செய்வேன்?'' என்று அவன் நெஞ்சம் புண்ணுயிற்று.



# பால், அநேகமாக ஒரு பூரண உணவு

மற்றெந்த உணவைக்காட்டிலும் பாலில் உணவு சத்துக்கள் மிகவும் ஜாஸ்தியாக இருக்கின்றன. இக்காரணத்தால், கிடைக்கும்பொழுது ஒன்று அல்லது இரண்டு கிளாஸ் பால் சாப்பிடுவது வயது வந்தவர்களுக்கு மிகவும் பயன் தரும். ஆனால் குழந்தைகளுக்கும், தேக மெலிவுற்றவர்களுக்கும், கிழவர்களுக்கும் இது மிகவும் முக்கியமானது. சாதாரணமாக, ஆதர்ச தினசரி உணவு, கீழ்கண்ட வகைகளில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உணவு பொருள்கள் அடங்கிய "சமநிலை" உணவுதான்: (1) விடமின்கள்: பால், பழம், பச்சைக்காய்கறிகள், வேகவைத்த காய்கறிகள், ஈரல், (2) தாதுப் பொருள்க்ள்: பால், முட்டை, பாலேடு, மீன், பசலைக்கீரை, இதர பச்சை இலைக்கறிகள், கொட்டைகள், (3) புரதசத்துக்கள்: பால், முட்டை, இறைச்சி, பருப்புவகைகள், மீன், கொட்டைகள், (4) மாவுசத்துக்கள்: எல்லாவிததானியங்கள், அரிசி, உருளைக்கிழங்கு, வாழைப்பழம். ஐந்தாவது வகையான கொழுப்பிற்கு: சிறந்த கொழுப்புகளில் ஒன்றாகிய டால்டா சுத்தமானது, ஊட்டமளிக்கக்கூடியது, எல்லாவித சமையலுக்கும் உகந்தது. சீல்வைத்த டின்களில் சுத்தமாகவும், புதிதாகவும் உங்களுக்கு கிடைக்கின்றது.




மரக்கறி உணவு அதிக ஊட்டமளிக்குமா?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 152-172 TM

அத்தருவாயில் அரண்மனை வாயிலிலே அந்தணச்சிறுவன் ஒருவன் அவசரமாக வந்து, அரசனைக் காணத் துடித்து நிற்பதாகக் காவலாளர் கடுகிவந்து உரைத்தனர். "தட்டாது அவனை உள்ளே விடுக. அவனுக்கு அன்னம் அளிப்போம். அதன் பின்பாவது இச் சீழும் சிலந்தியும் தொலையுமா? என்று பார்ப்போம்" என்பதாக அச் சரபோஜி நினைத்த நேரம்.

அச் சிறுவன் அரண்மனையின் உள்ளே விரைந்துபுகுந்தான். தன் கைதனிலிருந்த பச்சிலையைப் பிழிந்து அதன் சாற்றை அச் சிலந்தியின் மீது தடவினான். தடவிய உடனே தலையிலிருந்த பாரம் நீங்கியதே போல் அரசனுக்கு நிம்மதி பிறந்தது. மாலையிலே அச் சிலந்தி காயத்தலைப்பட்டது. ஒரு வார காலத்திற்குள் அது அமுங்கி, இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. மருத்துவ பூபதிகள் அது கண்டு அப் பையனை அசுவினி குமாரனோ என்று அதிசயித்தனர்.

அச் சிறுவனோ, "எல்லாம் ஈசன் செயல். அப் பெரியவரின் கருணை. தினம் அவரை அடுத்து நின்றேன். எனது வறுமை நோய் தீர இம் மூலிகையை அவர் எடுத்துக் கொடுத்து இங்கே அனுப்பினார்," என்று அம் மூலிகையின் மர்மத்தை மொழிந்தான்.

அவ்வளவில் அரசனும் ஆஸ்தான கலைஞரும் கால் நடையாகச் சென்று, திருப்பூந்துருத்தி புஷ்பவனம் சேர்ந்து அப் பெரியாரைக் கண்டு அவரது பாதம் பணிந்தனர். அவருக்கு அங்கே ஒரு மடம் கட்டவும் மன்னவன் கருதினான். அவரோ முக ஜாடையினால் அதனை மறுத்தார், பின்பு அவன் அவரைப் பன்முறை வேண்டி நின்றான்.

அதுசமயம் அந்த ஆடு — அவரது சன்னிதியில் படுத்திருந்த ஆடு, — திடீரென எழுந்து, தினம் வலம் வருவதினும் அதிக விசாலமான வலம் செய்தது. அதனைச் சூசகமாகச் சரபோஜி கொண்டான். உடனே அந்த இடத்தில் ஒரு மடம் கட்டி வைத்தான். அவரைத் தஞ்சைக்கு அழைத்தும் அவர் மறுத்து விட்டார்.

சிலந்தி மறைந்ததும், வறுமை நோய் அகன்ற அச் சிறுவன், "அரசே! இப் பெரியார் இங்கேயே ஜீவ சமாதி அடைதல் வேண்டும் என்பது ஆண்டவனது விருப்பம். ஆதலின் அவரைத் தஞ்சைக்கு அழைப்பதில் பயனில்லை" என்று அறிவுறுத்தினான்.

* * *

விழுமிய வேளாளன் ஒருவன் திருநெய்த்தானத்தில் வசித்து வந்தான். அவன் பெருங்காணி வளம் உடையவன். அவனுக்கு ஏறக்குறைய ஐம்பது வயது ஆகிவிட்டது. சந்ததி ஒன்றுமே இல்லை. "இப் பெருஞ் சொத்தை யார் அடைவது?" என்று அவன் கலங்கினான். மன்னவனது மாயாச் சிலந்தியை ஒரு மூலிகையினால் போக்கிய அந்தணச் சிறுவனை முன்னிட்டுக் கொண்டு அப்பெரியவரை அவன் அணுகினான்.

அவரோ, 'அப்பனே' உனக்கு இரண்டு பிள்ளை பிறக்கும். சடைமுடியுடன் பிறக்கும் பிள்ளையை உடனே எனக்குத் தந்துவிடுதல் வேண்டும். சம்மதமா?" என்றார். மழைத் துளிக்கு வருந்தி நின்ற பயிர், வானத்தே மேக மூட்டத்தைக் கண்டு மகிழ்வதே போல் அவ் வேளாளன் பெரு மகிழ்வு எய்தினான். பெரியவரின் கட்டளைப்படியே நடப்பதாக வாக்குறுதி கொடுத்தான்.

பல சொல்லி என்ன? நாளடைவில் அவ் வேளாளனுக்குப் புத்திர பாக்கியம் உண்டாயிற்று. இரண்டாவது குழந்தை சடையுடன் பிறந்தது. அது மன்மதக் குஞ்சு போல் தோன்றியது. தாயார் அக் குழந்தையை நோக்கி நோக்கி மகிழ்ந்தாள்; நைந்தாள். "அப்பனே! உன்னைச் சீராட்டிப் பாராட்டிப் பாலூட்டி வளர்க்கும் பாக்கியம் பெற்றிலேன் யான். நீ அப்பெரியவரின் உடைமை அன்றோ?" என்று கனிவும் கரைவும் ததும்பக் கூறித் தனது கணவனுடன் சென்று அப் பெரியவரை அடைந்து, அவருடைய பாதத்தில் பச்சைக் குழந்தையைக் கிடத்தினாள். பின்பு தனது ஆருயிரை அங்கு விட்டு வருவது போல் எண்ணி அப் பெரியவரின் சந்நிதியை விட்டு அகன்றாள். வேளாளனும் அவரை வணங்கி விடை கொண்டான்.

பிறந்த அப்பச்சைக் குழந்தைக்குப் பால் வேண்டுமே. அன்று செத்துப் பிழைத்த ஆட்டின் பாலே அச் சிசுவுக்குத் தாய்ப்பால் ஆயிற்று. பெற்ற தாயினும் மிக்க பரிவாக அந்த ஆடு நடந்து வந்தது, அக் குழந்தையினிடம். தக்க வயது வந்ததும், அக் குழந்தையை அவர் தமது சீடனாக ஆக்கிக் கொண்டார்.

அப் பெரியார் ஜீவன் முக்தி அடைய வேண்டிய காலம் நெருங்கியது. நெருங்கவே தமது அன்பர்கள் பலரும் பார்த்திருக்க

அவர் அம்மடத்தே எழுந்த ஆலயத்தின் கர்ப்பக் கிருஹத்துக்குள் நுழைந்தார். நுழைந்த அளவில் ஜோதியென்று தோன்றியது; அவ்வளவு தான். அப் பெரியவரைக் காணவில்லை. அவர் எங்கே போனார்? எவ்விதம் மறைந்தார்.' வாசகரே அறிந்து கொள்ள வேண்டும்.

அவர் ஜீவன் முக்தியடைந்த செய்தி தஞ்சைக்கு எட்டியது. எட்டவே சரபோஜி மன்னன் சட்டென எழுந்து கால் நடையாகச் சென்று அப்புஷ்பவனம் நண்ணினான். "வாரம் ஒரு முறை இம் மடத்துக்கு வந்து போகும் நான் சற்று முன்னதாகப் பாராது போனேனே. நான் கொடுத்து வைத்தது இவ்வளவு தான்" 'என்று கருதிக் கண்ணீர் வடித்தான். பிறகு அந்த மடத்தை அவன் சிறிது விசாலித்தான்.

நாள் தோறும் அங்கே அவரது நினைவாகப் பூசையும் நிவேதனமும் நடத்த ஏற்பாடு செய்தான். அதற்கு ஆகும் செலவை அரண்மனையிலிருந்து கொடுத்து வரவும் கட்டளை பிறப்பித்தான். அதற்காகத் தனியே ஒரு மானியமும் நிருமித்தான். உண்மை உணரவிரும்புவோர் தஞ்சை அரண்மனை நண்ணி, அந்த அரச வமிசத்தின் பிரதமரைக் கேட்டறியலாம்.

நாள்தோறும் பூசனை, பஜனை இவை நடக்கும் பொழுது அவரது உருவத்தை முன்னம் கண்டிராதார் கண்டு களிக்கவேண்டும் அல்லவா? அது பற்றி, தஞ்சை திருக்காட்டுப் பள்ளிக்கு அருகே உள்ள வரகூர் என்னும் கிராமத்தின் ஆலயத்திலிருந்த அவரது உருவப் படத்தை அங்கே அமர்த்தினர்.

வரகூருக்கு அவர் வந்த விதம், அங்கே அவர் வாழ்ந்த வகை இவை யெல்லாம் வேறு கதை. இங்கே வரைய இடம் ஏது? அவர் அநேக நூல்கள் வடமொழியிலே இயற்றியுள்ளார். அவற்றில் ஒன்று கிருஷ்ண லீலா தரங்கிணி எனப்படும். அதில் அவர் தம்மை வேதாந்த சிம்மம் என்று கூறிக் கொள்கிறார். நாராயண தீர்த்தர் என்பது அவரது இயற்பெயர் என்று அறியக் கிடக்கின்றது.

புஷ்பவனத்திலே அவரது சமாதியும் அதற்கு எதிரே ஓர் ஆட்டின் சிலையும் காட்சியளிக்கும். கண்டு மகிழ்வோர் மகிழ்க!




எமது முதல்தரமான

சொந்தத் தயாரிப்புகள் !!

மாவு மில், நெல் மெஷின், சீயக்காய் மெஷின், காபி மில், தண்ணீர் பம்புகள் முதலியனவும் அவற்றின் ஸ்பேர் சாமான்களும் எமது தொழிற்சாலையில் எமது சொந்த மேற்பார்வையில் தயாரிக்கப் படுகின்றன!

மற்றும் பெல்டிங்குகள், டேவீஸ் எமரி, பேரிங்குகள் முதலிய மில்லுக்கு வேண்டிய சகல சாமான்களும் எப்போதும் கிடைக்கும்!

கே. சுவாமிநாதன் & கம்பெனி

24, எர்ரபாலு செட்டி தெரு, சென்னை.

பிராஞ்சுகள்: பெனிங்டன் ரோட், தஞ்சாவூர்.

No. 22, சில்வர் ஜூபிலி பார்க் ரோட், பெங்களூர் ஸிடி.

No. 8/44, ஜெயில் ரோடு, கோயமுத்தூர்.

தொழிற்சாலை: 7, வால்டாக்ஸ் ரோட், சென்னை.




இரண்டாயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்: ஜன சமூகத்தில் கட்சிக்கூறுகள் போட்டிகளோடு அமைதியாகப் பரவத் தலைப்பட்ட காலம். மனிதனின் மனப் பான்மை விரிந்தது. நல்லது, கெட்டதைப் பாகுபடுத்திக் கொள்ளும் அறிவுணர்ச்சி வளர்ந்தது. பழமையில் சலிப்பும், புதுமையில் ஆர்வமும் தலையெடுத்த முற்போக்கு நோக்குகள்; மனிதன் தன் தன்மை, தன் சக்தி முதலியவற்றை உணர்ந்து, நம்பி, நம்பவும் செய்துகொண்டிருந்த புத்தெழுச்சி; வாழ்வில் கொள்கை—மதம் எல்லாவற்றையும் அமைத்துக்கொண்டு, அவற்றில் விருப்பு வெறுப்புகளைக் காட்டி, பல கிளைகளாகப் பிரிந்து பரவிக்கொண்டிருந்த புதுப் பரபரப்பு; பழங் கட்டுப்பாடுகளைக் களைந் தெறிந்துவிட்டுத் தன்னை யறியாமலே புதுக் கட்டுப்பாடுகளில் புக விரும்பும் விசித்திர மான கிளர்ச்சிகள்;—இந்தச் சூழ்நிலையிலும் மனித இனம் அமைப்போடு, முறையோடு, ஆனந்தமாக வாழ்ந்தது!

பார்சுவநாதர் பிறந்தார். ஜைன மதம் பிறந்தது. காசி மன்னன் அச்வஸேனனுக்குப் பிள்ளையாகப் பிறந்ததினால்தானோ என்னவோ, அப்போதே அவர் சொல்லும், செயலும் மதிப்போடு பரவி 'மதம்' ஆகிவிட்டது.

வைசாலி நகரத்தைச் சேர்ந்த ஓர் க்ஷத்திரியனுக்கு வர்த்தமானர் என்ற இயற்பெயரோடு மஹாவீரர் தோன்றினார். ஜைன மதத்திற்குத் தலைமை தாங்கி, அதைத் தழைக்கச் செய்தார். காலக் கிரமத்தில் தாமும் தெய்வமாகி, தமக்குப் பின்னால் வரும் ஜைனாசாரியர்களான தீர்த்தங்கரர்களையும் தெய்வமாக்க வழி செய்தார். பிற் காலத்தில் ஜைன மதம் 'சுவேதாம்பரர்' என்றும், 'திகம்பரர்' என்றும் பிரிந்தது. ஆனால் பகைத்துக்கொள்ளவில்லை.

வர்த்தமான மஹாவீரர் ஜைன மதத்தைப் பரப்பிய வகையையும், வழியையும் பற்றிப் பலபல கதைகள் ஜைனக் கிரந்தங்களில் இருக்கின்றன. அவற்றுள் இது ஒன்று.

* * *

யமுனா நதிக்கரை சாதுக்களாலும் சிரமணர்களாலும் நிறைந்திருந்தது. ஜைன

சிரமணர் மஹாவீரர் அவந்தியிலிருந்து வத்ஸ ராஜ்யத்திற்கு வந்துகொண்டிருந்த போது அங்கே தங்கினார். யமுனைக் கரை தான் வத்ஸ ராஜ்யத்தின் தலைநகரான கௌசாம்பியின் எல்லை. யோக நிஷ்டையிலிருந்து எழுந்ததும் மஹாவீரருக்கு ஓர் அதிசயமான செய்தி காத்துக்கொண்டிருந்தது; அது மிகப் பயங்கரமும்கூட. கைகளில் இரும்பு விலங்குகளுடன் அடிமைக் கோலத்தோடு ஓர் அழகிய வாலிபன் நின்றுகொண்டிருந்தான். அவன் தலை மொட்டையடிக்கப்பட்டிருந்தது. மஹாவீரர் ஆதரவோடு அவனை நோக்கினார். அவரது பாதங்களில் விழுந்து வணங்கிவிட்டு அவ்வாலிபன் சொன்னான், "நான் இந்நாட்டு மன்னர் சதாநீகரின் அரண்மனைச் சேவகன். எங்கள் மகாராணியின் உத்தரவுப்படி அங்கநாட்டுக்குச் சென்று வந்ததற்காக இந்தத் தண்டனையை அரசர் அளித்துவிட்டார்."

"வத்ஸநாட்டிற்கும், அங்க நாட்டிற்கும் தான் பகையாயிற்றே. நீ எதற்காக அங்கே போனாய்?" மஹாவீரர் ஆர்வத்தோடு கேட்டார்.

"அங்கநாட்டரசர் ததிவாகனரது பட்டமஹிஷி தாரிணியம்மையார் எங்கள் நாட்டு ராணியின் சகோதரி. தாரிணியம்மையாரின் பிறந்ததின விழாவிற்காகச் சில பரிசுகள் கொடுத்து, என்னை ரகசியமாகக் கொண்டு போய்க் கொடுத்துவரும்படி எங்கள் ராணி சொன்னார்கள். அதன்படி சென்றுவந்தேன். இங்கு வந்ததும் இது எப்படியோ அரசருக்கு எட்டி ராஜத்துரோகம் செய்ததாக எண்ணி இப்படி தண்டிக்கச் செய்துவிட்டார்."

"அரசர்கள் தண்டிப்பது வழக்கந்தானே. இதற்காக நீயேன் தற்கொலை செய்து கொள்ள முற்படவேண்டும். வேறு வேலை செய்து பிழைக்கக்கூடாதா?"

கலங்கிய கண்களுடன் அந்த வாலிபன் சொன்னான், "சுவாமி, இந்தத் தண்டனை இந்நாட்டில் கொலைத் தண்டனையைவிடக் கொடியது. தலையை முண்டமாக்கி அடிமைக் கோலத்தோடு தண்டிக்கப்பட்டவனைச் சமூகத்தில் யாரும் சேர்க்கமாட்டார்கள், மனைவி, மக்கள் கூட அவனை ஏற்க அஞ்சுவார்கள். மானமிழந்து உரிமையிழந்து எப்படி வாழ முடியும், சுவாமி? தற்கொலை செய்து கொள்


# DON'T WORRY !!

Try "KUMARI" (Tablets) to remove your anxieties over difficult days and fear of periodical delays at any stage, under any circumstances and prevent future troubles! Speedy and harmless !! Thousands satisfied !!! Normal potency Rs. 3. Special Rs. 5. Extra Special Rs. 8. (V. P. Extra)



## Mrs. P. DEVEE, F. D. S. (C. M.)

TOLLYGUNGE, CALCUTTA - 33.

**கீழ்க் கண்டவர்களிடமும் கிடைக்கும் :—**

(1) நாதம் & கோ.
மட்டஞ்சேரி
கொச்சின்

(2) இண்டோ மெடிகல் சப்ளைஸ்
205, தங்கசாலைத்தெரு,
(மிண்ட் ஸ்டிரீட்)
மதராஸ்-1

(3) நியூ டவுன் ஏஜன்ஸீஸ்
804-B. "ஹரிநிவாஸ்"
வின்ஸெண்ட் ரோடு
தாதர் - பம்பாய் - 14

(4) L. M. முகர்ஜீ & ஸன்ஸ் லிமிடெட்
167, தாரம்தலா தெரு
கல்கத்தா

(5) ஆந்திரா எம்போரியம்
76-78, ரூப்ளெக்ஸ் தெரு
புதுச்சேரி

(6) பயனீர் பார்மஸி
183, மெயின் ரோடு
பேட்டா - கொழும்பு
(இலங்கை)

(7) ஓவர்ஸீஸ் ஜெனரல் ஏஜன்ஸி
72, அம்பாங் தெரு
கோலாலம்பூர் (மலேயா)

*Wanted Stockists in Unrepresented Areas on Favourable Terms*

**READ WHAT SATISFIED CUSTOMERS SAY !**

. P., Bombay-"More than four months' overdue was restored to its usual state after using only 2 phials of Special Tablets."

V. K. East Africa-"Tried many similar products. None ever worked but only one packet of your Extra-Spl. tabs. brought wonderful results."

. L. R., Ceylon—"Remember. I bought two phs. of your medicine which relieved my patients wonderfully. Send 6 phs. more per return"

Mrs. David Bangalore—'Your KUMARI is a miraculous preparation. You have saved my life. I must introduce this to my friends.'

*Almost daily, lot of unsolicited appreciations pouring in our files from differnt parts of the World.*

வதைத்தவிர வேறு எனக்கு வழி யென்ன இருக்கிறது?''

ஜீனேந்திரர் கருணை பொங்க அவனை நோக்கினர். அவன் மெய்சிலிர்த்து நின்ருன். மஹாவீரர் சொன்னர்: "குமாரா! உலகம் சுய நலமிகளின் மனம் போல அவ்வளவு குறுகியதல்ல. சமூகமும், மதமும் உலக வாழ்வின் உறுப்புகள். அவைகள் எவ



...த
...களை, இரு
...பரா என்ற
...ததான்.

*

...ஐயப்பன் சேனைகள் இரண்டு ...டைகளையும் ஏகோபித்துத் தாக் ...தலப்பரா கோட்டை இரண்டேநாளில் ...டுபொடியாயிற்று. ஆயினும் இஞ்சிப்பரா சளையாமல் நின்றது. அக்கோட்டையமைப் பின் சாதுரியம் இன்றும் புலனாகும். மலைச்சரி வில் சற்று உயரத்தில் நின்று அட்டகாசம் செய்தது. சுற்றிலும் அதாவது மூன்று பக்கத் திலும் பெரியதோர் அகழி.

நான்கு நாள் முற்றுகை ஒன்றும் பயனைத்தர வில்லை. இரு சேனைகளையும் ஒன்றுதிரட்டி ஒவ்வொருவனையும் பாரமான கல்லைத் தூக்கிக் கொண்டு வரும்படி ஐயப்பனின் ஆக்ஞை. சுமார் இருநூறு பெயர்கள் எதிரே நின்ற மலைக்குன்றை உடைத்துக் கல்லாய்ப் பிளந்து கொண்டிருந்தனர். ஒரு நாள் முழுவதும் அகழி யின் ஒரு பாகத்தைக் கல்லால்மூடச் செலவிட நேர்ந்தது. அகழிக்கு நீர் பாய்ச்சிவந்த அருகே ஓடின அழுத நதியையும் கல்லால் அணை கட்டித் தடுத்து வேறு இடத்தில் மடை திறந்து நீரை மறையவிட்டனர். கடைசியில் இரண்டாம் நாள் விடியுமுன் அகழியைத் தாண் டினர் ஐயப்பன் படையினர். மேலிருந்து கல்லுகளை உருட்டி விடாதபடி ஐயப்பனின் வில்லாளிகள் கோட்டை மதில் காவலாளிகளை அம்பெய்து வீழ்த்திக்கொண்டிருந்தனர்.

கொஞ்சம் கொஞ்சமாக முற்றுகை வலி வடைந்தது. சாயங்காலம், கோட்டை ஐயப் பன் படையினருக்குக் கைவசமாயிற்று. எஞ் சிய ராணுவம் காட்டினுள் புகுந்து காரிமாலா கோட்டைக்குப் பறந்தோடிற்று.

இரண்டு நாள் இளைப்பாறி, பின்னர் காரி மாலா கோட்டையைப் பிடிக்கப் புறப்பட்ட னர். ...து ஒரு விசேஷ மதிப்பு வாய்ந்த முற் றுகையாயிற்று. இன்றும் வருடமொருதரம் ஐயப்பன் திருவிழாவில் இப் பாட்டைப் பாடி அநேக பக்தர்கள் படைக்கோலம் பூண்டு கலந்து கொள்வதைப் பார்க்கலாம்.

...ஆளும் இலைப்பச்சை ...நது ஒரு பெரிய புதரையும் அடர்ந்த மரக் கிளையையும் தன்னை மறைத்துக் கொண்டு தாங்கிச் சென்று அடியடியாக, சூரியனில்லாத வேளையில் காரிமாலா அணுகி நின்றான். இர வும் பகலும் கோட்டை மதிளின்மேல் கண் கொட்டாது காத்துநின்ற பாராக்காரர்களுக்கு ஒன்றும் புலனாகவில்லை. எங்கும் அடர்ந்த காடு. சிலசில மரங்கள் சில வேளை அடியோடு பெயர்ந்து நகருவது போலிருந்ததை அவர்கள் கவனித்தவர்களில்லை.

முழு ராணுவமும் கோட்டை வாயிலடைந்த தும் உயர்ந்து திடமாய் நிற்கும் மதில் சுவரைத் தாக்க ஐயப்பன் யோசனை வந்தது. கோட்டை யின் தெற்கே ஒரு குன்று. அதில் உயர்ந்து பருத்து வளர்ந்த மரங்கள் அநேகம். அவை களை வெட்டிச் சாய்ப்பது என்று உத்தரவு. ஒரு நிமிஷம் நிசப்தம்; அடுத்த நிமிஷம் தடார் தடார் என்று பெரிய பெரிய மரங்கள், கீழே வடக்கில் நின்ற கோட்டை மதிளின் மேல் பீரங்கிபோல் அதிவேகமாய் விழுந்து சுவரைத் தவிடுபொடி யாக்கின! உடையான் சேனை காலாள் படையேயன்றி வில்லுப்படை யல்ல என்று ஐயப்பன் உணர்ந்ததால்தான் மரங்களைத் தடாரென்று வெட்டிச் சாய்... தைத் தடுக்க முடியவில்லை.

மதிள் சுவர் மண்ணாகிப் போகவே ... வழியே விரைந்து பாய்ந்தனர் ஐயப்பன் ... கள். அன்று நாள் முழுவதும் கடும்... உடையான் கடுத்தாவின் வாளுக்கு இ... னான்! அவன் சேனை பொடிப்பொடியாகி ம... தோடிற்று. ஜய பேரிகையுடன், வீரச்... குடன், வாவரும், கடுத்தாவும் "ஐயப்பனு... ஜே!" பொழிந்த வண்ணம் நடு மண்டபத்தி... வந்து நின்றார்கள்.

ஆனால் ஐயப்பன் எங்கே? என்ன அழை... தும் அழகிய இளஞ்சிங்கன் ஐயப்பனைக் காணோம்! ஆனால் ஒரு ஜோதியைக் கண்டார் கள். அதை நோக்கி அவ்வளவு பேரும் வந்து சேர, அது சபரிமலையில் கொண்டுவந்து விட் டது. முன்பு கொள்ளைக்காரனால் சூறை யாடப்பட்ட இடிந்துவிழுந்த கோயிலைச் செப்ப னிட்டார்கள். அத் தூய ஜோதி அங்கேயே தங்கிவிட ஐயப்பனைத் தெய்வச் சிலையாக்கி அதைத் தெய்வமாய்த் தொழுது நின்றனர். இன்றும் வாவர் மடம் இத்திருவிழாவில் கலந்துகொள்கிறது! ●


## சிங்கப்பூரில் "காவேரி" பிரதிகள் கிடைக்குமிடம்

**T. S. மணியம் பிரதர்ஸ்,**

இந்தியன் நியூஸ் ஏஜென்ஸி,

போஸ்டு பாக்ஸ் நெ. 1326 ; ; சிங்கப்பூர்—2

ஆம்! அவனும் இப்...
சேனாதிபதி வீரன் இளையக் கொம்பன என்...
வனை உடனே வந்துசேர ஆள்விடுத்தான். அவன் வந்தவுடன் சபை கூட்டி, திருவிழாவில் கலந்து அதைத் தடுக்க ஏற்பாடுகள் நடந்தன.

ஆனால், இணையக்கொம்பன் தம்பி குமரன் என்பான் வாவர்சாமி மடத்துப் போஷகன். உடனே மடத்திற்குச் செய்தி அனுப்பப்பட்டது. வாவர் சாமியார் போரிடத் தயாராயில்லை. எனினும் இத்துஷ்ட உடையானின் கொட்டத்தை அடக்கினால்தான் நாட்டிற்கு அமைதி யேற்படுமென்று தீர்மானித்தார். தகுந்த ஏற்பாடுகள் நடக்க வாரம்பித்தன.

நடுவே ஒருநாள் நள்ளிரவு, வாவர் தூங்கிக் கொண்டிருக்கும்போது உடையான் ஆட்கள் சந்நியாசி வேடம் தரித்து, காலையிலேயே பூஜைகளில் கலந்துகொண்டு இரவில் எழுந்து அப்படியே சாமியாரைத் தூக்கிப்போயினர்.

ஆனால் என்ன நேர்ந்தது? இருவர் காலில் விஷந்திண்டியது. சீறிக்கொண்டே இருவரையும் சுற்றிச் சுற்றி ஒரு பாம்பு கடித்தது. அவர்களும் கதறிக்கொண்டு மாண்டனர். மற்றிருவரும் பாம்பிற்கஞ்சி, கட்டிலைவிட்டு ...றைந்தோடினர். வாவர் கண் விழித்தார். ...ன இது? நடுக் காட்டில் இருக்கிறோம் ...ு எழுந்து பார்க்கையில் இருவர் மாண்

சா...
உடையா...
கையில் தீ...
கொண்டு தேடிக...
ரைக் கண்டு பேரான...
போயினர். வாவர் மனதில...
கருணையன்றி வேறில்லை. நா...
எதிரிகள் மாளவா? அவன் கருணை...
என்று ஐயப்பனிடம் பூரண விசு...
கொண்டார். மடம் அடைந்ததும், ஐயப்ப... நின்றுகொண்டிருப்பதைக் காணவே எல்லாச் சந்தேகமும் மறைந்தது. 'இனி உன் பாதமே கதி' என்று ஐயப்பனைச் சரணமடைந்தார் வாவர் சாமி.

மறு நாள், உடையானைத் தாக்கத் தக்க ஏற்பாடுகள் நடந்தன. பாண்டிய நாட்டிலிருந்தும், கேரள நாட்டிலிருந்தும் ஆட்கள் திரள் திரளாய்க் கூடினர். அவர்களைப் படைபடையாக அணிவகுத்து இருபெரும் சேனையாக்கி ஒரு சேனையை வாவரிடம் ஒப்படைத்து, மற்றொன்றை கடுத்தா என்ற சேனாதிபதியிடம் ஒப்படைத்து, படையெடுப்பு முஸ்திப்பைச் சவிஸ்தாரமாக எச்சரித்தார் ஐயப்பன்.


...ணத்தில் உயர்ந்தவை! தரத்தில் சிறந்தவை!!

ஆனந்தா பன்னீர் தொழிற்சாலையில்
தயாரிக்கப்படும்

- உயரிய ஆனந்தா பன்னீர் நெ. 240
- " " அரைக்கீரைவிதைத் தைலம்
- " " சந்தனாதித் தைலம்
- " " வாசனைச் சுண்ணும்பு
- " " ஓமம் வாட்டர்
- " " சோம்பு அரக்கு
- " " டிஸ்டில்டு வாட்டர்
- " " ஜெயின் பல்பொடி
- " " பாபுலர் பல்பொடி (பாக்கெட்)

இவைகளையே

எப்பொழுதும் வாங்கி உபயோகியுங்கள். எல்லா இடங்களில் கிடைக்கும்.
விபரங்களுக்கு எழுதுக:-

ஆனந்தா பன்னீர் தொழிற்சாலை
இராயப்பேட்டை, - மதராஸ்-14.

"நான் அங்க நாட்டரசன் ததிவாகனரின் மகள் வசுமதி. தலை நகர் சம்பாபுரியில் நடந்த யுத்தத்தில் இந்த நாட்டு வீரனால் கைது செய்யப் பட்டு, இங்கே தனவகரிடம் விற்கப் பட்ட அடிமை." என்று கூறி முடித்ததும் மகா வீரர் பிக்ஷாபாத்திரத்தை அவள் பக்கம் நீட்டினார். சந்தனா பிக்ஷையை யிட்டு விட்டு அவர் காலடியில் சென்னி சாய்த்து "என்னைத் தங்கள் சிஷ்யையாக ஏற்க வேண்டும். ஆசாபாசங்களைக் களைந்தெறிந்து சிரமணியாக விரும்புகிறேன்." என்று வேண்டிக் கொண்டாள்.

சாந்தமாகப் புன்சிரிப்புடன் அவளைத் தூக்கி நிறுத்தினார். "சந்தனபாலா! நீதான் என் முதல் சிஷ்யை. உனக்கு நானே தீக்ஷையளிக்கிறேன். நீ இனி 'ஜினை' (ஞானி) யாகி விடுவாய்" என்று மயிர்க்கூச்சலெடுத்த அவளுடலைத் தடவிக் கொடுத்துக்கொண்டே ஜினேந்திரர் அபயமளித்தார்.

5

மகா வீரருக்குப் பிஷை கிடைத்த செய்தி நகர மெல்லாம் பரவியது. நகர மக்கள் மகிழ்ச்சி பொங்கக் கும்பல் கும்பலாகக் அங்கு வந்து குழுமினார்கள். அரண்மனைக்கும் செய்தி எட்டவே அரசன் சதாநீகனும் ராணி மிருகாவதியும் விரைந்து வந்தார்கள். தனவகர் கொல்லனைக் கூட்டிக் கொண்டு ஓடோடியும வந்தார். சந்தனா மகாவீரருக்குப் பிக்ஷையளித்ததை யறிந்ததும் அவருக்கு வியப்பும், மகிழ்ச்சியும் பொங்கின.

சந்தனா அங்கநாட்டரசரின் புதல்வி வசுமதி யென்பதையறிந்ததும் எல்லோரும் அவளை வாழ்த்தினார்கள். அரசி மிருகாவதி தன் சகோதரியின் பெண்ணை அக்கோலத்தில் கண்டு மனமிடிந்து போனாள். வசுமதியைக் கட்டிக் கொண்டு கதறி விட்டாள். சதாநீகன் தன் வெறி பிடித்த செயலால்தான் அங்க நாட்டு அரச குடும்பமே அழிந்ததென்பதை யறிந்து வெட்கி வருந்தினான். மகாவீரரிடமும் வசுமதியிடமும் மன்னிப்புக் கோரினான்.

மகாவீரரின் விருப்பப்படி குற்றவாளிகளை அடிமைக்கோலத்தோடு சமூகப் பிரஷ்டம் செய்யும் கொடிய வழக்கத்தை அறவே ஒழித்தான். மகாவீரரின் கருணையைக் கண்டு பல மக்கள் ஜைன மதத்தில் சேர்ந்தனர். தனவகரும் ஜைன சிரமணராகித் தம் சொத்துக்களையெல்லாம் ஏழைகளுக்களித்து விட்டார்.

சந்தனாவைப் பார்த்துப் பல பெண்கள் ஜைன சங்கத்தில் சேர்ந்தார்கள். வத்ஸ நாட்டரசி மிருகாவதியும் ஜைன மதத்தில் சேர்ந்தாள். அவர்களுக்கெல்லாம் தீக்ஷையளித்து, பலகாலம் ஜைன சந்யாசினிகளின் சங்கத்திற்குத் தலைமை தாங்கிப் புகழோடு சேவை செய்யும் பாக்யம் மகாவீரரின் முதல் சிஷ்யையான சந்தனபாலாவிற்குத்தான் கிடைத்தது!

('ஆவச்யக சூர்ணி' என்ற ஜைனக் கிரந்தத்தை ஆதாரமாகக்கொண்டது.)


## காவேரி சந்தா விகிதம்.

| | இலங்கை, பர்மா & உள் நாடு | | | மலேயா முதலிய வெளிநாடுகளுக்கு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
| ஒரு வருஷம் | 6 | 0 | 0 | 7 | 8 | 0 |
| அரை வருஷம் | 3 | 0 | 0 | 3 | 12 | 0 |
| தனிப் பிரதி ஒன்றுக்கு | 0 | 8 | 0 | 0 | 10 | 0 |

ஏஜன்ஸி இல்லாத இடங்களில் டிபாசிட் கட்டி காணயமும் பொறுப்புமுள்ள ஏஜண்டுகள் தேவை.

ஸர்குலேஷன் மானேஜர் "காவேரி"




## அத்: 23. வட்ட மேஜை

மாலை வெய்யிலில் அரசலாற்று நீர் மினுமினுப்புடன் ஓடிக்கொண்டிருந்தது. பேச்சிலே லயித்தபடி பித்தளைக்குடங்களைப் பொன்னுக்கிக் கொண்டிருந்த அப் பெண்களுக்கு நேரம் போவதே நினைவில்லை! என்ன பேச்சு! அப்பப்பா! சட்டசபை கெட்டது! அப் பேச்சினிடையே எழுந்த நகையொலி ஆற்றிலே எதிரொலிக்க, முத்துப் பற்கள் செவ்வானத்தைப் பழித்துப் பளபளக்க, அவர்கள் வட்ட மேஜையில் அன்று லீலா கிடந்து திண்டாடினுள்!

கடயத்துக் கனகம் அதை அரங்கேற்றிவைத்தாள்.

திருமயிலாடி வட்டாரத்திலே கனகம் ஒரு கௌரவமான அங்கம் வகிப்பவள். அவள் பிறந்த ஊர் திருமயிலாடிதான். வாழ்க்கைப்பட்ட ஊர் கடயம். முப்பதாவது வயதிலேயே கணவனைக் காலனுக்குக் கொடுத்துவிட்டு அண்ணுவின் வீட்டோடு வந்துவிட்டாள், அவள். அண்ணுவின் வீட்டிலே சும்மா சாப்பிடுவது நல்லதல்ல என்று பல உப தொழில்களை மேற்கொண்டாள். அவைகளுள் அப்பளம், வடாம் இவைகள் செய்து விற்பது ஒன்று. இதனுல் ஊரில் உள்ளவர்கள் பலரிடம் இவளுக்குப் பழக்கம் உண்டு. அந்தந்தக் குடும்பங்களில் நடக்கும் தினசரி நிகழ்ச்சிகளும் தெரியும். அவரவர்கள் குணங்களைத் தெரிந்து வைத்துக்கொண்டு மனதைக் கிளறி அந்தரங்கத்தை அறிவது இவளுக்கு ஒரு ஆனந்தம். அப்படி அறிந்த செய்திகளைப் பரிவர்த்தனை செய்வதின் மூலம் இவள் பெயர் திருமயிலாடியில் பிரபல்யம். மத்யான வேளைகளில் பொழுது போகாத பெண்கள் மினக்கெட்டு, குழந்தைகளை அனுப்பி இவளை வீட்டிற்கு அழைத்துவரச் சொல்வார்கள். அப்பள உருண்டைகளையும் குழவி, பலகை ஆகிய சாமக்கிரியைகளையும் எடுத்துவந்து பேச்சோடு பேச்சாக இருநூறு முந்நூறு அப்பளங்களும் போட்டுக்கொண்டு திரும்புவாள், கனகம்!—அத்தகைய கனகம் பேசுகிருள்:

"மலையிலே விளைந்தாலும் உரலிலே வந்துதானே இடிபடவேணுண்டியம்மா! பாருங்கள்! கனகம் சொன்னது பலிக்காவிட்டால் என் பெயரை மாற்றியழையுங்கள். தேவாரத்தாருக்கு மனசிலே ஒண்ணு வந்துட்டா அதை எப்படியாவது செய்துதான் தீர்வார்!"

"போடி, கனகம்! மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்குமா முடிச்சு போடாதே! தேவாரத்தார் எங்கே! லீலா எங்கே! படிச்ச பெண்! அழகிலே கிளின்னு கிளிதான்! அவளுக்கு......" என்ருள், சச்சு.

"இருக்கட்டுமே! அழகு சோறுபோடுமா என்ன? குடும்பத்தை நிர்க்கதியா விட்டுட்டுப்போயிட்டாரு, ஜட்ஜ் சிவஞானம். கணபதி தனக்கு மேலிருந்த ஆபீசரை அடிச்சுவிட்டு ஜெயிலுக்குப் போய்விட்டான். கடன்காரர்களெல்லாரும் சுத்தி

வளைச்சிக்கிட்டு இருக்காங்க. இந்த நிலையில் தேவாரத்தாரைவிட அவர்களுக்குப் புகலிடமில்லை. வகையாகத் தன் வாய்க்குள் வந்து சிக்கிக் கொண்ட கிளியைத் தின்று கொழுக்காமல் விட்டு விட்டு அண்ணாந்து பார்த்துக் கொட்டாவி விடுமோ, பூனை! நீ வேண்டுமானால், பார்! இன்னும் ஒரு மாதத்திற்குள் தேவாரத்தார் வீட்டிலே, 'டும், டும்' மென்று மேளம் முழங்கப் போகிறது!" என்று அழுத்தம்திருத்தமாகச் சொன்னாள், கனகம்.

"என்னடி! கனகம்! இவ்வளவு அழுத்தமாகச் சொல்கிறாயே, உனக்கு எட்டிய சேதிதான் என்ன? விண்டு சொல்லேன்!" என்று விண்ணப்பஞ் செய்தாள், சாவித்திரி. 'அதிகார பூர்வமாக ஊர்ஜிதம் செய்யப் படாத' எந்தச் செய்தியையும் இவள் நம்புவதில்லை!

"ஏண்டி, சாவித்திரி! நீதான் உன் மாமியின் மீது ஒரு சேதி சொல்கிறாய் என்று வைத்துக் கொள்! அதை ஆற்றங்கரையிலே கொட்டி வாரி விடலாமா? நீதான் என்ன நினைப்பாய்? நாளைக்கு என்னை மதித்து ஓர் வார்த்தை சொல்வாயா? நான் ஒருவர் சொல்வதை மற்றவரிடம் சொல்ல மாட்டேனம்மா? எனக்கும் நம்பிக்கை பிறந்து யாரிடம் சொன்னால் மனதிலே போட்டுவைப்பார்களோ அவர்களிடம்தான் சொல்வேன். இது என் மனதுக்குப் பட்டது சொன்னேன்............ அதுவும் ,........அதோ! .........அதோ; ........... பார்வதியே வருகிறாள். நான் அவள் வாயைக் கிளறிவிடுகிறேன். நான் சொல்வது எவ்வளவு தூரம் பலிக்குமென்று நீங்களே நேரில் தெரிந்து கொள்ளுங்கள்! ........." என்று சொல்லிய வண்ணம் தேய்த்த குடத்தை எடுத்துக்கொண்டு நீரெடுக்கச் சென்றாள், கனகம்.

அவள் நீரெடுத்துக் கொண்டு கரைக்கு வரவும் பார்வதி அங்கு வரவும் சரியாய் இருந்தது. "வாம்மா! பார்வதி! ஏன் இவ்வளவு நேரம்? வீட்டிலே வெட்டிச் சாப்பாட்டுக்காரர்கள் இரண்டு பேர் இருந்தும் உனக்கு வேலை ஒழியவில்லையா? பாவம்!......" என்று பரிவு காட்டினாள், கனகம்!

உண்மையிலேயே பார்வதிக்கு அன்று மத்தியானம் வீட்டு வேலை அதிகமாக இருந்தது. பங்கஜம்மாளோ லீலாவோ அவள் உதவிக்கு வரவே இல்லை. அவர்கள் இருவர் மனதிலுந்தான் பெரும் வேதனை குடி கொண்டிருந்ததே! பார்வதி பம்பரம்போல் சுழன்று சுழன்று வேலை செய்ய, அவர்கள் இருவரும் சும்மா இருப்பதைக் காண அவள் உள்ளம் கொதித்துக் கொண்டுதான் இருந்தது, குடை கல்லுக்கு வாயிருந்தால் அது பட்ட பாட்டில் பார்வதியின் மனதைப் பறை சாற்றியிருக்கும்! ஆகவே கனகத்தின் கேள்வி அவள் உள்ளத்தைக் கிளறிவிட்டது: "சுகப்பட வந்தவர்கள் சுகமனுபவிக்கிறார்கள்! உழைக்க வந்தவளுக்கு ஓய்வேது? உறக்கமேது? என் தலையெழுத்து அப்படி!" என்று அலுத்துக் கொண்டாள்.

"பார்த்தாயா, சாவித்திரி! பாவம் பார்வதியாக இருப்பதால் இதையெல்லாம் பொறுத்துக் கொள்கிறாள். வேறு யாராகவாவது இருந்தால் என்ன நடக்கும் தெரியுமா? அப்படி இருக்கும் போது தான் ஓண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியைத் துரத்தும் கதையாக........." என்று பின்புறம் திரும்பி, சச்சுவைப் பார்த்துக் கண் சிமிட்டினாள், கனகம்.

"ஏன் பார்வதி! ஊரில் பேசிக் கொள்கிறார்களே, நிஜந்தானா? உன் வீட்டுக்காரர் இரண்டாந்தாரமாகக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாராமே! ஜாதகப் பொருத்தம் கூடப் பார்த்து விட்டாராமே!......" என்றாள் சச்சு.

"ஓகோ அவ்வளவு தூரத்திற்கு ஆய்விட்டதா? கிழவனுக்குக் கிண்ணாரம் கொட்டுமாம்! அப்படிச் சொல்லு! என்னடா, வெள்ளையும் சள்ளையுமாக, சீப்பும் தலையுமாக, கண்ணாடியும் கையுமாக இருக்கிறாரே என்று பார்த்தேன்! அப்படிச் சொல்லு சேதியை! இருக்குண்டியம்மா இருக்கும்! பங்கஜம்மாளா லேசா! கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையாதா என்ன?" என்று சொல்லிக் கொண்டு குடத்தை நக்கென்று கீழே போட்டுவிட்டு மணலிலே உட்கார்ந்தாள், பார்வதி.

"என்னடி, பார்வதி! 'இருக்கு' மென்கிறாயே! கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்கிறவர் உன்னிடம் ஒரு வார்த்தை சொல்லவில்லையா என்ன?" — இது சாவித்திரி.

"ஏன் சொல்வார்? கிளியாட்டமா குமரி வரும் போது என்னைச் சட்டை செய்வாரா என்ன? ஆகட்டும் சொல்கிறேன்!" என்று பொருமினாள், பார்வதி.

"நீ என்னடி செய்ய முடியும்? அவருக்குத்தான் ஒரு பெரிய காரணம் கிடைத்திருக்கிறதே! பிள்ளை இல்லை; அதனால் மறு கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேனென்று சொல்வார்!" என்று தூண்டிவிட்டாள், கனகம்.

தன் பலஹீன நாடியைச் சுண்டிவிட்டதும் பார்வதிக்கு அசாத்தியக் கோபம் வந்துவிட்டது!

"சொல்வார்! ஏன் சொல்லாமல்? பிள்ளையில்லாததற்கு நானோ பிணை. பௌருஷம் கெட்ட மனிதனுக்கு மந்திரத்தால் பிள்ளை பிறந்தால்தான் உண்டு! ரூபாயோடு ரூபாய் சேர்க்கிறாரே தவிர, 'சேதுவுக்கு ஒரு தரம் போய் நாகதோஷம் கழித்துவிட்டு வருவோம்' என்றேனே கேட்டாரா இவர்? இவருக்குப் பிள்ளையாவது பிறக்கவாவது?" என்று தன் மனதை வெட்ட வெளிச்சமாக்கிவிட்டாள் பார்வதி!

"அதுவும் அப்படியா?" என்று ஆச்சர்யத்துடன் கேட்டாள், சாவித்திரி. அவளுக்கும் மணமாகி ஐந்து வருஷங்களாகக் குழந்தையில்லை!

"இல்லாமலென்ன? இந்த அழகுக்கு இரண்டாவது கல்யாணம் வேறுகேடா?" என்று சொல்லிக்கொண்டு எழுந்தாள், பார்வதி.

"ஆண்பிள்ளைகள் நினைத்தால் என்னதான் நடக்காது? நாம்தான் பலமில்லாதவர்கள். ஆற்றங்கரையிலே நீட்டி முழக்குவதோடு சரி! வீட்டுக்குப் போனால் அவர்கள் தாளத்திற்கு ஏற்றது போல் ஆடத்தான் தெரியும்!" என்றாள், ஹேமா. இவள் பட்டண வாசத்திலிருந்து கிராமத்துக்கு வந்து வாழ்க்கைப் பட்டவள். முரட்டுச் சுபாவமுள்ள கணவனிடம் சுதந்திரம் பெற முயன்று தோற்றவள்!

"அதெல்லாம் இந்தப் பார்வதியிடம் செல்லாது. பார்க்கிறேன் ஒரு கை! இத்தனை வருஷமா இவரோடு வாழ்ந்து குப்பை கொட்டினவ நான்; குறுக்கே வந்து சொத்தைக் கொள்ளையிடுபவள் ஒருத்தியா?"

"ஆமாண்டியம்மா பார்வதி! உன்னுடைய சக்தியை இதில் காட்டு, பார்க்கலாம். சிவன் சக்திக்குத்தான் அடக்கம் என்கிறார்கள். சங்கரன் பார்வதிக்கு அடக்கமா என்பதைப் பார்ப்போம்! நேரமாகிறது, பார்வதி! குடத்தைக்கழுவி நீரெடுத்துக்கொண்டு வா, போவோம்!" என்று பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தாள், கனகம்.

பார்வதி நீரெடுக்கச் சென்றாள். எல்லோரும் குடத்தை இடுப்பில் எடுத்துக்கொண்டு அவள் வரவுக்காகக் காத்து நின்றனர்.

* * *

லீலா திருமயிலாடிக்கு வந்த நாட்களாகவே சங்கரனின் நடை யுடை பாவனைகளில் விசேஷ மாறுதல்கள் உண்டாயிருந்தன. தலை கூடச் சீவாமல் அசிரத்தையுடன் இருக்கும் சுபாவம் போய் நாசூக்காக வாரிவிட்டுக் கொள்ளும் பழக்கம் உண்டாய்விட்டது. நேரத்திற்கொருதரம் கூடத்தில் இருந்த பீரோ நிலைக்கண்ணாடியின் முன் நின்று தன்னை அழகு பார்த்துக் கொண்டான். ஆடு அசை போடுவதுபோல் நாள் முழுவதும் வெற்றிலை மென்ற வாயாக உள்ளவன் அதைக்கூடக் குறைத்துக் கொண்டான். அவன் மனதில் அரும்பிய சபலம் இத்தகைய மாறுதலை உண்டாக்கி வைத்தது.

பச்சைப் பசேலென வளர்ந்திருக்கும் முல்லைச் செடியில் நெளிந்து வளைந்த கொப்பிலே செழித்து மினுத்துக் கூம்பியாயிருக்கும் போதைப்போல் இளமை எழில் நிரம்பிய லீலாவின் முகம், வயது முதிர்ந்து உலகியலறிவு ஓரளவு அமைந்த சங்கரனைக்கூடச் சபலிக்கச் செய்துவிட்டது! அவன் மனதில் ஊசலாடிய சபலத்திற்கு அணைந்து பரவ உதவும் கொழு கொம்பென, "பிள்ளையில்லாக்குறை" உதவிற்று!

பார்வதியின் வாய்க்குச் சங்கரனுக்கு உள்ளூரப் பயந்தான். இருந்தாலும் அவள் வாயை அடக்கக் கூடிய ராமபாணம் ஒன்று எப்போதும் தயாராய் இருந்தது. "போ, வெளியே! மலட்டு நாயே?" என்று பலவிதங்களில் பிரயோகித்துப் பலன் கண்ட சொல் அது. பார்வதிக்குத் தாய் வீடு இல்லை. இளமையிலேயே தாயையும் தந்தையையும் இழந்துவிட்ட துர்ப்பாக்கியசாலி அவள். எடுத்து வளர்த்த அத்தையும் சமீபத்தில் காலமாகிவிட்டாள். உடன்பிறந்தார் எவருமில்லை; அவள் ஏகாங்கி. ஆகவே அவளுக்குச் சங்கரனே கதி; திருமயிலாடியே எல்லாம். இந்த நிலையில் அவளை, 'வெளியே போ!' என்றால் எங்கே போவாள்? 'மலடி' என இதயத்தை உறுத்தும் அந்தச் சூத்திரத்தைப் பிடித்துச் சங்கரன் சுண்டியிழுக்கும்போது, மூக்கணாங் கயிற்றுக்குக் கட்டுப்பட்டு நிற்கும் மாட்டைப்போல் மௌனமாய் விடுவாள். உள்ளத்திலெழும் வேதனை தணியாமல் கண்ணீராய்ப் பெருகி வெளிவரும்.

ஆகவே, இந்த அபலையைப் பற்றியும் சங்கரன் கவலைப்படவில்லை.

நாற்பத்தெட்டு வயது நிரம்பி மரணப் பாதையிலே அடி எடுத்துவைத்து நடக்க ஆரம்பித்த பிறகு வாழ்வின் முதற்படியிலே காலெடுத்து வைக்கும் ஒரு இளம் பெண்ணின் வாழ்வைக் குலைக்கலாமா? அழகின் வசந்தம் வீச மலரின் நளினமுடைய அவள் உள்ளம் தன்னை வரவேற்குமா? கற்பனையுலகில் சிறகடித்துச் சஞ்சரிக்கும் இளமை சாரமற்ற வாழ்வில் நிலைத்து நிற்குமா? என்றெல்லாம் சங்கரன் எண்ணிப் பார்க்கவில்லை.

வர்ணம் தீட்டிய மர மாம்பழத்தைக் கடித்துச் சுவைக்க எண்ணும் குழந்தையைப்போல், சிறுபிள்ளைச் செயலுக்கொப்பான காரியத்தில் தன் மனதைச் சபலிக்க விட்டுவிட்டான், சங்கரன்.

## அத் : 24. தீர்மானம்

பார்வதி ஆற்றுக்குச் சென்றிருந்த சமயத்தில் சுகாஸனத்தில் சாய்ந்துகொண்டு, "மீண்டும் யவ்வனம்!" என்ற புத்தகத்தில் மூழ்கியிருந்தான், சங்கரன்.

"அண்ணா! இந்தக் கடிதத்தைப் பார்! ஜெயிலிலிருந்தபடி கணபதி போட்டிருக்கான்!" என்று சொல்லிக்கொண்டே அங்குவந்த பங்கஜம்மாள் கடிதத்தை அவனிடம் கொடுத்தாள்.

வெட்கத்தால் முகம் வெளிறிட்டு மாற, புத்தகத்தை மறைத்துக்கொண்டு கடிதத்தைக் கையில் வாங்கிப் படிக்க ஆரம்பித்தான். படித்துமுடித்துப் பல கோணலாக மடித்து ஓரத்தை நகத்தால் வருடிக்கொண்டே, "இந்தப் புத்தி முன்னமேயே கழுதை மேய்க்கப் போயிற்றே! பெண்களுக்குத்

தான் பின்புத்தி என்பார்கள்! இந்தக் காலத்தில் படித்த பையன்களுக்குத்தான் பின்புத்தி இருப்பதைப் பார்க்கிறேன்! — ஆச்சு! கிட்டத்தட்ட ஒரு மாசத்துக்கு ஆச்சு! இன்னும் இரண்டு மாசங்கள்தானே! எப்படியாவது கழித்துவிட்டு வந்துவிடுவான். கடுதாசியில் எழுதியிருப்பதைப் பார்த்து நீ மனங்கலங்கவேண்டாம்! உன் காரியத்தைப் பார்!" என்றான், சாவதானமாக.

ஆ! எத்தகைய இரும்பு நெஞ்சம்! பிள்ளைகளைப் பெற்றிருந்தாலல்லவா அவள் மனம் இளகும்! என்று எண்ணினாள், பங்கஜம்மாள். தொடர்ந்து "இல்லை அண்ணா! அவனை விடுவித்துத்தான் ஆகவேண்டும். என் பணத்தைக்கொடு. இதற்கெல்லாம் இல்லாத பணம் வேறு எதற்கு இருக்கிறது?" என்றாள், நிதானமாக.

சங்கரனுக்குக் கோபம் வந்துவிட்டது. 'பணத்தைக்கொடு!' 'பணத்தைக்கொடு!' — இதே பாட்டா? எது பணம்? உன்னிடம் நான் பணம் வாங்கவில்லையே! கொடுத்ததற்குச் சீட்டு நாட்டு ஏதாவது வைத்திருக்கிறாயா?" என்று எரிந்து விழுந்தான்.

பங்கஜம்மாள் பொறுமையை இழக்கவில்லை. அண்ணா! வேண்டாம்! பெண்பாவம் பொல்லாதது. நான் மனம் நொந்து ஒரு கை மண்ணைவாரி விட்டேனானால் உன் குலமே பூண்டற்றுப் போய் விடும்! அனுபவிக்கக்கூடப் பிள்ளை இல்லாது ஏன் பூதங் காப்பதைப்போல் காக்கிறாய்? சீட்டுநாட்டு இல்லாததனால் நீ இப்போது என்னை ஏமாற்றி விடலாம். ஆனால் நான் கொடுத்ததையும் நீ கையை நீட்டி வாங்கியதையும் எங்கும் உள்ள ஒருவன் பார்த்துக்கொண்டுதான் இருந்தான். அவன் முன் நீ தலைகுனிந்து நிற்கத்தான் வேண்டும்! போகிறது; பூராப் பணத்தையும் மெதுவாகக்கொடு! இப்போது கணபதியை விடுவிக்க மட்டும் ஐயாயிரம் ரூபாய் கொடு! குருடனுக்குக் கண்கொடுத்த புண்ணியம் உனக்கு உண்டாகும்"

"பன்னிப் பன்னிப் பேசாதே. பங்கஜம் பொம்மனாட்டியாகிய உனக்குப் பிடிவாதம் இருக்கும் போது எனக்கு இல்லாமல் இருக்காது. லீலாவைக் கல்யாணம் செய்துகொடுக்க ஒப்புக்கொள்! ஐந்தல்ல, பத்தாயிரம் தருகிறேன்! என் சொத்துப் பூராவையுமே அவளுக்கு எழுதி வைத்துவிடுகிறேன்!"

"இல்லாவிட்டால் கொடுக்கமாட்டாய்?"

"ஒரு செல்லாக் காசும் கொடுக்கமாட்டேன்!"

"இது நியாயந்தானே?"

"நியாய அநியாயத்தைப் பற்றி எனக்கு அக்கரை இல்லை!"

அம்மாவும் மாமாவும் பேசிக்கொண்டிருந்ததைத் தூரத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்த லீலா அங்கு வந்தாள்.

"என்ன மாமா? உங்களுக்கு என்ன வேண்டும் சொல்லுங்கள்? என்று கேட்டாள்,

மாமாவின் முன் வராமல் ஒதுங்கியிருந்த அவள் நேரில் வந்து பேசவும் சங்கரனின் உடல் புல்லரித்தது.

"ஒன்றும் வேண்டாம்; நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்!" என்றான், அசடு வழிய.

"பூ! இவ்வளவு தானே! தாலியை நீங்கள் என் கழுத்தில் கட்டுகிறீர்களா? நான் உங்கள் கழுத்தில் கட்டட்டுமா?" என்றாள், லீலா சிரித்துக் கொண்டே.

'விளையாட்டல்ல, லீலா. நிஜமாச் சொல்கிறேன்!" என்றான், சங்கரன்.

"ரொம்ப சரி! நான் சிறு குழந்தையாய் இருந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதல்லவா?"





"ஏன் இல்லாமல்? மம்மா! மம்மா! என்று கூப்பிட்டுக் கொண்டு நீ என் கால்களைக் கட்டிக் கொள்வாய்! நான் உன்னைத் தூக்கிக் கொள்வேன்! உன் பொக்கை வாயால்............"

"எப்போதுமே உங்களுக்கு என்மேல் ரொம்ப ஆசை! அப்போதே என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று உங்களுக்கு ஆசை தானே!"

"சேச்சே! நீ அப்போது சிறு குழந்தையாயிருந்தாய்!"

"நீங்கள், அறியாச்சிறு குழந்தையாக இருந்தவளை, நீங்கள் தூக்கி வளர்த்த குழந்தையை, இப்போது மணந்துகொள்ள ஆசைப்படலாமா?"

"இப்போது நீ பெரியவளாய்விட்டாய்!"

"ஆனால் என்ன? உங்களுக்கு முன்பே குழந்தை பிறந்திருந்தால் என் வயதிற்கு ஒரு பெண் இருக்க மாட்டாளா? உங்கள் சகோதரி மகளானாலென்ன உங்கள் மகளானாலென்ன? உங்கள் இருவருக்கும் நான் குழந்தைதானே! சொல்லுங்கள்! உங்கள் மனதிலே எழும் ஆசை நிலையானதா என்று எண்ணிப்பாருங்கள்! உருண்டு திரண்டுள்ள என் அங்கங்களைக் கண்டு உங்கள் புத்தி பேதலித்துப் போயிருக்கலாம்! நிதானப்படுத்திக் கொள்ளுங்கள்! இவ்வழகைக்கண்டு மயங்கிவிட நீங்கள் வாலிபரல்ல. பஞ்சை மனதைக் கிழான சபலங்களினின்றும் விடுவித்துக்கொள்ளுங்கள்!" இப்படி லீலா ஆவேசம் வந்தவளைப்போல் பேசினாள்.

"இது சபலமல்ல. வயது முதிர்ந்து அனுபவம் அடைந்து உண்டாகும் காதல்தான் உண்மைக் காதல். மேல்நாடுகளில்கூட நாற்பது வயதுக்குப் பின் மணம் செய்துகொள்பவர்கள் விவாக ரத்தே செய்துகொள்வதில்லையாம்! உன் குழந்தைப் பருவ நினைவெல்லாம் கனவைப்போல் மறைந்து விட்டன. இப்போது என் கண்முன் நிற்கும் நீ........."

"நன்றாக இருக்கிறது உங்கள் காதல் கதை! எது எப்படி இருந்தபோதிலும் பார்வதி அத்தை ஒருத்தி குறுக்கே இருப்பதை மறந்தேவிட்டீர்களே!"

"அவள் கிடக்கிறாள் மலட்டுமுண்டை!"

"எனக்கு மட்டும் குழந்தை பிறக்குமென்று என்ன நிச்சயம்?"

"நிச்சயமாகப் பிறக்கும். ஜாதகத்தில் பிறக்குமென்று இருக்கிறது!"

"ஓ! ஜாதகப் பொருத்தம்கூடப் பார்த்து விட்டீர்களா என்ன?"

"ஓ! எல்லாம் தயாராய் இருக்கிறது. பங்கஜம் நீயும் தலையசைக்க வேண்டியதுதான்! அடுத்த முகூர்த்தத்தில் கல்யாணத்தை நடத்திவிடலாம்!"

"அப்பப்பா! அவ்வளவு அவசரமா என்ன? அண்ணாவை விடுதலை செய்து அழைத்து வந்த பிறகு செய்துகொள்வோமே!"

"அப்படியானால் உனக்கு இஷ்டந்தானே?" என்றான், சங்கரன், கொள்ளை அசடு கண்களில் வழிய.

"நீங்கள் இவ்வளவு ஆசைப்படும் பொழுது நான் தடை சொல்ல மனம் ஒடவில்லை. முதல் காரியமாக நாளைக்கே சென்னை சென்று அண்ணாவை விடுவித்துக்கொண்டு வந்துவிடுங்கள்! பிறகு முகூர்த்தம் வைத்து விடலாம்!"

"நிஜமாகத்தானே! கணபதி வந்தபிறகு அவன் தடை செய்தால்?"

"நான் சமாதானம் சொல்கிறேன். உங்களை மணந்து கொள்ள எனக்கு இஷ்டம் இருக்கிறது என்றால் குறுக்கே நின்று யார் தடை செய்ய முடியும்?"

"அப்படிச் சொல்லு! பிறகு வார்த்தை பிசக மாட்டாயே!"

இங்கே பங்கஜம்மாள் குறுக்கிட்டாள். "இதென்ன, லீலா? பேசாமல் உள்ளே போ! கல்யாணம் செய்துகொள்ளும் வரையில் சும்மா இருந்துவிட்டுப் பிறகு கிணறு குட்டையில் விழுந்து வைக்கலாம் என்று நினைக்கிறாயா?" என்றாள் பதட்டத்துடன்.

"நீ பேசாமல் போம்மா! கடைசி வரையில் உன் புத்தி சாலித்தனத்தை பிரயோகிக்காதே!" என்று பங்கஜம்மாளைப் பார்த்துச் சொல்லிவிட்டு, "அதெல்லாம் இல்லை மாமா! சத்தியமாக நான் உங்களைக் கல்யாணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துகிறேன்! நீங்கள் மட்டும்......"

"இதோ! நான் நாளைக்கே பட்டணம் போய், கணபதியை அழைத்து வந்து விட்டு மறு காரியம்!" என்றான், சங்கரன்; புது இறகு முளைத்த சிட்டுக் குருவியெனத் துள்ளிப் பறந்தது அவன் மனம்!

## அத்: 25. இளவேனில்

லீலா சற்று முன் பேசி விட்டுப் போனது சங்கரனின் செவிகளில் கிண்கிணி நாதமென எதிரொலித்துக்கொண்டிருந்தது. அவன் உடலில் எங்கிருந்தோ ஒரு புதிய இளமை முகிழ்த்தது. அவனையுமறியாமல் பல சினிமா பாட்டுக்களின் முதலடிகளை வாய் முணுமுணுத்தது. சுகாஸனத்தை வீட்டு வாயிலின்முன் போட்டு உட்கார மடக்கி எடுத்துக்கொண்டு வெளியே வந்து விரித்தான். அதனுள் இருந்த, "மீண்டும் யவ்வனம்" கீழேவிழுந்து காற்றில் மலர்ந்து படபடத்தது. அதை எடுத்து கையில் வைத்துக்

கொண்டு கீழ்வானத்திலே எழுந்த இளமதியைப் பார்த்துச் சொக்கிப்போய் நின்றுவிட்டான், சங்கரன். அவன் சிந்தையிலே கொந்தளித்த இன்ப வேதனையை இளமதி உணர்ந்துதானோ என்னவோ, அது பூரித்துச் சிரித்து நையாண்டி செய்தது: "சங்கரா! இது என்ன குழந்தையின் பேதைமை? என்னைப் பார்த்துக்கூடவா உனக்குச் சிந்தை தெளியவில்லை?—ஆம்! உன்னைச்சொல்லி என்ன பலன்? உலகிலே எத்தனை எத்தனை கோடி ஆண்களும் பெண்களும் என்னை ஓயாமல் கண்டும் உண்மை உணர்ந்துகொள்ளவில்லை! நான் விண்ணிலே சஞ்சரித்துக்கொண்டே தத்துவம் போதிக்கிறேன் ஆனால் கவிஞன்கூடவல்லவா அசட்டையாக இருக்கிறான். நான் மலர்ச் சோலையிலே கண்ணுமூச்சு விளையாடுவதைக் கவிதை புனைகிறான். தெள்ளிய பளிங்கோடையிலே பரதம் ஆடுவதைப் பாடிப்பாடி, பரவசமடைந்து விடுகிறான். ஆனால் நான் சொல்கிறேன்; சங்கரா! என்னைப்பார்! நான் கீழ்வானத்திலே உன் கண்ணுக்குத் தோற்றமளித்துப் பின் முழுமதியாகி மெல்ல மெல்லத் தேய்ந்து முற்றிலும் மறைந்து சூன்யமாகி விடும்வரை கவனி! நீ வாழ்வைப் பற்றி வேறு புத்தகம் படிக்கவேண்டாம். பன்னிப் பன்னி, பழங்கதைகளைப் பகட்டிப் பிதற்றும் புத்தகங்களைக் கண்ணெடுத்தும் பாராதே! வாழ்வின் புதிரை நான் விடுவிக்கிறேன். அதுவும் பரந்த வெளியிலே, நீல விதானத்தின் கீழ், எண்ணிறந்த விண்மீன்களின் சாட்சியாக நான் வாழ்வை வியாக்கியானம் செய்கிறேன்!—உருவற்ற பிந்து மூலத்தினின்று சிறுகச் சிறுக வளர்ந்து சிசுவாகி, பிறந்து வளர்ந்து வாழ்ந்து தேய்ந்து மடிவதே வாழ்வு! யாருக்கும் முடிவு ஒன்றே!சாவு, அழிவு, சூன்யம்! எத்தனை எத்தனை சித்தர்கள்! இவர்களெல்லாரும் மண்ணிலே நித்யமாய் இருக்கமுடிந்ததா! பொந்திலே உள்ளாராம்! வனத்தில் எங்கோ புதர்களிலே உள்ளாராம்! பொதியைமீது, திருவண்ணாமலை மீது, விண்முட்டும் இமயமலையரசின் மடியிலே இருப்பாராம்! இவர்களெல்லாரும் செத்துமடிந்து மண்ணாகாமல் இருக்க முடிந்ததா! உலகிலே அன்பு, கருணை, தியாகம் என்னும் தாரக மந்திரங்களை நிலை நாட்டிய புத்தன் எப்படிச் செத்தான் தெரியுமா? —நோவாலே மடிந்திட்டான். சிலுவையிலே அடியுண்டு ஏசு செத்தான்; தீய தொரு கணையாலே கண்ணன் மாண்டான்! — ஆகவே நான் ஒவ்வொரு கணமும் அமாவாசைச் சூன்யத்தை நோக்கி விரைந்து கொண்டிருப்பதைப் போல், தான் விடும் ஒவ்வொரு மூச்சுடனே மனிதன் சாவை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறான். இதில் வேடிக்கை என்னவென்றால் நான் அந்தகாரத்தை நோக்கி ஓடுவதை அறிகிறேன்; அறிந்து, அஞ்சாமல், பதறாமல், சினக்காமல், சோர்வடையாமல், சண்டையிட்டுக் கலகமிட்டு மனம் குலையாமல் ஒரே நிதானமாகப் போகிறேன். விண்ணிலே இறுமாந்து திரியும் ..ல் தொகுதி தடை செய்த போதிலும் நான் ..ங் கொண்டு சாம்பிச் சாவதில்லை. என் கடமையைச் செய்து கொண்டுதான் போவேன்! நான் சாவை ; கண்டு அஞ்சுவதில்லை; வாழ்வையே பெரிதாகக் கருதி, சாவை மறந்து கேளித்துக் கூத்தாடித் திரிவதும் இல்லை. எட்டாத பேராசைக் கோட்டைகள் கட்டி, எட்டிப் பிடிக்க முடியாததால் மனம் உடைந்து சாவை நோக்கி விரைந்தோடுவதுமில்லை! கோள் பிசகினும், அண்ட சராசரங்கள் கதி மாறினும் என் சஞ்சாரக் கிரமம் பிசகாது. என் புற அழகைக் கண்டு பித்தேறிக் கூத்தாடும் மாந்தர்களே! நான் வாழ்வின் தத்துவத்தைத் தெளிவாக நடத்திக் காட்டுவதைக் காணீரோ!

......இப்படிப் பேசிற்றோ என்னவோ இளமதி. மதியின் மதியுள்ள பேச்சைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் மட்டும் மனிதனுக்கிருந்தால் இப் பூவுலகம் சுவர்க்கமாக மாறிவிடாதா? ஆகவே சங்கரனும் இதையெல்லாம் புரிந்து கொள்ளவில்லை. மூங்கிற் புதரினூடே எழுந்து மேலே மேலே வந்த இளமதி என்றுமில்லாத ஒரு புதிய சோபையுடன் விளங்கிற்று, அவனுக்கு. அத்துடன் லீலாவின் முகமும் கண்முன் வந்தது. மதியின் எழில் முகத்திற்கும் லீலாவின் முகத்திற்கும் ஒரே ஒரு வேற்றுமை இருந்ததாக அவனுக்குப் பட்டது. மதியின் முகம் இரவில்தான் ஒளி விடும்; பகலில் ஒளி குன்றி வெளுத்து அழகற்றுத் தோன்றும். ஆனால் லீலாவின் முகம் இரவு பகல் எப்பொழுதும் ஒளி வீசும்!

இப்படி எண்ணியபடி சுகாஸனத்தில் படுத்திருந்த சங்கரன் தூரத்தில் பார்வதி நீர் சுமந்து வருவதைப் பார்த்தான். என்றுமில்லாமல் அன்று அவள் முகம் விகாரமாய்த் தோன்றியது அவனுக்கு. அவள் நடையுடை பாவத்தில் பின்னிப் பிணைந்திருந்த கிராமியப் பண்பு கசந்தது 'அவள் எங்கே? லீலா எங்கே? அவள் பாரிஜாதம்; இவள் காசாம்பூ! இத்தனை நாள் இவளைக் கட்டிக் கொண்டு வாழ்க்கை நடத்தினேனே! நல்ல அறியாத்தனம்! அப்போதே நான் முனைந்திருந்தால் லீலாவைப்போல் ஒரு பெண்ணை மணம் செய்துகொண்டு ஓரிரு குழந்தைகளையும் பெற்றிருக்கலாம்! ஆனால் இவள் என்னவோ என்னைத் தன் வலையிலேயே உழலவிட்டுக் கொண்டு ஏமாற்றிவிட்டாள். எனக்கும் நல்லகாலம் வந்துதானோ என்னவோ, கடவுள் செயலாக லீலா இங்கு வந்துசேர்ந்தாள்; என்னைக் கல்யாணம் செய்துகொள்ளவும் ஒப்புக்கொண்டாள்! இல்லாவிட்டால் சாகும்வரை இவளைக் கட்டியழுது கொண்டே யிருந்து சாகும்போது நிலபுலங்களை எல்லாம் கோவிலுக்குத் தானமாக எழுதிவைத்துவிட்டு, செத்துப்போகவேண்டும்! நான் இருந்த இடமே தெரியாமல் என் குலம் பூண்டற்றுமறைந்திருக்கும். திருமயிலீசர் அப்படி விடுவாரா என்ன? அவருடைய கோவில் திருப்பணிகளை இடைவிடாது செய்துவரும் எனக்கு ஒருவழி செய்யாமலா இருப்பார்? என் குலத்தை நிலை நிறுத்தாமல் விடுவாரா? அவருடைய தொண்டு

தொடர்ந்து நடக்கவேண்டாமா?' என்று எண்ணினுன், சங்கரன்.

பார்வதி வீட்டை நெருங்கிக்கொண்டிருந்தாள் தென்றல் தண்ணென்று வீசியபோதிலும் எள்ளும் கொள்ளும் வெடித்த பார்வதியின் முகத்தை ஸ்வச்சமான இள நிலவிலே, துலாம்பரமாகப் பார்க்கவில்லை, சங்கரன்.

## அத்: 26. மனப் பின்னல்

அன்று இரவு சங்கரனிடம் சண்டைபிடிக்க வேண்டுமென்றே பார்வதி காமரா உள்ளில் வந்து சயனித்தாள். சங்கரன் என்னவோ இதைக் கவனித்ததாகக் காட்டிக்கொள்ளவில்லை.

'நாளை அதிகாலையில் எழுந்து சென்னை ரயிலுக்குச் செல்லவேண்டும்; சென்னைக்குப் போய், இன்ன இன்ன காரியங்களைச் செய்ய வேண்டும்; கல்யாணத்திற்காகப் பலவித சாமான்கள் வாங்க வேண்டும்; லீலாவின் அழகை மிகைப் படுத்திக் காட்டும் வண்ணப் பட்டாடைகள் வாங்க வேண்டும்! தன் தளர்ந்த நாடிகளுக்கு இளமை முறுக்கேற்றும் பலவித ஆரோக்கிய மருந்து பாட்டில்கள் வாங்கவேண்டும்!' என்று மனதுள் திட்டம் போட்டுக் கொண்டு தன்னையும் சூழ் நிலையையும் மறந்து மெத்தையின் சுக ஸ்பரிசத்திலே லயித்துக் கிடந்தான், சங்கரன்.

நீண்ட நேரம் பார்வதிக்கு உறக்கம் வரவில்லை. அன்று மாலை ஆற்றங்கரையில் நிகழ்ந்த பேச்சு வார்த்தைகள் அவள் செவியில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. லீலாவை இரண்டாந்தாரமாக மணம் செய்து கொண்டுவிட்டால் தன் கதி என்ன வாகும்? என்று கற்பனை செய்து பார்த்தாள்.

மறு மணம் செய்து கொண்டு நித்திய நரக வாழ்வு நடத்தும் பல குடும்பங்களின் கதை கண் முன் தோன்றியது.

ஊர் உலகிலே இப்படி யெல்லாம் நடக்கும் போது தன் கதி என்ன வாகும்? — இந்த எண்ணமே பார்வதியை உறக்கமின்றிப் புரளச் செய்தது, அவள் மனம் எதிர் காலத்திற்குத் தாவியது.

...மணமான புதிதில் 'லீலா! லீலா! என்று அவள் கால்களையே சுற்றித் திரிகிறுன், சங்கரன் அவளுக்குப் புத்தம் புதிய தினுசுகளில் புடவைகள் எடுத்து வந்து கொடுக்கிறுன். வாரம் இருமுறை அல்லது மூன்று முறை அவளையும் அழைத்துக் கொண்டு மாயவரம் போய்விடுகிறுன். இருவரும் முதல் வகுப்பில் உட்கார்ந்து கொண்டு சினிமா பார்க்கின்றனர். சிறு குழந்தையைப் போல் லீலாவிடம் அவன் என்ன என்னவோ வார்த்தைகளைக் கொட்டிக் கொட்டிப் பேசுகிறுன். அவள் அலக்ஷியமாகக் கடைக் கண்ணுல் அவனைப் பார்த்துப் புன்னகை செய்கிறுள். அதுவே அவனுக்குப் பேரானந்தமாக இருக்கிறது; உடல் வியர்க்கிறது! புல்லரிப்பு உண்டாகிறது!

......மணமாகி ஒரு மாதத்திற்குள் கொல்லையே பூக்குப்பை மேடாகி விட்டது. ஒவ்வொருநாளும் சுமை சுமையா கரோஜா மலர்க் கதம்பத்தைத் தலை நிறைய வைத்துக் கொண்டாள், லீலா. அவள் விரும்பாவிட்டாலும் சங்கரன் அவளை வற்புறுத்திச் சூட்டி விட்டான். அவனுடைய பண்ணை ஆட்களில் ஒருவன் தினம் மாயவரம் சென்று வருவான். பிரத்தியேகமாகத் தொடுத்து வைத்திருக்கும் ரோஜா கதம்பத்தையும் முல்லை மலர்களையும் வாங்கி வருவது இவன் வேலை.

பந்து பந்தாக முல்லை மலர் வந்தது. தினம் மெத்தை முழுவதும் முல்லை மலர் பரப்பப்பட்டிருக்கும். மலரின் மணம் வீடு முழுவதும் பரவும். சங்கரனின் சயன அறையுள் நுழைந்தாலேதலைவலி வரும்படியான அவ்வளவு மணம்,

இப்படி வீடு முழுவதும் வீசிய சுகந்த மணம் பார்வதியின் உள்ளத்தைக் கிளறிவிட்டது; அவள் பெண்மை மணத்தின் லாகிரிக்கு எதிரொலித்தது; விரகவேதனை மேலிட்டது. சங்கரனும் லீலாவும் சந்தோஷித்துச் சுகித்திருக்கும் போது பார்வதியின் உள்ளம் வேதனையால் வெந்தது; உடல் விரகதாபத்தால் பசலை பூத்தது!

......இப்படியாக நாட்கள் சென்றன. லீலாவின் அழகிலே மயங்கிக் கிடந்த சங்கரன் தலை கால் தெரியாமல் செலவு செய்தான், தன் அழகிய மனைவியை மாடுபூட்டிய வில்வண்டியில் ஏற்றிச் செல்ல மனம் ஒப்பவில்லை. ஒரு புதுக்கார் வாங்கினுன். திருமயிலாடிக்குக் கார் வந்த பிறகு அவன் நடத்திய நாடகம் ஏட்டில் அடங்குமா என்ன? மாலைவேளை எப்போது வரும்? என்று காத்திருப்பதும் பிறகு—ராணி வேஷம் நடிக்கக் கிளம்பும் நக்ஷத்திரத்தைப்போல் —'சர்வாபரண பூஷிதையாய்' அலங்கரித்துக்கொண்டு கிளம்பும் லீலாவைக் காரில் தன் பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு மாயவரம் சென்றுவிடுவான். படக் காட்சிகளையும் இதர கேளிக்கைகளையும் முடித்துக்கொண்டு தம்பதிகள் இருவரும் வீடு திரும்ப நடுநிசிக்கு மேலாகிவிடும்! ஆடி அமர்ந்து வீடு வந்து சேரும் கோலத்தைக்காணப் பார்வதி மனக் காய்ச்சலுடன் காத்திருப்பாள்!—இதைத் திருமயிலாடி முழுதும் அதிசயித்தது. 'தேவாரத்தார் வீடும் இப்படி சினிமாக் கொட்டகையாக மாறுமா? இதுவும் கலிகாலக் கூத்துத்தான்!' என்று பேசிக்கொண்டனர். பார்வதிக்கு வெளியே கிளம்ப லஜ்ஜையாய் இருந்தது.

இப்படியெல்லாம் பணத்தை வாரி இறைப்பதற்கு இவ்வளவு பணம் சங்கரனுக்கு எங்கிருந்து வந்தது? என்று ஆச்சர்யப்பட்டாள், பார்... பிறகு ஊரார் பேச்சு இலேசா...

விழுந்தது. கடன்காரர்கள் வீடெறியும் கடன் கேட்க ஆரம்பித்து விட்டனர். திருமயிலீசர் தேவாலயத்தின் தர்மகர்த்தா என நீண்ட நாள் கோவில் பூஜையாக இருந்தான் சங்கரன். அது சமீபத்தில் அம்பலத்திற்கு வந்து விட்டது. சுவாமிக்குச் சொந்தமான பூர்வீக நகைகள் சிலவற்றைக் காணவில்லை; கோவிலுக்குச் சொந்தமான உண்டியல் பணத்தில் ஐந்நூறுக்குமேல் கையாடிவிட்டான் என்பதாக ஊர்ப் பொதுவார் சங்கரன் மேல் வழக்குத் தொடர்ந்தனர்.

......கடன்காரர்கள் எல்லோரும் ஏககாலத்தில் நெரித்தனர். சங்கரன் கொடுக்கும் வகையறியாது தவித்தான். லீலாவின் நகைகளை எல்லாம் விற்றான். காரை வந்த விலைக்குத் தள்ளினான். நிலம் வீடு இவைகளையும் விற்றான். கடைசியில் சாப்பாட்டுக்கே தவிக்கும் நிலை வந்துவிட்டது!

......இந்தச் சமயத்தில் திருமயிலீசர் கோவில் சொத்தைக் கபளீகரம் செய்துவிட்ட குற்றம் ருசுவாகி நீதிபதி தீர்ப்புக் கூறிவிட்டார். அரஸ்ட் வாரண்டுடன் போலீஸார் வந்து வீட்டுத் திண்ணையின் மீது உட்கார்ந்து சங்கரன் இருக்காரா? என்று பார்வதியைக் கேட்டனர். ......சங்கரன் மேல் எவ்வளவு கோபம் இருந்தபோதிலும் அந்நிலையில் அவள் கண்களில் நீர் துளித்துவிட்டது, சங்கரனின் சயன அறையை நோக்கிப் போனாள்.

அறையுள் அவள் கண்ட காட்சி மயிர் கூச்செறியும்படியாக இருந்தது. தலைவிரி கோலமாய், இரத்த வெள்ளத்தூடே கோரக் காயங்களுடன் லீலா செத்துக் கிடந்தாள். சங்கரன் தன் கழுத்தில் சுருக்கை மாட்டிக்கொண்டு ஏறி நின்றிருந்த ஸ்டூலை விட்டுக் கீழே குதிக்கப் போனான்!

## அத்: 27. தூக்கம் கலைந்தது.

பார்வதிக்குத் தூக்கிவாரிப்போட்டது. ஏதேதோ உளறிவிட்டாள். உடல் முழுவதும் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. தூக்கம் கலைந்தது. எரிந்துகொண்டிருந்த பெட்ரூம் விளக்கு வெளிச்சத்தில் தன் அறை முழுவதையும் சுற்றிப பார்த்தாள். கண்களை கசக்கிவிட்டுக்கொண்டு அறையைவிட்டு வெளியே வந்து முற்றத்தில் உட்கார்ந்தாள்.

வானத்தில் சூழ்ந்திருந்த இருட்படலத்தினூடே தாரகைகள் வைரங்களைப்போல் ஜ்வலித்தன. அவள் கண்முன்னே கனவின் நிகழ்ச்சிகள் அகலாது நின்றன.

'கண்டது முழுவதும் கனவுதானா? அல்லது நடக்கப்போகும் உற்பாதத்தை அறிவிக்கும் சூசகமா?'—'கனவில் கண்ட சம்பவங்கள் நடக்கலாம், அல்லது நடக்காமல் போகலாம். ஆனால் மறுமணம் ஆனதும் இவர் பணத்தை வாரி இறைத்துச் செலவு செய்யமாட்டார் என்பது என்ன நிச்சயம்? இவ்வளவு நாட்கள் தேனீயைப்


குழந்தைகளுக்கு
இன்றியமையாத
டானிக்
டோங்ரேயின் பாலாம்ருதம்
K. T. டோங்கரே அண் கோ., பம்பாய்-4.

போல் உழைத்து மிச்சம்பிடித்து வைத்திருக்கும் பணத்தை எங்கிருந்தோ வந்தவள் அனுபவிக்க நான் நடுத்தெருவில் நிற்பதா?'

இந்த மனேநிலை வந்தவுடன் தன் கணவர் பெட்டியுள் ரொக்கமாக எவ்வளவு பணம் சேமித்து வைத்திருக்கிறார் என்று பார்க்கவேண்டுமென்கிற ஆசை பார்வதிக்கு எழுந்தது.

முன்பெல்லாம் அவள் அதைப்பற்றி நினைப்பதில்லை. 'சேர்த்து வைக்கட்டும்; எல்லாம் எங்கே போகிறது? எனக்குத்தானே!' என்று நினைத்துக் கொண்டிருந்தாள். ஆனல், இப்போது பணம் பறிபோகப்போகிறது என்ற ஆதங்கம் உண்டானவுடன் பணத்தைப் பார்க்கவேண்டும் என்று எண்ணம் உண்டாயிற்று.



எழுந்து மீண்டும் காமரா உள்ளுக்குச் சென்ருள். சங்கரன் நன்ருகத் தூங்கிக்கொண்டிருந்தான். அவன் தலையணைக்கடியில் இருந்த சாவிக் கொத்தை எடுத்துக்கொண்டு பூஜையறையுள் நுழைந்தாள், பார்வதி.

பெட்டி இருப்பது தெரியாமல் இருப்பதற்காக சுவரோடு சுவராக மாட்டியிருந்த பெரிய முருகன் படத்தைக் கழற்றிக் கீழே வைத்தாள். சுவரில் புதைத்திருந்த இரும்புப் பெட்டியைத் திறந்தாள். பெட்டியுள் கத்தை கத்தையாகப் பத்துரூபாய் நோட்டுக்களாக இருந்தன. கட்டுக்களை எடுத்து எண்ணிஞள். நூற்றைம்பது கட்டுகள் இருந்தன. ஒவ்வொரு கட்டும் நூறு ரூபாய்க் கட்டுகள்!

'இவ்வளவு பணமும் லீலாவுக்கு! அவளுக்குப் பிறக்கப் போகும் குழந்தைக்கு! தனக்கு ஒன்றுமில்லை! இருக்கும்வரை சாப்பாடும் துணியும் உதாசினமுந்தான்!'

'அப்படி விடுவேனே என்ன? என் பெயர் பாரவதி என்பதைக் காட்டி விடுகிறேன்!"

அந்த நோட்டுக் கத்தைகளை எல்லாம் தன் மடியில் வைத்துக் கட்டிக் கொண்டாள். பெட்டியின் கதவைப் பூட்டி முன் போலவே படத்தை எடுத்து மாட்டப் போனுள். பின்பு ஏதோ நினைத்துக்கொண்டு படத்தைக் கீழேயே வைத்துவிட்டு, பெட்டியை மறுபடியும் திறந்தபடியே இருக்கும்படி விட்டுவிட்டாள். மடியில் கனத்த பணக் கட்டுகளுடன் சமையலறையை அடைந்து அவைகளை ஒரு பானையுள் போட்டு மேலே அரிசியைக் கொட்டி மூடி விட்டாள்.

அவள் மனம் படபடவென அடித்துக்கொண்டது. மறுபடியும் முற்றத்திற்கு வந்து உட்கார்ந்தாள்.

குடியானத் தெருவின் எ[illegible]கோ ஒரு மூலையிலிரு[illegible]து ஜாமக் கோழி கூவியது. அதைத் தொடர்ந்து

ஒரு ஒற்றை நாய் கர்ண கடூரமாய் அழுதது. ராஜபாட்டை ரோட்டிலே தஞ்சாவூரை நோக்கிச் சென்ற கட்டை வண்டி கட கடா வென ஆடியசைந்து அதன் அழுகைக்குத் தாளம் பிடித்தது.

பிள்ளையார் மூலையிலே இருந்த சுடுகாட்டில்புகை எழுந்து கொண்டுதான் இருந்தது. சிதைகள் நன்ருக மலர்ந்து எரிந்து கொண்டிருந்தன. டுப் டுப் பென்று வெடிக்கும் சப்தங்கள் அதிகமில்லை. வெட்டியான் வேம்பு குறட்டை விட்டுத் தூங்கும் சப்தம் விடாது ஒலித்த சுவர்க் கோழிகளின் சப்தத்தினூடே கலந்து பெருகி ஏகோபித்தது. திருமயிலீசர் கோவில் பிராகாரத்தில் சிறைகாத்த சில்லறைத் தெய்வங்களின் முன்னிருந்த தீபங்கள் ஒவ்வொன்ருக எரிந்து கருகி, செத்துக் கொண்டிருந்தன. மூல விக்கிரகத்தின் முன்னிருந்த தூங்கா விளக்கு அங்கே சூழ்ந்திருந்த இருளை மிகைப் படுத்திக் கொண்டு நிலைத்து எரிந்து கொண்டிருந்தது.

பார்வதி சந்தடி செய்யாமல் வாசல் கதவைத் திறந்து வைத்தாள். கழுத்திலிருந்த இரட்டை வடச் சங்கிலியைக் கழற்றி, தன் பலங் கொண்ட மட்டும் இழுத்து அறுத்தாள். மறுபடியும் காமரா அறையுள் புகுந்து பெட்ரூம் விளக்கை அணைத்தாள். பிறகு, "ஐயோ! திருடன்! திருடன்! விடாதே! பிடி!" என்று பலமாகக் கூச்சல் போட்டாள்.

## அத்: 28. திருடன்.

சங்கரன் திருக்கிட்டு எழுந்து பூஜையறையுள் ஓடினுன். துளசி மாடத்திலிருந்த வத்திப் பெட்டியை எடுத்து, குத்து விளக்கை ஏற்றினுள். முருகன் படம் கீழே கிடந்தது. வாய் பிளந்து கிடக்கும் முத்துச் சிப்பியைப் போல் அது வெறுமையாய்த் திறந்து கிடந்தது. சங்கரன் வயிறு பகீரென்றது. "திருடன்! திருடன்! விடாதே! விடாதே!" என்று கத்திக்கொண்டு தெருவை நோக்கி ஓடினுன். அக்கம் பக்கத்து ஜனங்கள் சூழ்ந்து விட்டனர். "எங்கே? எந்தப் பக்கம் போனுன்? எப்படியிருந்தான்! விடாதே, பிடி!" என்று சொல்லிக்கொண்டு சங்கரனைச் சூழ்ந்து கொண்டனர்.

"தெருப்பக்கந்தான் ஓடினுன். என் கழுத்துச் சங்கிலியைக் கத்தரித்த போது நான் விழித்துக் கொண்டேன். அவன் கையைப் பலமாகப் பிடித்துக் கொண்டேன். கட்டைத் துண்டாட்டம் இருந்த அவன் கையை உதறிக் கொண்டு ஓடி விட்டான்! ஓடுங்கள்! சீக்கிரமாகப் போங்கள்! ஆற்ருேரத்தில் இருக்கும் சவுக்குத் தோப்புப் பக்கந்தான் போயிருப்பான்!" என்று சொன்னுள், பார்வதி. எங்கிருந்தோ அப்போது சிறந்த நடிப்புத் திறமை வந்து விட்டது அவளுக்கு.

கையில் அரிக்கேன் விளக்கும் தடியும் அ...
வாளுமாக ஆற்றங்கரையை ... ...க்க ...வுக்குக்
... ...ோக்கி எ...

* * *

தேவாரத்தார் வீட்டில் திருட்டுப் போன
செய்தி கிராமம் முழுவதும் ...
பரவி விட்டது. பலர் பலவிதமாகப்...
கொண்டனர்.

கனகம் சொன்னுள்: "ஊர் த...
அறுத்துச் சம்பாதித்த பணம் இப்ப...
போகும். இனி மேலாவது பண்ணையாட்...
சரியாகக் கூலியளக்கட்டும். சாமி! சாமி...
இச்சகம் பேசிக் கொண்டு, சாமி செ...
கொள்ளையடிக்காமல் இருக்கட்டும். கல்...
தானே! அது என்ன செய்யப் போகிற...
எண்ணம் போகட்டும்!" என்று.

## அத்: 29. கடிதம்.

பணம் களவு போனது லீலாவுக்குப் பெருத்த...
ஏமாற்றத்தை அளித்தது. அண்ணவை விடு...
விக்க அவள் நம்பியிருந்த ஒரே சாதனமும் கை...
நழுவிற்று 'இனி அண்ணு மூன்று மாதம் முடிய...
சிறை வாசம் செய்ய வேண்டியதுதான்! ஆ! அவ...
எவ்வளவு மனம் நெகிழ்ந்து கடிதம் எழு...
யிருந்தான்! அவன் வைர மனமுமல்லவ...
குலைந்து போயிற்று! உடலும் உளமும் ...
குலைந்து எந்த நிலையில் அவன் சிறையினின்று...
வெளி வருவானே! வாழ்வையே வெறுக்கும் ஓ...
விரக்தி மனே நிலை உண்டாகி விட்டால்? அவ...
எதிர் கால வாழ்வு, வெறும் பாலைக் கா...
வெளியிலே நடக்கும் நாடோடியின் மன...
போல், ரசனையற்றுப் பற்றற்று அல்லவா போ...
விடும்! அவன் லக்ஷியவாதி! தன் எதிர் கா...
வாழ்வை எண்ணி, என்னென்ன மனக் கோ...
டைகள் கட்டியிருந்தானே! எல்லாம் க்ஷ...
நேரக் கோபத்தால் தரைமட்டமாய் விட்டது...
—லீலா அதையெல்லாம் எண்ணி வேதனை...
பட்டாள்.

ஆகாயத்தில் சுழன்று சுழன்று வட்டமிடு...
பருந்து மேக நிழலில் ஆசுவாசம் கொள்வதை...
போல் பலவித எண்ணத்தில் குழம்பிய ...
ளுக்குச் சிவஞானத்தின் கடிதம் ஞாபகத்தி...
வந்தது.

பங்கஜம்மாள் முன்பே அதைச் சங்கரனி...
மிருந்து வாங்கிய போதிலும், பின் உண்டா...
மனக் குழப்பத்தில் லீலாவிடம் கொடுக்க வில்...
இப்போது கேட்டதும் எடுத்து...
கொடுத்தாள்.

நீண்ட நாளாக அஞ்ஞாத வாசம் ...
கடிதத்தைக் ...யில் பெற்றதும் ...
உடலில் ஒரு ...ச்சி...
படிச்...
ப...

நிமிர்ந்து உட்கார்ந்து எழுத முடிந்த அந்த நிலையில் உனக்கும் உன் அண்ணுவுக்கும் என் அன்பின் நினைவாக ஏதேனும் செய்துவிட்டுப் ... வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. ... மனைவியாக வாய்த்து என் அன்புக்குப் ...ய் இருந்த உன் தாய் என்னைவிட்டு ...தா விலகிவிட்டாள். 'என் மனைவி' ...ளரவ ஸ்தானத்திலிருந்து எப்போதோ அப்புறப் படுத்தி விட்டேன். ஹிந்து ...ஸ்திரங்கள் பல விதங்களில் இருப்பது ...வ இந்த ஒரு நிலையிலும் தவிர்க்க முடியாத ... இருக்கிறது. நான் அவளை மனதார ... போதிலும் அவளுடன் வாழ வேண்டித் ...ருந்தது. அண்ணனின் தூண்டுதலின் ...அட்டையைப்போல் அவள் என் இதய ...த உறிஞ்சி, குடும்பத்தை உருக்குலைத்த ...போதிலும், நான் ஒன்றும் தெரியாதவனைப்போல் குடும்பத்தை நடத்திச் செல்ல வேண்டியிருந்தது.

கணவன் என்ற என் அதிகாரத்தை உபயோ...த்து நான் ஏன் உன் அம்மாவை சீர்திருத்தி ...ருக்கக் கூடாது? என்று நீ வினவலாம்! நான் ...வளைச் சீர்திருத்த முனைந்திருந்தால் நிலைமை ...ன்னும் கேவலமாகப் போயிருக்கும். ...டும்பத்தில் எங்கள் இருவரிடையே மனக்கசப்பு ...திகமாகி, பரஸ்பரம் வெளிப்படையாக ...வெறுக்கும் நிலை வந்திருக்கும். அதன் பலா...லன்களைக் குழந்தைகளாக இருந்த நீங்கள் அனு...பிக்க வேண்டி வந்திருக்கும்!

...கவே, என் வாழ்வு, ஓட்டைக் குடத்திலே ...டன் நீர் நிரப்ப முயற்சித்த கதையாக முடிந்து ...டது!

...எனக்குத் தெரியும். சங்கரன் வஞ்சக எண்ண...ம் உருவானவன். அவனிடம் சென்ற பணம் ...னை வாயில் அகப்பட்ட கரும்பைப் போலத் ...ன். அதைப் பங்கஜம் தானே அறிந்து கொள்...ள்' தன் தவற்றை எண்ணிக் கண்ணீர் விடுவாள். ...ப்போது தான் அவள் உள்ளம் புனித...டையும்..........

...பங்கஜம்மாள் பதை பதைத்தாள். "கொண்ட ...ருஷனுக்கு இரண்டகம் செய்த என் உள்ளங் ...ப் புனித மடையுமா? செத்துச் சாம்பலாகி, ...தச் சாம்பல் உரமாகி, புல்லாக முளைத்து, பசு...யுள் போனால் தான் அது புனிதமாகும்!" ...று சொல்லிப் பெருமூச்சு விட்டாள்.

... தொடர்ந்தாள். "......உங்கள் எதிர் ...வை நினைத்த பொழுது எனக்கு மன ...லை. ஆனால் உன் ... உன் கணபதி ... விட்டுப் ... ன். ...

...ணுகவே எண்ணியுள்ளேன். அவன் உன்னை உயர்ந்த பண்புள்ள தங்கையாக்கி, தக்க இடத்தில் மணம் செய்து கொடுப்பான்.

இத்துடன் கணபதியின்மீது இன்னும் ஒரு பெரிய பாரத்தைச் சுமத்திவிட்டுப் போகிறேன். எனக்கு இன்றைய தேதியில் பத்தாயிரம் ரூபாய் கடன் இருக்கிறது! குடும்பத்தில் ஒருவிதப் பற்றும் இல்லாது வாழ்ந்த நான் பணத்தைப் பல விதங்களில் வாரியிறைத்து விட்டேன்.

ஆனால் கடனுக்கு ஒரு வழி செய்திருக்கிறேன். என் ஆயுள் இன்ஷூரன்ஸ் தொகையாகிய பத்தாயிரம் ரூபாயையும் உங்கள் இருவர் பேரிலும் சமமாக எழுதிவைத்திருக்கிறேன். அதை வாங்கிக் கடனை அடைத்து விட்டுக் உங்கள் பலத்தைக் கொண்ட வாழ்க்கை நடத்த முயலுங்கள். அம்மாவையும் சங்கரனையும் நம்பாதீர்கள். உங்கள் இருவருக்கும் உரிய என் கடமையைச் செய்யத் தவறிவிட்டதற்காக மன்னியுங்கள். கடவுள் உங்களுக்குத் துணை புரிவார். அன்பான ஆசீர் வாதங்கள்.

உங்கள் அன்புள்ள அப்பா,
சிவஞானம்.

## அத்: 30. விடுதலை.

கடிதத்தைப் படித்து முடித்ததும் தன் கண்களில் தளும்பிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள், லீலா. 'இந்தக் கடிதம் அப்போதே கிடைத்திருந்தால் எவ்வளவு மன ஆறுதல் இருந்திருக்கும்! அண்ணுவுக்கும் குடும்ப நிலை உள்ளது உள்ளவாறு தெரிந்திருக்கும். திடீர் திடீரென்று கடன்காரர்கள் தோன்றி அவன் மன நிலையைக் குலைக்கும்படி நேர்ந்திருக்காது. சிறைக்குப் போவதற்கான சம்பவமும் நிகழ்ந்திருக்காது.

இந்த அம்மாவிற்கு அப்பா செத்த பிறகும் அவர் மேஜையைச் சோதனையிடும் சபலம் போகவில்லை! அவளுக்கு வாய்ந்த அண்ணுவும் அருமையான அண்ணு!' என்று எண்ணிப் பெருமூச்சு விட்டாள்.

வழக்கை உள்ளது உள்ளபடி உணர்ந்து தீர்ப்புச் சொல்லும் நீதிபதியின் முன் தலை கவிழ்ந்து நிற்கும் குற்றவாளியைப்போல் தலை குனிந்து உட்க்கார்ந்து விட்டாள், பங்கஜம்மாள்

தன் பெயருக்குப் பாதிப் பணம் எழுதி வைத்திருக்கிறார், அப்பா! என்பதை அறிந்தவுடன் லீலாவுக்குப் புதிய உற்சாகம் உண்டாயிற்று. 'நன்றாகச் சொன்னேன்! 'அண்ணு விடுதலையாகி விட்டால் போதும்!' என்ற ஆதுரத்தில் எதுவும் எனக்குப் பெரிதாகப் படவில்லை. வேடிக்கை! சங்கரன் மாமாவை நான் மணந்துகொண்டு வாழ்க்கை நடத்தவாவது! என் சிநேகிதிகள் யார் ...திலே...ம் எட்டினால் விழுந்து விழுந்து சிரிப்பார்கள் ... வர் பணம் அவரி...